# திருவானைக்
# காவல்
# மாஹாத்மியம்

கும்பகோணம் ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள்
அவர்கள் ஸ்ரீமடம் ஆஸ்தான
வித்வான் மஹோபதேசக
கவிரத்னம் ப. பஞ்சாபகேச
சாஸ்திரிகள் அவர்களால்
ஸம்ஸ்க்ருதபுராணத்திலிருந்து
தமிழ் வசனரூபமாக மொழி
பெயர்க்கப்பட்டது.

ஸ்ரீரங்கம்,
ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.
1932.

ஸ்ரீ குருசரணாரவிந்தாப்யாம் நம:

# திருவானைக்காவல் மாஹாத்மியம்.



கும்பகோணம் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீமடம் ஆஸ்தானவித்வான்
மஹோபதேசக கவிரத்னம்
ப. பஞ்சாபகேச சாஸ்திரிகள் அவர்களால்
ஸம்ஸ்கிருதபுராணத்திலிருந்து தமிழ் வசனரூபமாக
மொழிபெயர்க்கப்பட்டது.

ஸ்ரீரங்கம்,
ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
1932.

# விஷய அட்டவணை.

7 ஜம்புமஹரிஷியினுடைய தபஸ்ஸித்தியும் தேவியானவள் தவம் செய்யவேண்டி இந்த க்ஷேத்திரத்திற்கு வந்தாள் என்பதும் கூறப்படுகின்றது.

8 பார்வதிதேவி இந்த க்ஷேத்திரத்தை யடைந்து ஜலத்தை லிங்கமாகச்செய்து பக்தியுடன் பூஜித்தாள் என்று சொல்லப்படுகின்றது.

9 ஈசுவரரால் பிர்ம்மாவின் பொருட்டுச் சிறந்த வரனும் ஸ்ரீபார்வதியின் பொருட்டுப் பல வரன்களும் கொடுக்கப்பட்டனவென்று அறிவிக்கப்படுகின்றது.

10 ஸ்ரீராகவன் கும்பகர்ணவதத்தாலுண்டான தோஷத்தைப் போக்கவேண்டி இங்கு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார் என்று கூறப்படுகின்றது.

11 ஸ்ரீராமர் பரமசிவனை வேதவாக்கியங்களால் துதிக்கின்றார்.

12 விசுவாமித்திரர் ராக்ஷஸனை வதம் செய்யவேண்டி ஒரு வேள்வியைத்துவக்கி ஈசுவரனால் யாசிக்கப்பட்டவராய்க்கொண்டு அவனைக் கொல்லாமல் விடுகின்றார்.

13 ஸ்ரீரங்கநாதர் விபீஷணரின் பொருட்டுச் சிவபக்தியையும் கஜாரண்ய வைபவத்தையும் ஸ்வப்னத்தில் கூறுகின்றார்.

14 ஸ்ரீரங்கேசர் காவேரீ சோளதேசம் சிவன் விஷ்ணு இவர்கள் இவர்களுடைய க்ஷேத்திர வைபவங்கள் இவைகளை போதிக்கின்றார்.

15 ஸ்ரீபரமாத்மாவால் ஏவப்பட்ட அகஸ்தியர் இந்தக்ஷேத்திரத்தையடைந்து ஸ்ரீஜம்புநாதரையும் அவர்பத்நியை

யும் உபாஸித்து மலயபர்வதம் சென்றார் என்று சொல்லப்படுகின்றது.

16 இந்திரன் இங்கு வந்து தவம் புரிந்து ஜம்புநாதருடைய பிரஸாதத்தால் விருத்ராஸுரவதத்தாலேற்பட்ட தோஷத்தைப் போக்கினன்.

17 வெண்மையான சிறந்த யானை ஸர்வேசுவரான பகவானைப் பூஜித்ததென்று கூறப்படுகின்றது.

18 யானையும் சிலந்திப்பூச்சியும் பகவானைப் பூஜித்து முடிவுகாலத்தில் ஜம்புநாதருடைய பிரஸாதத்தைப் பெற்றன.

19 ஸூதர் யானைக்கும் சிலந்திக்கும் இவ்வித ஜன்மாவேற்பட்டதற்குக் காரணமான சாபத்தை அறிவிக்கிறார்.

20 பரமேசுவரரால் நந்திகேசருக்குக் கூறப்பட்ட பிர்ம்மேசருடைய வைபவத்தை ஸூதர்சொல்லுகின்றார்.

21 திரேதாயுகத்தில் பிர்ம்மேசர் என்கிற சங்கரரைத்தவத்தால் கௌதமர் உபாஸித்து அவருடைய அநுக்கிரகத்தால் தம் பத்நியான அகல்யையையடைந்தார்.

22 ராவணனால் ஹிம்ஸிக்கப்பட்ட குபேரன் இங்குதவம் செய்து ராஜராஜேசுவரர் என்கிற லிங்கத்தைப்பிரதிஷ்டைசெய்து ஸுகத்தையடைந்தான்,

23 சோணாக்ஷசோளன் சங்கரரால் போதிக்கப்பட்டவனாய்க்கொண்டு கண்டகீசிலையால் உண்டான விமானத்தைக் கொண்டு வந்தான்,

24 சேரன் முதலான அரசர்கள் இந்த ஆலயத்தினுடைய பிராகாரம் மண்டபங்கள் முதலியவைகளைக் கட்டினார்

கள், விபூதிப்பிராகாரத்தைச் சிவனே ஸ்வயமாகக்கட்டினார்.

25 சோணாசூட அரசனால் பூஜார்த்தம் வைக்கப்பட்ட பண்டிதர்கள் பரமேசனால் காவேரீப்பிரவாகத்தில் முழுகும்படி செய்யப்பட்டார்கள்.

26 பஞ்சப்பிராகாரங்களுடைய மாகாத்மியமும் ஜம்புநாதர் அகிலாண்டேசுவரி இவர்களுடைய வைபவமும் பிரம்மோத்ஸவமும் கூறப்படுகின்றன,

சுபம்.

உ

# திருவானைக்காவல் க்ஷேத்திரத்தில் நடைபெறும் உத்ஸவங்களின் விபரம்.

---

சித்திரை மீ சைத்ரோத்ஸவம் சித்திரை மீ சுக்லஷஷ்டி முதல் 10 நாள்

வைகாசி மீ வஸந்தோத்ஸவம் வைசாக சுக்லஷஷ்டி முதல் 10 நாள் விசாக நக்ஷத்திரத்தில் பால் மாங்காய் நிவேதனம்

ஆனி மீ உத்ஸவம் உத்திர நக்ஷத்திரத்தில் ஜ்யேஷ்டாபிஷேகம் ஆனித்திருமஞ்சனம்

ஆடி மீ ஆடிப்பூரோத்ஸவம் பாணியில் ஆரம்பம் செய்து 9 நாளான பிறகு 10 நாள் ரதோத்ஸவம் பூர நக்ஷத்திரத்தில் அவபிருதமும் ஹஸ்தத்தில் தெப்பமும் நடைபெறும்

28-ம்படி உத்ஸவம்

ஆவணி மீ பவித்ரோத்ஸவம் 10நாள் பௌர்ணமியில் முடிவு ஆவணிமூலம்

புரட்டாசி மீ நவராத்திரி உத்ஸவம்

அர்ப்பிசி மீ ஸ்கந்தஷஷ்டி பாணியில் சிறுத்தொண்டோத்ஸவம்

கார்த்திகை மீ கிருத்திகோத்ஸவம் அம்பாள் சீர்வகையாவும்

மார்கழிமீ ஆர்த்ரோத்ஸவம் 10நாள ட பாவாடை மகா வ்யதீபாதத்திலும் பாவாடை

தைமீ உடுபோத்ஸவம் (அதாவது தெப்போத்ஸவம் சதபிஷக்நக்ஷத்திரத்தில் ஆரம்பம் திருவாதுரையில் அவபிருதம் புனர்பூசத்தில் தெப்போத்ஸவம் புஷ்யோத்ஸவம் தீர்த்தம்)

மாசிமீ பிர்ம்மோத்ஸவம் மாகசுத்தபிருகசிர்ஷநக்ஷத்திரத்தில் துவஜாரோகணம் ரேவதியில் மஹாரதோத்ஸவம் பால்குனசுத்த ரோகிணீநக்ஷத்திரத்தில் அவபிருதம் பிர்ம்மதீர்த்தத்தில் நடக்கும் அவபிருதத்திலிருந்தும் 10நாளில் பஞ்சப்பிராகார உத்ஸவம்

சிவராத்திரி உத்ஸவம்

சித்திரைவருஷப்பிறப்புக்கு வ்ருஷபவாகனத்தில் தீர்த்தவாரி

| | | |
|---|---|---|
| கடகஸங்க்ரமணத்திற்கு | ஷை | ஷை |
| ஆடி அமாவாசைக்கு | ஷை | ஷை |
| தைமீ ஸங்க்ரமணத்திற்கு | ஷை | ஷை |
| தைமீ அமாவாசைக்கு | ஷை | ஷை |

ஞானக்ஷேத்திரங்களுக்குள் முக்யமாயும் சீக்ஷிரமாகத் தபஸ்ஸித்தியை யளிப்பதில் சிறந்ததாயும் விளங்கும் இந்த க்ஷேத்திரத்தை அனைவரும் அடைந்து பகவானைத் தர்சிக்க வேண்டியது அவச்யமென்று யாவருமறிந்த விஷயமே. ஷை ஸ்தலத்தில் காலை 6மணிமுதல் இரவு அர்த்தயாமபூஜை முடியும்வரையில் ஸேவார்த்திகள் எந்தஸமயமும் தர்சனம் வந்தனம் அர்ச்சனம் முதலானவைகளைச்செய்து பகவதனுக்கிரகத்தைப் பெறலாம்.

உ

சுபம்.

# முகவுரை.

जाम्बूनदाद्रिनिलयामरबृन्दवन्द्य
  जम्बूमुनिप्रभृतितापससेव्यमान ।
जम्बालिनीतटविहारकृतादरेश
  जम्बूपते तव भजे चरणं शरण्यम् ॥

अपि च

लोकस्सर्वो भजतु लषितं दर्शनात्स्वीयमूर्ते-
  रित्याजानप्रथितकृपया याऽम्बिका शैलपुत्री ।
पुण्यक्षेत्रे विलसति सदा जम्बुनाथस्य शंभोः
  देवी पायान्महितचरिता साऽखिलाण्डेश्वरी नः ॥

உலகில் ஈசுவரனால் ஸிருஷ்டிக்கப்பட்ட பிராணிகள் பலவிருப்பினும் அவைகளுக்குள் மானிடஜன்மாவே மிகச்சிறந்ததென்று சான்றோர் சாற்றுகின்றனர். அதற்குக்காரணம் அறிவின்சிறப்பேயன்றி வேறுயாதும் கூறுவதற்கில்லை. இவ்வித அரிய அறிவைப்பெற்றநம்போன்றவர்கள் ஸம்ஸாரமென்கிற பெரியகடலிலமிழ்ந்து படும்கஷ்டங்களை அறவேபோக்கி நித்யமான சுகத்தைப் பெறுவதற்குற்ற ஸாதனங்களை யனுஷ்டிக்க முயற்சிக்கவேண்டியது முக்கியம். அவ்விதஸாதனம் எதுவென்று நன்கறியக்கூடிய சக்தி நமது சிற்றறிவிற்கில்லாவிடினும் நம்முடைய க்ஷேமத்தைக் கருதியே அறிவிற்சிறந்தவர்களான நம்முன்னோர்கள் அச்சாதனத்தை வெளி

யிட்டிருக்கிறார்கள். அஃதியாதெனில் பக்தி என்பதேயா கும். இவ்விதமே ஸ்ரீமத்பாகவதம் முதலான கிரந்தங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. அந்தபக்தியில் பலவிதப்பிரிவுகளி ருப்பினும் சிரவணம் என்பதையே முதன்மையாகச் சொல்லி யிருக்கிறார்கள். இதுவும் ஸ்ரீபாகவதத்தில் பிரஸித்தம். சிர வணமென்றால் பகவானுடைய குணகணங்களையும், சரித்திர ங்களையும் வெளியிடும் கிரந்தங்களைத் தாமாவோ பண்டிதர் கள் மூலமாகவோ அறிவதேயாகும். இதினால் பகவானிடத் தில் நாம் எதற்காகப் பக்திசெய்யவேண்டும் நமதிஷ்டத்தை அவர் செய்வாரா என்று பலவாராக மந்தாதிகாரிகளுக்குத் தோன்றும் சங்கைவிலகி பகவானை ஆராதிக்கவேண்டுமென் று அதிகமான சிறத்தையுண்டாகும். இதற்காகவே கருணா நிதிகளான நம்மஹரிஷிகள் அநேக க்ஷேத்திரங்களின் வாயி லாக பகவானுடைய சிறந்த சரித்திரங்களைப் புராணங்கள் முதலான நூல்களால் வெளியிட்டிருக்கிறார்கள். அவ்வி தம் வெளியிடப்பட்ட நூல்களில் கஜாரண்ய மாஹாத்மியம் (திருவானைக்காவல் மாஹாத்மியம்) என்பதும் ஒன்றாகும். இத்தென்னிந்தியாவில் விளங்கும் அநேக புண்யக்ஷேத்திர ங்களுக்குள் மிகவும் சிரேஷ்டங்களாகப் புகழப்படும் க்ஷேத் திரங்கள் ஐந்து. அவைகளுக்குப் பாஞ்சபௌதிக க்ஷேத்திர மென்றுபெயர் அவையாவன பிருதிவீ அப்பு (ஜலம்)தேஜஸ் வாயு ஆகாசம். இவைகளில் ஒவ்வொரு பூதரூபமாக ஒவ் வொரு க்ஷேத்திரத்திலும் லோகக்ஷேமத்தின் பொருட்டு சிவபெருமான் ஆவிர்ப்பவித்திருப்பதால் இப்பெயரால் வழங் கப்படுகின்றது. இவைகளில் இரண்டாவதாகக் கூறப்பட்ட ஜலம் என்கிற பூதரூபமாக இங்கு பரமேசுவரன் தோன்றி யிருப்பதால் இதற்கு அப்லிங்க க்ஷேத்திரமென்றும் பகவா னுக்கு அமிருதலிங்கேசுவரரென்றும் பிரஸித்தியுண்டு இதை த்திருவானைக்காவென்றும் ஜம்புகேசுவர க்ஷேத்திரமென் றும் அதிகமாக வியவகாரம் செய்வார்கள். இந்த க்ஷேத்

திரமானது ஸ்ரீரங்கநாதர் ஸ்ரீபிக்ஷாடநேசுவரர் ஸ்ரீஸப்த ரிஷீசுவரர் ஸ்ரீமாதுருபூதேசுவரர் இவர்களுடைய க்ஷேத் திரங்களுக்கு மத்தியிலிருப்பதால் சிறந்தரத்நஹாரத்திற்கு மத்தியிலிருக்கும் நகுநாயகம்போல் விளங்குகின்றது. இந்த க்ஷேத்திரத்தின் மூலமாக ஸ்ரீஜம்புநாதருடைய மகிமையை க்கூறும் இந்நூல் 26 அத்தியாயங்களுடன் கூடியது. இது பாத்மபுராணத்தில் 131 ஆவது அத்தியாயம் முதல் 156 ஆவது அத்தியாயம் முடியச் சொல்லப்பட்டிருக்கின்றது. இதில் ஸ்ரீஜம்புகேசுவர க்ஷேத்திரத்தின் பெருமையையும் ஜம் புநாதர் என்கிற பரமேசுவரனுடைய மஹிமையையும்பற்றி நன்கு சொல்லப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு அத்தியாயத் திலும் துவக்கத்திலுள்ள ஒவ்வொரு சுலோகத்தால் சுருக்க மாக அந்தந்த அத்தியாயத்தின் கருத்து வெளியிடப்பட்டி ருக்கின்றது. விஷ்ணு, பிர்ம்மா, பார்வதீ, இந்திரன் முத லான பலர் தங்களுடைய கஷ்டம் விலகவேண்டி இங்கு வந்து ஜம்புநாதரையுபாஸித்து இஷ்டமான வரன்களைப் பெற்றிருக்கிறார்கள். இந்த க்ஷேத்திரமானது ஸ்ரீரங்கநாத க்ஷேத்திரத்திற்கு முந்தியே ஏற்பட்டிருப்பதாகத் தெரிகின் றது. இந்த அபிப்பிராயத்தையே ஸ்ரீரங்கநாதர் விபீஷண ரைப்பார்த்து

शृणु राक्षसराज त्वं प्रीतोऽहं भक्तिभिस्तव ।

पुण्यमेतद्गजारण्यं साक्षाद्यत्र शिवःस्थितः ॥

अहमेनं समाराद्धुं तिष्ठाम्यत्र विभीषण ॥

ஹே விபீஷணரே நான் கூறுவதைக்கேளும் உம்முடைய பக்தியால் நான் ஸந்தோஷமடைந்தேன். ஸாக்ஷாத் பரம சிவனால் வஸிக்கப்பட்ட இந்த கஜாரண்யமானது மிகவும் புண்யமானது. நான் இவரை நன்கு ஆராதிக்கவேண்டி இங் கு வஸிக்கிறேன்.

त्वं गच्छ लङ्कामनुशाधि राज्यं

प्रत्यब्दमेत्यार्चय मां शिवं च ।

ஸ்ரீராமமூர்த்தியால் விபீஷணருக்குக் கொடுக்கப்பட்ட ரங்கநாதன் இந்த க்ஷேத்திரத்தைப் பார்த்தவுடன் லங்கைக்குப் போக மனமில்லாமல் விபீஷணரைப்பார்த்து நீர்லங்கைக்குப் போய் ராஜ்யபரிபாலனம் செய்யும் ஒவ்வொருவருஷமும் இங்குவந்து என்னையும் சிவனையும் பூஜைசெய்யும் என்றுசொன்னதாக இதில் 13 அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

இந்த க்ஷேத்திரத்தில் ஒன்பது புண்யதீர்த்தங்களிருக்கின்றன. அவைகளாவன 1 சிவதீர்த்தம், 2 பிர்ம்மபுஷ்கரணி, 3 ஜம்புதீர்த்தம், 4 இந்திரதீர்த்தம், 5 சூர்யதீர்த்தம், 6 ராம தீர்த்தம், 7 அகஸ்தியதீர்த்தம், 8 அக்னிதீர்த்தம், 9 சந்திர புஷ்கரணி என்பவைகளே. இவைகளில் முதல் தீர்த்தமானது ஸ்வாமி ஸந்நிதிக்கு ஸமீபத்தில் ஊறுகின்ற தீர்த்தம். 2 வது தீர்த்தம் தெற்கு வீதியிலிருக்கும் பிர்ம்மதீர்த்தத்தெரு அக்கிரகாரத்திலிருக்கின்றது. 3 வதுதீர்த்தம் அம்பாள் கோயிலிலிருந்து கிழக்கே போகும் மார்க்கத்தில் இருக்கும் விசுவநாதர் விசாலாக்ஷி இவர்களுடைய ஆலயத்திற்கு ஸமீபத்திலிருக்கின்றது. இது சங்கரேசுவரர் என்கிற பிர்ம்மாவால் உண்டுபண்ணப்பட்டது. 4 வது தீர்த்தம் ஸ்வாமி ஸந்நிதியிலிருக்கும் த்வஜஸ்தம்பத்திற்குத் தென்மேற்கிலிருக்கின்றது. 5வது தீர்த்தம் ஆயிரக்கால்மண்டபத்திற்குத் தென்பக்கமாக இருக்கின்றது. 6வது தீர்த்தம் திருச்சி லால்குடிபோகும் ரோட்டிற்கு மேல்பக்கத்திலிருக்கின்றது. 7 வது தீர்த்தம் அம்பாள் ஸந்நிதியில் கிணறுகவிருக்கின்றது. 8 வது தீர்த்தம் வஸந்தமண்டபத்திற்கு மேல்பக்கமிருக்கும் தென்னந்தோப்புக்குள்ளிருக்கின்றது. 9 சந்திரபுஷ்கரணி தீர்த்தம் ஸ்ரீரங்கம் கோவிலுக்குள்ளிருக்கின்றது. இந்த ஒன்பதுதீர்த்தங்களையும் ஒன்பது துவாரமாக நிர்மாணம் செய்து ஸ்வா

மி ஸந்நிதியில் ஒருஜன்னல் கட்டப்பட்டிருக்கின்றது. அந்த த்துவாரங்கள் வழியாக ஸ்வாமியை தர்சித்தால் இந்த ஒன்பது தீர்த்தங்களிலும் ஸ்நாநம் செய்த புண்யமேற்படுகின்றது. ஆதியில் ஸ்ரீஅகிலாண்டேசுவரியால் உச்சிகாலத்தில் செய்யப்பட்ட ஸ்வாமி பூஜையையும் கோபூஜையையும் இப்பொழுது அர்சகர்கள் அம்பாள் வேஷத்துடன் உச்சிகாலத்தில் நடத்துகிறார்கள். இங்குவிளங்கும் ஜம்புலிங்கமானது ஸ்ரீபார்வதீ தேவியால் இரண்டாவதாகக் கூறப்பட்ட பிர்ம்ம புஷ்கரணி என்கிற புண்ய தீர்த்தத்திலிருந்து தன்கையால் ஜலத்தை எடுத்து லிங்காகாரமாகச் செய்து பிரதிஷ்டை பண்ணப்பட்டது. அதனால் தான் இதற்கு ஜலலிங்கமென்று பிரஸித்தி ஏற்பட்டிருக்கின்றது. எப்பொழுதும் ஸ்வாமி ஸந்நிதியில் ஜலம் ஊறிக்கொண்டே இருக்கும். இவ்விதம் ஊறிவரும் ஜலத்தைக் கீழாக ஒருவாய்க்கால் வழியாகவிட்டு மூன்றாவது பிராகாரத்தில் கட்டப்பட்ட பெரிதான தொட்டியில் விழும்படி செய்திருக்கிறார்கள். அங்கிருந்து ஒவ்வொருநாளும் வெளியில் இறைக்கிறார்கள். இப்படி இறைத்தும் வர்ஷாகாலங்களில் சிலஸமயங்களில் இந்த ஊற்றால் ஜலம் பெருகி லிங்கத்திற்குமேல் முழ அளவு ஜலம்நிற்கும். உடனே சிரமப்பட்டு ஜலத்தை இறைத்துத்தான் பூஜைசெய்வார்கள். இந்த விசேஷத்தை இப்பவும் நேரில் பார்க்கலாம்.

இங்கு விளங்கும் ஜம்புபதியை ஒருசிலந்திப்பூச்சியும் யானையும் பக்தியுடன் ஆராதித்துக்கொண்டு வரும்பொழுது ஒன்றுக்கொன்று விரோதமேற்பட்டு மரணத்தையடையும் ஸமயத்தில் ஸ்ரீஜம்புநாதர் பிரத்யக்ஷமாகத்தோன்றி அவைகளுக்கு இஷ்டத்தைக்கொடுக்கும்பொழுது சிலந்தியானது பகவானிடம் எனக்கு மறுஜன்மமேற்படுமாகில் தங்களுடைய சரணங்களில் திருடமான பக்தியும் பூர்வஜன்மஞாபகமுமிருக்க வேண்டுமென்று பிரார்த்திக்க அவ்விதமே பகவானும் அனுக்கிரகம் செய்தார். உடனே அச்சிலந்தியும் சோளதேச

த்ராசனுக்கு புதல்வனாகத் தோன்றி சோணாக்ஷன் என்று பெயர் பூண்டு சிவகைங்கர்யத்திலீடுபட்டவனாய்க் கொண்டு இங்கு வந்து பிராகாரங்கள் கோபுரங்கள் மண்டபங்கள் முதலான திருப்பணிகளைச் செய்தான். அந்த ஸமயத்தில் இந்த க்ஷேத்திரத்தினுடைய ஐந்தாவது பிராகாரத்தையும் அவனே கட்டுவதாக உத்தேசிக்கும்பொழுது ஸ்ரீபகவான் அசரீரி வாக்கால் அதை நீ கட்டவேண்டாம் நானே கட்டுகிறேனென்று தடுத்துவிட்டு அவரே தான் கட்டினதாகத் தெரிகின்றது. இந்தப்பிராகாரம் வேலைநடக்கும பொழுது ஒவ்வொரு நாளும் சாயங்காலம் பகவானே நேரில் சிறந்த பாதுகையுடன் வந்து வேலையாட்களுக்குக் கூலிக்காக ஒவ்வொரு விபூதிப் பொட்டலத்தைக் கொடுத்தார். அதை அவர்கள் கடைகளில் கொடுக்கும்பொழுது அவரவர்கள் செய்த வேலைக்குத் தகுந்த சமபளம் அவைகளிலிருந்தது. இக்காரணம் கொண்டே இதற்கு விபூதிப்பிராகாரமென்று பிரஸித்தமான பெயரும் ஏற்பட்டிருக்கின்றது இதற்கு விசேஷ மகிமையுண்டு அவை யாவையும் இதின் 24வது அத்தியாயத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்க. ஆதியில் இந்த க்ஷேத்திரத்திலிருந்த நாகமரங்களாலடர்ந்த தோப்பில் ஜம்புமஹரிஷி தவம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு முன்னிலையில் மிகவும் வெண்மையான நிறத்துடன்கூடிய ஒரு நாகக்கனியை விழக்கண்டார். நாகைப்பழம் கறுப்பாயிருக்கும். இது வெளுப்பாயிருப்பதால் மிகவும் சிறந்தது. இவ்விதம் கிடைப்பதரிது. ஆகையால் இதைக் கைலாஸவாஸியான சிவபெருமானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டுமென்று தீர்மானித்து அவ்விதமே பகவானிடம் அர்ப்பணம் செய்தார். அவரும் அதை வாங்கிப் புசித்துப் பக்கத்தில் கொட்டையைத் துப்பினார். உடனே அதை பகவத்பிரஸாதமென்று ஜம்புமகரிஷி உட்கொண்டார். அவருடைய உதரத்திலிருந்தும் அந்தக்கொட்டை மரமாக முளைத்துவிட்டது. மறுபடியும் அந்த மஹா

ரிஷி பாமசிவனிடம் வந்து காகைமா ரூபமாயிருக்கிற என்னுடைய நிழலில் தாங்கள் வஸிக்க வேண்டு மென்று வேண்ட அதை அங்கீகரித்து ஸ்ரீபார்வதியை அங்கு அனுப்பி அவளால் ஜம்புவிருக்ஷத்தினுடைய மூலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டார். அதினால் இதற்கு ஜம்பு க்ஷேத்திரமென்றும் பகவானுக்கு ஜம்புநாதர் என்றும் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இங்கு பன்னிரண்டு மாதங்களிலும் பகவானுக்கு உத்ஸவங்களுண்டு. அவைகளின் விவரத்தை வேறு இடத்தில் காட்டியிருப்பதைக் கொண்டு அறிந்துகொள்க.

சற்றேறக்குறைய 2500வருஷங்களுக்கு முன் காலதோஷத்தாலும் அதர்மத்தின் அபிவிர்த்தியாலும் அம்பாளான ஸ்ரீ அகிலாண்டேச்வரிக்கு அதிக கோபமேற்பட்டு அவள் ஸன்னதி அதிக உக்ரமாயிருந்தபடியால் ஜனங்கள் போய் தரிசிக்க முடியாமலிருந்தது. அந்த ஸமயத்தில் தர்மஸ்தாபனம் செய்து அத்வைதமதத்தை நிலைநாட்டவேண்டி இப்புவியில் அவதரித்து ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாள் என்று பிரஸித்திபெற்று விளங்கிவந்த ஸ்ரீபாமேசுவரன் ஆங்காங்கு புண்யக்ஷேத்திரங்களைத் தரிசித்துவரும் ஸமயத்தில் இந்த க்ஷேத்திரத்தையும் அடைந்தார்கள். இங்கு வந்து ஸ்வாமியையும் அம்பாளையும் விதிப்படி தரிசித்தபிறகு இவரைக் கண்ணுற்ற ஸகல ஜனங்களும் இவரைச்சிறந்த மஹான் எனத்தீர்மானித்து ஸ்ரீ அம்பாளை சாந்த மூர்த்தியாகச் செய்து எல்லா ஜனங்களையும் ஸுலபமாய் தரிசிக்கும்படி அனுக்கிரஹிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். கருணைக்கடலான நமது ஆசார்ய மூர்த்தியும அவர்களின் பிரார்த்தனைக்கிணங்கி உடனே யந்திரராஜமென்று பிரஸித்தி பெற்ற ஸ்ரீசக்ரரூபமாக நவரத்னங்களால் இழைக்கப்பட்ட இரண்டு தாடங்கங்களைச்செய்து அவைகளில் அம்பாளுடைய உக்ரமான கலையை ஆகர்ஷித்து அம்பாளுடைய கர்ணங்களில் ஆபரணமாகச் சாற்றியிருக்கிறார்கள். இன்

னும், கிழக்கு முகமாக விளங்கும் அம்பாளுடைய ஸந்நிதி
யில் அவளுக்கு எதிர்முகமாக அவளுடையஜ்யேஷ்ட புத்ர
ரான மஹாகணபதியையும் பிரதிஷ்டை செய்து அம்பாளு
க்கு மேல்புறத்தில் அவளுடைய இரண்டாவது குமாரரான
ஸுப்ரமண்யரையும் பிரதிஷ்டைசெய்து அம்பாளை மிகவும்
சாந்த மூர்த்தியாகச்செய்தார்கள். அதற்குப்பிறகும் சுமார்
100 வருஷங்களுக்கு முன் இவர்களுடைய ஸாக்ஷாத்பரம்
பரையில் இருந்த ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடாதிபதிகளான
ஆசார்யர்களில் ஒருவரால் இந்தத்தாடங்கங்கள் ஜீர்ணோத்
தாரணம் செய்து மறுபடியும் சாற்றப்பட்டதாகத் தெரிகின்
றது. பிறகும் அந்தப் பீடத்தில் அவதரித்தவர்களும் கலி
யின் கொடுமையால் மிகவும் மாறுதலை அடைந்திருக்கும் நம்
ஸனாதன தர்மத்தை ஸ்தாபிக்கவேண்டி ஆதியில் அவதரித்த
பரமேசுவரனே மறுபடியும் இவ்வுருவாகத் தோன்றியிருக்கி
றார் என்று எல்லோராலும் நிச்சயமாய் எண்ணக்கூடிய மஹி
மையுடன் தற்காலம் விளங்கும் கும்பகோணம் ஸ்ரீ காஞ்சீ
காமகோடி பீடாதிபதி ஜகத்குரு மஹாஸ்வாமிகள் அவர்
களாலும் ருத்ரோத்காரி௵ சித்திரை௴த்தில் ௸ தா
டங்கங்கள் விதிப்படி ஜீர்ணோத்தாரணம் செய்து அம்பாளு
க்கு ஆபாணமாகப் போடப்பட்டன என்பதும் ஸகல ஜன
ங்களாலும் நன்கு அறியப்பட்ட விஷயம். இதைக்கவனித்
தால் இந்த தாடங்கங்களை ஜீர்ணோத்தாரணம் செய்யும் பாத்
யமும் ஆசார்யாளுடைய ஸாக்ஷாத் பரம்பரையில் வந்த
௸ காமகோடி பீடாதிபதிகளுக்குத்தான் என்று ஸ்பஷ்ட
மாய்த்தெரிகின்றது. இந்த க்ஷேத்திரத்தின் வடக்கு வீதி
யில் இந்த மடத்திற்கு ஒரு பெரிய மடமும் அதில் அத்ய
யனம் சாஸ்திரம் இவைகளின் அபிவிர்த்தியும் நடைபெற்று
வருகின்றது. பரமாசார்யாளால் இங்கு தாடங்கப் பிரதிஷ்
டைசெய்து அதனால் அம்பாளுக்கு ஸந்தோஷத்தை உண்டு
பண்ணியிருக்கிறார்கள் என்கிற அபிப்பிராயத்தை ஸ்ரீ வித்

தியாரண்யஸ்வாமிகள் தம்மால் இயற்றப்பட்ட ஸ்ரீ ஆசார்
ய அர்ச்சனத்தில் உள்ள

श्रीचक्रात्मकताटङ्कपोषिताम्बामनोरथाय नमः

என்கிற இந்த அர்ச்சனவாக்யத்தால் நன்கு வெளியிட்
டிருக்கிறார்கள். இந்தத் தாடங்கங்கள் இல்லாமல் ஒரு ஸமய
மும் அம்பாளுக்குப் பூஜை நடக்கிறதில்லை. இக்காலத்திலும்
இந்த அம்பாளுடைய அனுக்கிரஹத்தால் ரோகத்தினுடைய
நிவர்த்தியையும் பிசாசம் முதலிய துஷ்டக்கிரஹங்களுடைய
ஹிம்ஸையிலிருந்தும் நிவர்த்தியையும் மற்றும் தங்கள் இஷ்
ட ஸித்திகளையும் பலஜனங்கள் அடைகிறார்கள். நவராத்திரி
முதலான விசேஷஸமயங்களில் அம்பாளுடைய ஸன்னதியில்
அநேகக்கிரஹங்கள் தலைவிரித்தாடுவதை இப்பொழுதும் பார்
க்கலாம். இன்னும் பல விசேஷங்களிருப்பினும் அவைகளை
இந்தப் புஸ்தக மூலமாயறிந்து கொள்ளலாமென்று விரிவிற்
கஞ்சிவிடுகிறோம். இவ்வித க்ஷேத்திர மகிமையையும் ஸ்ரீஜ
ம்புநாதருடைய சக்தி விசேஷத்தையும் அறிய விரும்பு
வோர்களுக்கு உபகாரமாயிருக்குமென்றும் என்னுடைய
வாக்குக்கும் பரிசுத்தியுண்டாகுமென்றும் கருதி என்னால்
இந்தக் காரியத்தில் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. எ
ன்னுடைய முயற்சி சீக்கிரம் ஸித்திக்கவேண்டி எனக்கு
உபகாரம் செய்த என்னுடைய முக்யநண்பரான வைத்தீசுவா
ய்யாவர்களுக்கு நான் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்
கிறேன். இதில் நானாக ஒன்றைச் சேர்க்காமலும் விலக்காம
லும் எனக்குக் கிடைத்த ஸம்ஸ்கிருத புஸ்தகத்திலுள்ள ம
ஹரிஷிகளின் அபிப்பிராயத்தையே என்னால் வெளியிடப்ப
ட்டிருக்கின்றது. இப்புத்தகத்தைப் படிக்கும் ஜனங்களுக்கு
ஸ்ரீஜம்புநாதர் அகிலாண்டேசுவரி இவர்களிடம் திருடமான
பக்தியும் அதினால் அவர்களுடைய பூர்ணமான அனுக்கிரக
மும் அவச்யமேற்படுமென்று யாவருமறிந்த விஷயமே.

ஸ்ரீஜம்புநாதருடைய புண்ய சரித்திரத்தை வெளியிடுகிறதென்கிற இந்த உத்தமமான சிவகைங்கர்யத்தைச் செய்து இவன் கிருதார்த்தனாக ஆகட்டுமென்று பரமகருணையுடன் என்னை இந்தப் புண்ய க்ஷேத்திரத்திற்கு வரும்படி அனுக்கிரஹித்த ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமகாஸ்வாமிகளவர்களுடைய சரணாரவிந்தங்களிலும் ஸ்ரீஅகிலாண்டேசுவரி ஸ்ரீஜம்புநாதர் இவர்களுடைய திருவடிகளிலும் பன்முறை பணிந்து இவ்விஷயத்தையும் பூர்த்திசெய்துகொள்ளுகிறேன்.

இந்தப் புஸ்தகம் அச்சிட்டு வெளிவரவேண்டியதற்காக நன்கொடையளித்த நங்கவரம் பெரியபண்ணை மகா-ள-ள-ஸ்ரீ என். ஏ. ரெங்கனாதய்யரவர்கள், திருச்சி வக்கீல்கள் மகா-ள-ள-ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாஸய்யர் அவர்கள் வி. ஜெயராமய்யரவர்கள் ஸ்ரீரங்கம் டி. கே. பாலஸுப்ரஹ்மண்யய்யரவர்கள் ஸ்ரீரங்கம் முனிஸிபல் சேர்மன். அனந்தசுப்ரமண்யய்யரவர்கள் இவர்களுக்கு எனது நன்றியறிவை இதன் மூலமாய் தெரிவித்துக்கொள்கிறேன். இவர்களுக்கு ஸ்ரீஜம்புநாதரும் அகிலாண்டேசுவரியம்பாளும் மென்மேலும் சிரேயோபிவிருத்தியை செய்யும்படி பிரார்த்திக்கிறேன்

श्रीमन्जम्बुपते प्रभो जननि सद्वन्द्येऽखिलाण्डेश्वरि
प्रख्यातैरपि दैवतैरविदितं युष्मच्चरित्रं महत् ।
इत्थं द्राविडभाषया लिखितमित्येतन्ममागःपरम्
सोढ्वा मां कृपया निसर्गभवया संरक्षतेत्यर्थये ॥

ஸமஸ்த உலகங்களுக்கும் பிரபுவாயும் விசேஷ சக்தி பொருந்தியவருமான ஹே ஜம்புநாத! மஹான்களால் வந்தனம் செய்யத் தகுந்தவளும் ஸகலப்பிராணிகளுக்கும் தாயாயும் விளங்கும் ஹே அகிலாண்டேசுவரி! உங்களுடைய

மிகவும் சிறந்ததாயும் அதிகப்பிரஸித்திபெற்ற பிர்ம்மா முதலான தேவர்களாலும் அறியமுடியாததுமான புண்யசரித்ரத்தை அற்ப அறிவையுடைய என்னால் இவ்விதம் தமிழ் பாஷையில் எழுதப்பட்டதென்கிற இந்த அபசாரத்தை உங்களுக்கு இயற்கையில் விளங்கும் கருணையால் பொறுத்துக்கொண்டு என்னைப் பாதுகார்க்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன் சுபம்

கும்பகோணம் ஸ்ரீஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய

ஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீமடம் ஆஸ்தான

வித்வான் மஹோபதேசக கவிரத்னம்

ப. பஞ்சாபகேச சாஸ்திரி



ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள அவர்கள



உ

श्रीगुरुभ्यो नमः ।

श्री जम्बुनाथाय नमः ।

श्री अखिलाण्डेश्वर्यै नमः ।

ஸ்ரீ குருப்யோ நம:

ஸ்ரீஜம்புநாதாய நம:

ஸ்ரீஅகிலாண்டேச்வர்யை நம:

भृङ्गैरलङ्कृतकटं शृङ्गैकाङ्कितवक्त्रकं ।
बीजापूरादिवक्त्रं तं वल्लभापतिमाश्रये ॥

பிருங்கமென்று பெயர்வாய்ந்த வண்டுகளால் அலங்கரிக்கப்பட்ட கபோலங்களையுடையவரும் ஒருதந்தத்தால் அடையாளம் பண்ணப்பட்ட முகத்தையுடையவரும் மாது

ளெழுத்து முதலியவஸ்துக்களுடன் கூடிய துதிக்கையையுடையவரும், வல்லபை என்கிற ஸ்திரீக்குப் பதியாயும் பிரஸித்தராயுமிருக்கிற ஸ்ரீமஹாகணபதியை நான் சரணமாக அடைகின்றேன்.

चन्द्रचूडौ कृपासिन्धू पितरौ जगतां शिवौ ।
श्रीमत्करिवनावासौ वन्दे सर्वार्थदायकौ ॥

திங்களை ஜடையில் தரிப்பவர்களும், கருணைக்கடலாயும், உலகங்களுக்குத்தாய்தந்தைகளாகவும், ஸ்ரீ ஜம்புகேச்வர க்ஷேத்திரத்தில் வஸிப்பவர்களுமான ஸ்ரீ பார்வதி பரமேச்வரர்களை நமஸ்கரிக்கின்றேன்.

प्रथमे शौनकमुखात् दीर्घसत्रान्तरागतम् ।
सूतं पप्रच्छुरव्यग्राः क्षेत्रतीर्थोत्तमोत्तमम् ॥

இதன் முதலாவது அத்யாயத்தில் மிகவும் சிரத்தையுடன் கூடியமஹர்ஷிகள் ஸ்ரீ சௌனகரிஷிமூலமாக தீர்க்கஸத்திரமென்று பெயர்பூண்டவேள்வியையுத்தேசித்து வந்தவரான ஸூதமாமுனிவரை மிகவும் சிறந்தக்ஷேத்திரதீர்த்தங்களின் வைபவத்தைக்கூறவேண்டுமென்று வேண்டினார்கள்.

முனிகுலதிலகரான ஸ்ரீ ஸூதரும் மஹரிஷிகளின் வேண்டுகோளுக்கிணங்கி அடியில் வருமாறு கூறத்தொடங்கினார்.

---

## அத்தியாயம் 1.

ஒன்றொருகாலத்தில் நைமிசாரண்யத்தில்கடுந்தவம் புரிவதால் மெலிந்த சரீரத்தையுடையவர்களும் ஜடாவல்கலங்களைத் தரிப்பவர்களும் த்ரிபுண்ட்ராகாரமாய்த் தரிக்கப்பட்ட விபூதியால் விளங்கும் நெற்றியையுடையவர்களும் தளர்ந்த புருவங்களுடனும் ஜரையால் உதிர்ந்துபோன கேசங்களை யுடையவர்களுமான பலமஹரிஷிக்கூட்டங்கள் வந்து சேர்ந்தன. அவர்களில் சிலர் கசடறஓதப்பட்டவேதங்களை யுடையவர்களாய் கொண்டு எப்பொழுதும் அவைகளையே பாராயணம் செய்து கொண்டுமிருந்தார்கள். மற்றும் சிலர் மிகவும் வெண்ணிறமான தம் தந்தங்களுடைய ஒளிகளால் முன்பிரதேசத்தை வெளுப்பாகச்செய்து விட்டார்கள். வேறு சிலர் ஸ்மிருதி புராணங்களைப் படித்துக்கொண்டிருந்தார்கள். பின்னும் சிலர் தத்வார்த்தங்களை நன்கு தீர்மானித்து ஸ்ரீ பரமேசுவர மூர்த்தியைத் தாங்கள் தியானித்து அவருடைய மகிமையைப் பிறருக்கும் உபதேசித்தார்கள். பலர் ஸ்ரீ சங்கருடைய உத்தமமானலிங்கத்தைப்பூஜை செய்தார்கள். சிலர் மான்குட்டிகளைத் தம்மடியில் வைத்துக்கொண்டு கைகளால்தடவிக்கொடுத்து லாலனைபண்ணினார்கள். சிலர் விதிவழுவாமல் அந்தந்தக்காலங்களில் அக்னிஹோத்ராதிகர்மாக்களை அனுஷ்டித்தார்கள். பின்னும் சிலர் சூர்யபகவானைத் தியானித்துப் பூஜை செய்துகொண்டிருந்தார்கள். இவ்விதம் மறைகளே மானிடவுருவா

ய்த்தோன்றியிருக்கிறதென்று பலரும் கருதக்கூடிய மகிமை வாய்ந்த அம்மகரிஷிகள் எல்லோரும் ஒன்றுகூடி ஸத்திரமென்கிற ஒருபெரியயக்ஞத்தை நடத்த ஆரம்பம் செய்தார்கள்.

அந்தஸமயத்தில் ஸகலசாஸ்திரங்களிலும் பயிற்சிபெற்றவரும் கிருஷ்ணமிருகத்தின் தோலை மேல்வஸ்திரமாகத்தரிப்பவரும் சுத்தமானயக்ஞோபவீதம் பூண்டவரும் ருத்திராக்ஷமாலைகளால் விளங்கும் கண்டத்தையுடையவரும் ஸ்படிகமயமான கமண்டலுவைக் கையிலேந்தியவரும் இந்திரியஜயம் பெற்றவரும் கோபமற்றவரும் விபூதியால் அலங்கரிக்கப்பட்டமேனியையுடையவரும் மானிட உருவம்கொண்ட தேஜஸ்போலவும் எப்பொழுதும் தம்முள்ளத்தில் ஸ்ரீ சம்புவைத்தியானிப்பதால் புளகாங்கித சரீரத்தையுடையவரும் ஸ்ரீ வியாஸபகவானுடைய முகாரவிந்தத்திலிருந்தும் நன்கு அறியப்பட்ட ஸகலபுராணதத்வார்த்தங்களையுடையவரும் ரோமஹர்ஷர் என்று பெயர் பெற்ற மஹரிஷியினுடைய புதல்வராயும் பண்டிதர்களால் போற்றக்கூடிய மகிமைவாய்ந்தவருமான ஸ்ரீ ஸூதமஹர்ஷியானவர் அங்கு வந்துசேர்ந்தார். அந்தவிடத்தில் எப்பொழுதும் வேதாத்தியயனம் செய்துகொண்டிருக்கும் முனிபாலகர்களுடைய முகங்களிலிருந்தும் ஸ்பஷ்டமான ஸ்வரங்களுடனும் வர்ணங்களுடனும் வெளிவருகின்ற வேதவாக்கியங்களின் சப்தங்களால் பிரகாசிக்கும் திக்குகளையுடையதாயும் பயமின்றி தம்மிஷ்டம்போல் ஸஞ்சரிக்கும் மான்கூட்டங்களின் நேத்திரப்பிரபைகளால் கறுத்ததான பிரதேசங்களையுடையதாயும் கொடிமாங்களுக்குக் கட்டப்பட்ட பாத்திகளிலிருக்கும் ஜலத்தை அருந்துகிறதான மான்குட்டிகளையுடையதாயும் தபஸ்விஜனங்களுடைய காலடிவைத்ததால் பரிசுத்தமான மண்மேடுகளையுடையதாயும் ஆங்காங்கு ரிஷிஜனங்களால் பூஜைசெய்யப்ப

ட்ட புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் மஹர்ஷிகன்னிகைகளால் விடப்பட்ட ஜலங்களால் நிரம்பியபாத்திகளையுடையதாயும் சிலவிடங்களில் மரங்களுடைய அடிபாகங்களில் உல்லாஸமாயுட்கார்ந்திருக்கும் மிருகங்களையுடையதாயும் ஒன்றுக்கொன்று பகவானாலேற்படுத்தப்பட்டிருக்கும் விரோதத்தைக்கூட அறவேவிட்டுவிட்டு மான்குட்டிகளுக்குப் பால்கொடுக்கும் பெண்சிங்கங்களையுடையதாயும் நன்கு தளிர்த்து வளர்ந்திருக்கும் மரங்களின் துளிர்களால் ஸந்தியாகாலம்போல் விளங்கும் பகலையுடையதாயும் புஷ்பங்களில் விளங்கும் தேனையருந்தவேண்டி அவைகளில் வந்துவிழும் வண்டுகளையுடையதாயும் தங்கள் மூக்குகளால் கொத்திஸாப்பிடப்பட்ட தான்யங்களையுடைய பக்ஷிக்கூட்டங்களால் பிரகாசிப்பதும் சிவாலயங்களாலும் மற்றுமுள்ள தேவாலயங்களாலும் புண்ணிய தீர்த்தங்களாலும் மிகவும் பவித்திரமாயும் எப்பொழுதும் தவம்புரிவதிலேயே ஊக்கம்கொண்ட முனிகணங்களால் நெருக்கமாயும் காய்வதற்காகப் போடப்பட்ட மரையுரிகளுடன் கூடிய பல கிளைகளையுடையதாயும் கிருஷ்ணமிருகத்தினுடைய தோலையணிந்தவர்களும் ஸப்ததந்து என்கிறயாகத்தை உபக்கிரமம் செய்து அனுஷ்டிப்பவர்களுமான பலதீக்ஷிதர்களால் பரிசுத்தமான யாகசாலைகளையுடையதாயும் விளங்கும் அந்த ஆசிரமத்தைக்கண்ணுற்ற அந்தணப் புலவரான அம்மஹான் அளவிலாவானந்தத்தையடைந்தார்.

அப்பால் அதிகஸந்தோஷத்தையடைந்த அந்தஸூத முனிவர் ஆச்ரமத்தினுள் புகுந்து வணக்கத்துடன் முறையே அங்கு விளங்கும் பெரியோர்களான மஹரிஷிகளனைவரையும் அடிபணிந்தார். உடனே அந்தயக்ஞசாலையில் தீக்ஷிதர்களான சகலமஹர்ஷிகளும் இவரை நல்வரவேற்றிப் பூஜாத்திரவியங்களால் முறைப்படி அர்ச்சித்து க்ஷேமஸமாசாரங்களை வினவினார்கள். இவ்விதம் ரிஷிகளைநோக்கி ஸூதரும் மரியா

தையாய் அடியில் வருமாறு மொழிகின்றார். ஹே மஹான்களே! தங்களுடைய அனுக்கிரகத்தால் நானும் மற்றுமுள்ள என்னைச் சேர்ந்தவர்களும் ஸௌக்கியமாயிருக்கிறோம் என்று கூறிப்பிறகு அங்குபோடப்பட்டிருக்கும் ஆஸனத்தை அலங்கரிக்கவேண்டுமென்று ரிஷிகள் செய்த பிரார்த்தனையையேற்று ஆஸனத்திலமர்ந்தார் அவ்விதம் ஆஸனத்தில் வீற்றிருக்கும் ஸூதபுராணிகரிடம் அங்கிருக்கும் ரிஷிகள் யாவரும் ஹே ஸூதமஹரிஷியே! ஸ்ரீவியாஸபகவானிடமிருந்தும் தங்களால் ஸகலபுராணஸம்ஹிதைகளும் நன்றாய்க் கேட்கப்பட்டிருக்கின்றன. அவ்விதம் ஸ்பஷ்டமாயறியப்பட்ட தங்களிடமிருந்து மிகவும் புண்ணியங்களான பல ஸம்ஹிதைகளும் விசேஷமாகத் தென்தேசத்தில் விளங்கும் சைவக்ஷேத்திரங்களுடைய மாஹாத்மியங்களும் கேட்டிருக்கிறோம். ஆனாலும் அந்தசைவக்ஷேத்திரங்களுக்குள் எது மிகவும் புண்யக்ஷேத்ரம், எந்த தீர்த்தம் மிகவும் பாவநமானது, எந்த இடத்தில் விளங்கும் பகவான் சங்கரர் மிகவும் தயாளுவாயிருக்கிறார், இவைபோன்ற விஷயங்களை மறுபடியும் விஸ்தாரமாய்க் கேட்கவேண்டுமென்று விரும்புகிறோம். ஆகையால் தாங்கள் அனுக்கிரகம் புரியவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

இம்மொழிகளைச் செவியிலுற்ற ஸூதரும் வெகுகாலம் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானித்துத்தம் குருவான ஸ்ரீ வியாஸபகவானையும் நமஸ்கரித்து ஸகல க்ஷேத்திரங்களையும் தீர்த்தங்களையும் நன்றாய் தியானித்து அவைகளுக்குள் மிகச்சிறந்ததான க்ஷேத்திரம் தீர்த்தம் இவைகளைப்பற்றிக் கூறத் தொடங்கினர்.

பாத்மபுராணம் கஜாரண்யமாஹாத்மியத்தில்
முதல் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் 2.

उमानन्दीश्वराभ्यां यत्प्रोक्तमीशेनयुग्मके ।
शौनकादिमुनीन्द्रेभ्यस्तदूचे सूतनन्दनः ॥

முன்னொரு ஸமயம் ஸ்ரீ பார்வதிதேவி நந்திகேசுவரர் இவர்களின்பொருட்டு ஸ்ரீ பரமேச்வரனால் எதானது கூறப்பட்டதோ அந்தச் சரித்திரத்தை ஸூதமஹரிஷியானவர் சௌனகர் முதலான முனிசிரேஷ்டர்களின்பொருட்டுச் சொல்லுகின்றார்.

ஸ்ரீ ஸூதர்:—ஹே முனிகளே! தங்களால் வினவப்பட்ட மிகவும் மஹிமைபொருந்திய சிறந்த ஒருஸ்தானத்தைப் பற்றி சிறிது உங்களுக்கு நான் தெரிவிக்கிறேன். நூறுவருஷகாலம் சொன்னாலும் அதன் மஹிமையை விரிவாகக்கூறமுடியாது. ஆனாலும் என் ஆசார்யாளிடமிருந்து எப்படிக்கேட்கப்பட்டதோ அவ்விதம் எனது அறிவிற்கெட்டியவரையில் பூதலத்திலிருக்கும் க்ஷேத்திரங்களுக்குள் மேலானதான அந்த க்ஷேத்திரத்தின் மஹிமையைப்பற்றி அறிவிக்கின்றேன் என்று கூறத்தொடங்கினார்.

ஒருஸமயம் நன்கு விளங்கும் அநேகமணிகளின் அதிகமான ஒளிகளினால் பலவர்ணங்களுடன் கூடியதாகச் செய்யப்பட்டதாகவும் மலையருவிகளுடைய கணங்களை வகிப்பதால் அதிக சீதளமான வாயுவையுடையதாயும் கொழுப்பையடைந்த ஸிம்மத்தால் பிளக்கப்பட்டயானையின் மஸ்தகத்திலிருந்து விழுந்தமுத்துக்களால் அலங்கரிக்கப்பட்டகாடுகளையுடையதாயும் மதங்கொண்ட விருஷபங்களுடைய கொம்புகளின் நுனியால் பிளக்கப்பட்ட கல்பிரதேசங்களையுடையதாயும் ஸ்ரீ பார்வதிதேவியினுடைய பாதவிந்யாஸங்

களால் பரிசுத்தமாகச் செய்யப்பட்ட லதாகிருகங்களையுடை யதாயும் நர்த்தனம் செய்கிறதாயும் ஸ்ரீ முருகக்கடவுளுக்கு வாஹனமாயும் விளங்கும் மயிலினுடைய கேகாசப்தங்க ளினால் பிரகாசிக்கின்றதும் விக்னேசுவாருடைய தந்தத்தால் பிளக்கப்பட்டரத்னமயமானபடியுடன் கூடியதும் ஒன்றுக் கொன்று உல்லாஸமாய் விளையாடும் பிரமதகணங்களால் வி யாபரிக்கப்பட்டதும் தேவதைகளால் ஆனந்தமாய் கிரீடிக் கப்பட்டதும் ஸகலஸௌபாக்கியங்களாலும் நிறைந்ததுமான கைலாஸமென்று பெயர்பூண்ட பர்வதசிரேஷ்டத்தில் மாணி க்கரத்னமயமான தூண்களுடன் கூடியதும் சிறந்தமாலைக ளால் அலங்கரிக்கப்பட்டதும் கம்பீரமான வாத்தியசப்தங்க ளால் சப்தம் செய்கிற குகைகளையுடையதாயும் நர்த்தனம் செய்கிற தேவஸ்திரீகளால் அழகாயும் எப்பொழுதும் பிர காசிக்கின்ற மணிமயமான சுவரையுடையதாயும் ஸுவர்ண மயமான நான்குபக்கங்களிலும் கட்டப்பட்ட முத்துமாலை களால் பிரகாசிக்கின்றதாயும் பலரத்னங்களால் இழைக்கப் பட்ட சிகரத்தில் விளங்கும் கும்பங்களையுடையதாயும் ஸ்ப டிகரத்னக்கல்லுகளால் கட்டப்பட்டிருக்கும் படிகளால் விளங்குகிறதாயுமிருக்கும் ரத்னஸிம்மாஸநத்தில் வீற்றிரு ப்பவரும் திருபுரரள்ளென்று சொல்லப்பட்ட அசுரர்களுக் குச் சத்துருவாயும் ஜடையினுடைய மத்தியில் விளங்கும் கங்கையின் துறைகளால் சீதளராயும் நெற்றியின் மத்தியிலி ருக்கும் நேத்திரத்தால் குங்குமப்பொட்டு வைத்திருப்பது போல் பிரகாசிப்பவரும் நன்கு விளங்கும் ரத்னங்களையு டைய ஸர்ப்பசிரேஷ்டங்களை குண்டலங்களாக உடையவ ரும் மந்தஹாஸத்துடன் கூடிய முகத்தையுடையவரும் மிக வும் சிவந்தமேனியையுடையவரும் சங்கம்போல்விளங்கும் கழுத்தில் தரிக்கப்பட்ட பன்னகாபரணத்தையுடையவரும் முன் பல யுகங்களிலவதரித்த பிர்ம்மாக்களுடைய மண்டை யோடுகளால் செய்யப்பட்ட மாலைகளை அணிந்திருப்பவரும்

தம் நேத்திராக்னியால் தஹிக்கப்பட்ட மன்மதனுடைய சரீரபஸ்மாவைப் பூசிக்கொண்டிருப்பவரும் மான் சூலம் கபாலம் முதலான ஆயுதங்களால் விளங்கும் கைகளையுடையவரும் புலித்தோலை இடுப்பில் தரித்துக்கொண்டு யானைத்தோலை மேல் வஸ்திரமாகக்கொண்டவரும் வீராஸனத்தில் வீற்றிருப்பவரும் உலகவியவகாரமென்கிற நாடகத்திற்கு ஸாக்ஷிபூதராயும் தம்பாதங்களில் வந்தனம் செய்யும் தேவர்களுடைய கிரீடரத்னங்களால் ஹார்த்தி சுத்தப்பட்ட சரணங்களையுடையவரும் கருணாநிதியாயும் தம்பக்கத்தில் விளங்குகிறவளும் ஹிமவானுடைய புத்திரியாயும் தாமரைமலரைப்பரிஹஸிக்கும் முகத்தையுடையவளும் ஸ்தனபாரத்தால் வணங்கின இடையுடன் கூடியவளுமான ஸ்ரீ மஹேசுவரியால் பக்தியுடன் ஸேவிக்கப்பட்டவரும் திங்களைச் சிரஸ்ஸில் பூஷணமாகத்தரிப்பவரும் தம்முடைய திவ்யமான கடாக்ஷ வீக்ஷணத்தால் விக்நேசுவரர் சுப்பிரமணியர் இவ்விருவர்களையும் லாலனைசெய்கிறவராயும் வேதங்களின் கோடியான உபநிடதங்களில் ஸாரமாய்விளங்கும் பொற்பாத கமலங்களையுடையவரும் சுத்தஞானஸ்வரூபியாயும் சுக சௌநக ஜாபாலி மரீசி அத்ரி அங்கிரஸ் முதலான பிர்ம்மவாதிகளான முனிவர்களால் துதிக்கப்பட்டவரும் ஸித்தர் சாரணர் கந்தர்வர் யக்ஷர்கள் கிந்நரர்கள் வித்யாதரர்கள் அப்ஸரஸ்கள் முதலான தேவகணங்களால் கானங்களாலும் நர்த்தனங்களாலும் ஆராதிக்கப்பட்டவருமான ஸ்ரீ ஸாம்பஸதாசிவனைப் பிரமதகணங்களுக்கு அதிபதியான நந்திகேச்வரர் அதிகபக்தியுடன் வந்தனம் செய்து ஹே மஹரிஷிகளே உங்களால் என்னிடம் எது வினவப்பட்டதோ அந்தக் கேள்வியையே ஸ்ரீ பகவானிடம் வருமாறு பிரச்னம் செய்தார். தேவதைகளுக்கெல்லாம் தேவதையாயும் காலகாலனாயும் காமாந்தகனாயும் கருணைக்கடலாயும் விளங்கும் ஹே மஹாதேவ முன் ஒரு ஸமயம் தங்களுடைய முகாரவிந்தத்திலிருக்கும் க்ஷேத்திரங்

களுடைய சிறந்தவைபவமானது கேட்கப்பட்டது. ஆனாலும் இன்னும் கேட்கவேண்டுமென்கிற அவா அதிகமாயிருக்கிறது உலகில்விளங்கும் உம்முடையஸ்தானங்களுக்குள் அழகாயும் மிகவும் புண்யமாயும் பார்த்தவுடனேயே ஸகலபாபங்களை யும் நாசம்செய்கிறதாயும் எப்பொழுதும் பிரகாசமுள்ளதும் இதற்குமுன் சொல்லப்படாததுமான யாதொரு க்ஷேத்ர முண்டோ அந்த க்ஷேத்திரத்தின் மஹிமையை ஹே விருஷ பகேதோ உம்மிடமிருந்து அறியவிரும்புகிறேன். தாங்கள் தயவுசெய்து எனக்கு அநுக்கிரகம் புரியவேண்டுமென்று பிரார்த்தித்தார். இவ்விதம் பிரார்த்தித்து நந்திகேசுவரர் பக வானுக்கு எதிரில் நிற்கும்பொழுது பக்கத்தில் பிரியமாய் பர்த்தாவுடன் பேசிக்கொண்டிருந்த ஸ்ரீ பார்வதிதேவிக்கும் நந்திகேசுவரருக்குப்போல் அதேவிஷயத்தை நன்கு கேட்க வேண்டுமென்கிற ஆவலிருந்தபடியால் அவர் செய்த பிரச் னத்தையே உறுதி செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொ ண்டு அஞ்சலிபந்தம் செய்துகொண்டு அறிவிக்கிறாள்.

ஹே மஹாதேவ ஹே ஸர்வேசுவர வேதாந்தம் என்கிற உபநிஷத்துக்களால் மாத்திரம் அறியக்கூடிய மகிமை வாய்ந் தவரும் ஸகல விஷயங்களையும் நன்கறிந்து எல்லாப்பிராணி களுக்கும் அநுக்கிரகம் செய்கிறவராயும் ஸகலலோகங்க ளுக்கும் நாதராயும் ஸமஸ்தப்பிராணிகளின் சேஷ்டைகளு க்கும் காரணபூதராயும் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்கிற மூன்றுகார்யங்களைச் செய்கிறவராயும் ஸச்சிதாநந்தஸ்வரூபி யாயும் ஸம்ஸார மென்றபெயர் பெற்ற ரோகத்திற்குச்சி றந்த ஔஷதரூபியாயும் உம்மையே ஸகல ஜகத்ஸ்வரூபமாக விஸ்தாரப்படுத்திக் கொள்ளுகிறவராயும் உம்மைச்சரணம டைந்த பிர்ம்மா விஷ்ணு இந்திரன் விண்ணவர்கள் முனிகள் யக்ஷகிந்நரஸித்தஸாத்தியர்கள் முதலானவர்களுக்கு அவர வர்களுக்குவேண்டிய ஸ்தானம் ஐசுவர்யம் முதலிய ஸமஸ்

தமான இஷ்டங்களையும் அன்புடன் அளிக்கிறவராயும் ஸ்வதந்திரராயும் ஸவ்வித ஐசுவர்யங்களையும் பெற்றவரும் ஆசையில்லாதவரும் உம்முடைய உண்மையான ஸ்வரூபத்தை யறிய சக்தியற்ற அக்ஞானிகளால் தவத்தாலும் அக்னிஹோத்ரம் முதலிய நித்யகர்மங்களாலும் உபாஸிக்கப்பட்டவரும் சுத்தமான சித்தத்தையுடையவர்களும் சாந்தர்களுமான யோகிகளால் என்றுமழிவில்லாத நித்யமான மோக்ஷமென்கிற பரமபதத்தைப் பெறவேண்டி எப்பொழுதும் தியானிக்கப்பட்டவரும் முக்தர்களின் ஸ்வரூபியாயும், யோகிகளுக்கு ஸித்தியையளிப்பவரும் உம்மைக்காட்டிலும் வேறு அடைய வேண்டிய தத்வமில்லாதபடியால் ஸகல ஜனங்களாலும் பக்தியுடன் ஆராதிக்கக்கூடிய மகிமையுடன் கூடினவரும் ஸமஸ்த தபஸ்ஸிற்கும் பலபூதராயும் ஸத்யக்ஞானாநந்தஸ்வரூபியாயும் மாயாகார்யமான இப்பிரபஞ்சத்திற்குக் காரணபூதராயும் மாயை என்கிற கயிற்றால் ஜகத்திலுள்ள பிராணிகளாகிற பசுக்களைக் கட்டுகிறவரும் அதிலிருந்தும் விலக்கும் சக்தி பெற்றவருமாய் விளங்கும் ஹே பரமேசுவர பூர்ணமான ஸமாதியால் தங்களுக்கடையவேண்டியதொன்றுமில்லை. ஆகையால் என்னிடம் தங்களுக்கு அநுக்கிரக புத்தியிருந்தால் ஞானம் யோகம் தவம் முதலானவைகளை நான் பிறகு கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது நந்தியால் வினவப்பட்டதும் மூவுலகங்களிலும் சிறந்ததாயும் உமக்கு மிகவும் பிரியமாயுமுள்ள க்ஷேத்திரம் எதுவோ அதன் மாஹாத்மியத்தைத் தாங்கள் கூறவேண்டும் என்று பிரார்த்தித்தாள்.

இவ்விதம் புண்யமாயும் சிறந்ததாயும் விளங்கும் க்ஷேத்திரத்தினுடைய மகிமையைக் கூறவேண்டுமென்று பக்தி சிரத்தையுடனும் வணக்கத்துடனும் பிரச்னம் செய்த ஸ்ரீ பார்வதீதேவிக்கு ஸ்ரீ சந்திரசேகரானவர் ஸர்வ க்ஷேத்திரங்களு

க்கும் மேலான ஒரு க்ஷேத்திரத்தின் மஹிமையை ஸ்பஷ்டமாகச்சொல்லத் தொடங்கினார்.

கஜாரண்ய மாஹாத்மியத்தில் இரண்டாவதத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 3.

गिरिजानन्दिकेशाभ्यां कैलासाचलवासिना ।
कथ्यते क्षेत्रमाहात्म्यं सम्यक् चन्द्रार्धमौलिना ॥

முன் அத்யாயத்தில் ஸ்ரீ பார்வதீ தேவி நந்திகேசுவரர் இவர்களால் வினவப்பட்டவரும் கைலாஸ பர்வதத்தைத் தனக்கிருப்பிடமாயுடையவரும் சந்திர கலையை சிரஸ்ஸில் தரிப்பவருமான ஸ்ரீ சங்கரரால் பார்வதீநந்திகேசுவரர்களின் பொருட்டு க்ஷேத்திரமகிமையானது கூறப்படுகின்றது.

சங்கரர் 'ஹே பார்வதி ஹே நந்தி, உங்களால் கேட்கப்பட்ட உத்தமமாயும் மிகவும் பரிசுத்தமாயுமிருக்கிற க்ஷேத்திரத்தின் மகிமையைக் கூறுகின்றேன் கேளுங்கள்' என்று சொல்லத் தொடங்கினார்.

பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் என்று சொல்லப்பட்ட மூன்றுலகங்களிலும் பிரஸித்திபெற்றதாயும் இந்தக் கைலாஸ மலைக்குத் தென்பக்கத்திலிருப்பதும் அதை தர்சிப்பவர்களுக்கு விசேஷமான புண்யத்தைக் கொடுக்கிறதாயும் ஒரு தடவை ஸ்நாநம் செய்தால் ஸகல பாபங்களையும் விலக்குகிறதாயும் மிகவும் புண்யஸ்வரூபமாயும் எப்பொழுதும் ஸேவிப்பவர்களுக்கு முக்தியை யளிக்கக்கூடியதுமான காவேரீ நதி

யின் தென்கரையில் ( அதாவது கொள்ளிடமென்று நம்மால் வழங்கப்படும் நதிக்குத் தென்கரையில் என்று கருத்து) ஞானபூமி என்று சொல்லப்பட்ட ஸ்ரீ கஜாரண்யம் (திருவானைக்கா) என்கிற என்னுடைய உத்தமமான க்ஷேத்திரம் ஒன்றிருக்கிறது. விசேஷ மகிமைவாய்ந்த அந்த க்ஷேத்திரத்தில் மரிப்பவர்களுக்கு மறுபடியும் ஜன்மா ஏற்படுவதில்லை. அந்த க்ஷேத்திரத்தில் தவம்புரிந்து ஸித்தியடைந்துதான் கங்கையானவள் ஸாதுக்களுக்கு ஸகல ஸித்தியையுமளிக்கிறாள். அதனால்தான் என்னாலும் சிரஸில் தரிக்கப்படுகிறாள். இந்த இடத்தில் தபஸ் செய்துதான் சூர்யனுடைய புத்திரியான யமுனையும் பரிசுத்தை என்றும் மஹாபாதகநாசினி என்றும் நதிகளுக்குள் சிறந்தவளென்றும் பிரஸித்தி பெற்றிருக்கிறாள். நர்மதை என்கிற நதியும் இவ்விடத்தில் தவம் செய்துதான் புண்யநதி என்றும் தன் தீரத்தில் வஸிப்பவர்களுக்கு அதிக சுகத்தைக் கொடுக்கிறவளென்றும் க்யாதியடைந்திருக்கிறாள், இங்கு தபஸ் செய்துதான் சந்திரபாகை என்கிற சந்திரபகவானுடைய பெண்ணான நதியும் சந்திரன்போல் நிர்மலமான ஜலத்தை அடைந்திருக்கிறாள். கோவின் முகத்திலிருந்துண்டான கோமதீ என்கிற நதியும் இந்த க்ஷேத்திரத்தில் தபஸ் செய்துதான் மிகவும் தெளிவான தீர்த்தத்தையுடையவளாயும் ஸ்நாநம்செய்கிறவர்களுடைய பாபங்களை அபகரிக்கிறவளாயும் பிரகாசிக்கிறாள். நதிகளுக்குள் சிறந்ததான கோதாவரியும் மலயபர்வதத்திலுண்டான தாம்பரபர்ணி என்கிற நதியும் ஸரயூநதியும் பாவநமான ஜலத்தையும் தங்களையடைந்தவர்களுடைய பாபங்களைப் போக்கி முக்தியையளிக்கும் சக்தியையும் இங்குதவம் செய்துதான் பெற்றிருக்கிறார்கள். புண்ய ஸ்வரூபமென்றும் ஹம்ஸங்களாலும் ஸுவர்ணமயங்களான தாமரைமலர்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான மானஸஸரஸ்ஸிற்கு தேவலோகவாஸமும் அதிகப்பிரஸித்தியும் இவ்விடத்தில் செய்ததவத்

னால்தான் ஏற்பட்டது. பூலோகத்திலோ ஆகாயத்திலோ
ஸ்வர்க்கத்திலோ மற்று முள்ளவிடங்களிலோ எங்கெங்கு
தீர்த்தங்களிருக்கின்றனவோ அவை யாவும், ஹே பர்வதபுத்
திரியான பார்வதி, இக்க்ஷேத்திரத்தையடைந்துதான் பெ
ருமை பெற்றிருக்கின்றன. ஏழுமுத்திரங்களும் ஏழுகுளங்
களாக ஆகி மிகவும் பரிசுத்தங்களென்றும் புண்யரூபங்கள்
என்றும் பெயரையடைந்து இந்தப்பூமிக்கு நான்குபக்கங்க
ளிலும் தங்ளிஷ்டம்போல் பிரகாசிக்கின்றன. பூதங்கள் ருஷி
க்கள் முனிகள் திக்பாலகர்கள் கிரகங்கள் நக்ஷத்திரங்கள் பூமி
யிலுள்ள அரசர்கள் பதினோரு ருத்திராள் சூரியன் பிர்ம்மா
விஷ்ணு முதலான ஸகலமானபேர்களும் என்னுடையதர்ச
னத்தைப்பெறவேண்டி இந்த க்ஷேத்திரத்தையடைந்து உக்
ரமானதவம் செய்தார்கள். ஹே தபஸ்விநீ கௌரி! இவர்க
ளுடைய உக்கிரமான தபஸ்ஸையறிந்து நான் இந்தக்கைலா
ஸத்திலிருந்து அந்த க்ஷேத்திரத்தையடைந்தேன். அங்கு
சென்று அவர்களுடைய கடுந்தவத்தைப்பார்த்து ஸந்தோஷ
மடைந்து தயவுண்டாகி இவ்விதம் கூறினேன். அதாவது இ
ங்கு விளங்கும் புண்யதீர்த்தங்களில் நீங்களனைவரும் ஸ்நா
னம் செய்து பரிசுத்தமான சித்தத்தையுடையவர்களாயும்
புண்யாத்மாக்களாயுமிருந்துகொண்டு பவபந்தத்திலிருந்தும்
விடுபடுங்கள். ஹே ஸுரோத்தமர்களே! உங்களுடைய பெ
யரால் இந்தத்தீர்த்தங்கள் மூன்றுலகங்களிலும் பிரஸித்த
மாய் விளங்கட்டும். இவ்விடங்களில் யார் தபஸ் செய்தாலும்
சீக்கிரம் ஸித்திக்கட்டும் என்று என்னால் சொல்லப்பட்ட
தேவதைகள் என்னைப்போற்றிக்கொண்டு வந்தனம் செய்தார்
கள். ஹே பிரியே! உடனே அதேஸமயத்தில் ஸகல விண்ண
வர்களின் பொருட்டு எவ்வித சுகத்தைப்பெறுவதற்கும் முக்
கிய காரணமான சிறந்த ஞானோபதேசத்தைச் செய்தேன்.
அந்த வுபதேசத்தைப் பெற்றவுடன் அவர்களனைவரும் ம
ஹாத்மாக்களாகவும் ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவர்களாயும்

நித்ய முக்தர்களாகவும் இருதகிருத்யர்களாயுமிருந்துகொண்டு அதிகமான ஸந்தோஷத்தையடைந்து ஞானோபதேசத்தின் பலத்தால் பூதம் பவிஷ்யத் வர்த்தமான மென்கிற முக்காலங்களையும் நன்கறிந்து விசேஷமானதேஜஸ்ஸுடன் கூடியவர்களாயிருந்துகொண்டு அந்த க்ஷேத்திரத்திலேயே சுகமாய் வஸித்தார்கள். க்ஷேத்திரங்களுக்குள் உத்தமமாயும் ஸமஸ்த ஐசுவர்யத்தையும் கொடுக்கிறதாயுமான இந்த க்ஷேத்திரத்தில் உமாதேவிக்காகவும் ஜம்புமஹரிஷிக்காகவும் நானும் வஸிக்கிறேன் என்று ஸ்ரீபகவான் கூறினார். இவ்வசனத்தைச் செவியுற்ற ஸ்ரீநந்திகேசுவரர் கிரீசனைநோக்கி ஜம்புமஹரிஷியால் அந்த க்ஷேத்திரத்தில் எந்தப்பிரகாரம் தபஸ் செய்யப்பட்டது? எவ்வெவர் தவத்தால் தாங்கள் பிரீதியையடைந்து அந்தவிடத்திலேயே ஸான்னித்நியத்தையடையும்படி நேர்ந்திருக்கிறதோ? தேவியான பார்வதியினால் தனியாக அங்கு செல்லுவதற்கு யாது காரணம்? உலகிலுள்ள ஸகல க்ஷேத்திரங்களைக்காட்டிலும் அதுவே சிறந்ததென்பதற்கு என்ன காரணம்? இந்த விஷயங்களைப் பூராவும் விஸ்தாரமாகக்கேட்கவிரும்புகிறேன் என்று பிரச்னம் செய்து நமஸ்கரித்து கணநாயகர் மஹாதேவருடைய அனுக்கிரகத்தை எதிர்பார்த்துக்கொண்டு அஞ்சலிபந்தத்துடன் வணக்கமாக நிற்கும்பொழுது ஈசுவரனும் ஹே நந்தி! உன்னால் எது வினவப்பட்டதோ அதைவிஸ்தாரமாகக்கூறுகிறேன்; இதுவரையில் ஒருவருக்கும் நான் இதைச்சொல்லவில்லை. மிகவும் ரகஸ்யமானது. ஜாகரூகனாகக் கேட்கவேண்டு மென்று அறிவித்துக் கூறத்தொடங்கினர். எப்பொழுதும் அதிகப்பிரவாஹத்துடன் கூடின ஸஹ்யபர்வதத்தின் புத்திரியான காவேரிநதியானது அந்தவிடத்தில் பிரவாகமாக ஓடுகின்றது. அதனுடைய அழகான அந்தரீபத்தில் (திட்டில்) இடைவெளியில்லாமல் நெருக்கமாயிருக்கிற இலைகளின் கூட்டங்களால் தடுக்கப்பட்ட சூரியகிரணங்களையுடையதாயும் மிகவும் மதத்தை

யடைந்தவைகளான கோகிலபக்ஷிகளால் மதுரமாய் கானம் பண்ணப்பட்டதாயும் விளையாடுகின்ற குரங்குக்கூட்டங்களால் நன்கு அசைக்கப்பட்ட மரங்களால் பிரகாசிக்கின்றதாயும் புன்னை நாகை நாரங்கம் நாககேஸரம் தால தமால அங்கோல சம்பக அசோக திலக லவங்க அர்ஜுன தாழை பிரியங்கு பிலா வாழை தென்னை ஆலே ஸல்லகி புளி ப்லக்ஷ எலுமிச்சை வேம்பு மாதுலங்கம் முதலான விருக்ஷங்களால் நிரம்பியதாயும் ஜாதி மாலதீ மல்லிகா மரு மருதாணி ரோஜா முதலிய புஷ்பங்களால் இழுக்கப்பட்ட பிரமரங்களையுடையதாயும் அதிகப்பனியின் ஸம்பந்தத்தால் விருத்தியடைந்திருக்கும் மாதுளம்பழங்களையுடையதாயும் பெண்கஜங்களிடம் மோகம்கொண்ட யானைக்கூட்டங்களால் நிபிடமாயும் தானாகப்பழுத்துக்கனிந்து வெடித்தவாழைப்பழங்களிலிருந்தும் பெரிய நார்த்தம்பழத்திலிருந்தும் பெருகிவிழுகின்ற ரஸங்களால் நிரம்பிய நிர்மலமான தீர்த்தங்களுடன் கூடியதடாகங்களையுடையதாயும் புதியதாக உண்டாகும் பலபுஷ்பங்களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்டதாயும் சீதளமான நிழல்களால் மிகவும் குளிர்ச்சியுடன் கூடியதாயும் வேறு இடத்தில் பார்க்கமுடியாததாயும் பாபங்களின் பிரவேசத்திற்கு இடமில்லாததாயும் விவாதமென்பதையே அறியாததாயும் ரஜோகுணமுடையவர்களுக்கு விஷயமில்லாததாயும் ஸகல புருஷார்த்தங்களுக்கும் இருப்பிடமாயும் சிவயோகிகளுக்கு ஆச்ரயமாயும் ஸகல தபஸ்களும் சேர்ந்துவஸிக்கும் ஸ்தானமாயும் ஐச்வர்யங்களுடைய கூட்டமாயும் எப்பொழுதும் பஸ்மருத்திராக்ஷதாரிகளாய் ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜபத்தையே ஜபித்துக்கொண்டிருப்பவர்களும் ஜடாவல்கலங்களுடன் கூடியவர்களுமான மஹர்ஷிஸங்கங்களால் சூழப்பட்டதாயும் சிவார்ச்சனத்திலும் சிவத்யானத்திலும் அதிக ஊக்கம்கொண்ட சிவபக்தர்களால் ஸேவிக்கப்பட்டதாயும் மிகவும் சிரேஷ்டமான ஜம்பூவனமென்று ஒருவனமிருக்கின்றது.

அந்தவனத்தில் ஒருதடவை பஞ்சாக்ஷரமென்கிற மஹாமந்திரத்தை ஒருவன் ஜபித்தால் உடனே அவன் ஸகலபாபங்களிலிருந்தும் விடுபட்டு முக்தனுகிறுன் என்பது நிச்சயம். இவ்விடத்தில் பசியால் வருந்துகிற ஒருவனுக்கு ஒரு வேளைபோஜனம் கொடுத்தால் அதனுல் நூறு அச்வமேதயாகம் செய்தபலனைக் காட்டிலும் அதிகபலமேற்படுகின்றது. வேறுக்ஷேத்திரங்களில் பலவருஷங்கள் தவம்செய்வதாலேற்படும் புண்யம் இந்தக்ஷேத்திரத்தை ஸ்மரித்தமாத்திரத்தில் உண்டாகின்றது. இதுவே மகாமேரு காசீ கேதாரம் என்று பெயர்கொண்ட இம்மூன்று ஸ்தலங்களாகவும் ஞானக்ஷேத்திரமென்கிற வேறு பெயரால் சொல்லப்படுகின்றது. தவம் தர்மம் பிறருடைய ஸகாயம் தீர்த்தம் நிழல் ஆஸநம் பத்ரீ முதலானவைகளால் ஏற்படும் சுகத்தை இந்த ஞானக்ஷேத்திரத்திற்கு ஸமமாக வேறு இடத்தில் அடையமுடியாது. தர்மத்தைக் கெடுத்தவனுயிருந்தாலும் செய்த நன்றியை மறந்தாலும் ஸாதுஜனங்களை ஹிம்ஸித்தாலும் விருஷபாரூடரான ஸ்ரீஜம்புநாதனைத் தர்சித்தமாத்திரத்தால் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறுன். ஜம்புபதியை தர்சிப்பதற்காக ஞானக்ஷேத்திரத்திற்குப் போகிறேன் என்று நினைத்த மாத்திரத்தில் உடனே சித்திரகுப்தன் இவனுடைய பாபகர்மாக்களைக் கணக்கில் அடித்து விடுகிறுன். ஜம்புநாதருடைய சாணுரவிந்தங்களை எப்பொழுது நான் தர்சிப்பேன் என்று எவன் ஸ்மரிக்கிறுனே அவனைவிட்டு நூறு ஜன்மாக்களில் செய்யப்பட்ட அவன் பாபங்கள் விலகி விடுகின்றன. வித்யைகளாலும் மிகுந்த ஐசுவர்யங்களாலும் யாதொரு ஸம்ஸார ரோகமானது நிவர்த்தியடையாதோ அந்த ரோகம் ஞானக்ஷேத்திரத்திற்கு போகவேணுமென்று முயற்சி மாத்திரத்தால் பூராவும் நாசத்தையடைகின்றது. ஞானக்ஷேத்திரத்திற்குப் போகிறேனென்று எவன் ஏழு அடி பெயர்த்து வைக்கிறுனே அவனுடைய ஏழு ஜன்மாக்களுடைய பாபங்

கள் நாசமடைகின்றன. இதில் சந்தேகமில்லை. காமம் முத
லான ஆறு சத்துருக்களும் தாரித்திரியமும் இவனைவிட்டுவில
கிவிடுகின்றன. பிர்ம்மாவால் இவன் அக்ஞானி என்று எழு
தப்பட்ட லலாடலிபியோடுகூட எவன் இந்த க்ஷேத்திரத்தில்
பிரவேசிக்கிறானோ அவனுக்கு அக்ஞானமாகிற இருட்டு நசி
த்து ஞானசூரியன் உதயமாகிறான். இங்கு வந்தவுடன் மன
மாகிற தாமரைமலர் நன்கு விகஸிக்கின்றது. ஸ்ரீஜம்புபதியை
பக்தியாய் ஸேவிக்கும் ஸ்திரீகளுக்குச் சிறந்த அழகு அதிக
ஐசுவர்யம் தீர்க்காயுளையுடைய பலபுத்திரர்கள் சரீர ஸௌக்
யம் முதலியவைகள் உண்டாகின்றன. சாஸ்திரீயமான மார்
க்கத்தைத்தாண்டி கெட்டகாரியங்களைச் செய்து அதனால்
அக்ஞானம் மேலிட்டு தாரித்ரியத்தையடைந்து கஷ்டத்தை
வகித்தாலும் ஸ்ரீஜம்புநாதருடைய சரணகமலங்களைச் சிரத்
தையுடன் எவர்கள் தர்சிக்கிறார்களோ அவர்களுக்குத் தன
மதத்தினால் அந்தர்களாயும் லோபமுள்ளவர்களுமான செல்
வவான்களின் முகத்தைப் பார்க்கவேண்டியதில்லை. ஜம்புநா
தருடைய அனுக்கிரகத்தால் எல்லா ஸித்திகளுமவனுக்கேற்
பட்டுவிடும். ஞானக்ஷேத்திரத்தில் விளங்கும் காவேரியில்
எவர்கள் ஸ்நானம் செய்கிறார்களோ அவர்களுக்கு முன்ஜன்
மாவில் செய்யப்பட்ட பாபம் நசித்துவிடும். பிறகும் பாபம்
அணுகாது. சிறந்த வம்சம் நல்லஸ்வபாவம் தனம் ஜயம் ரூ
பம் தபஸ் பலம் இவைகள் உண்டாகின்றன. ஜம்புநாதரு
டைய கதையை எவனுடைய காதுகள் கேட்கவேண்டுமென்
று விரும்பவில்லையோ அவனுக்கு தனத்தால் மதங்கொண்ட
வனும் கெட்டவார்த்தைகள் பேசும் முகத்தையுடையவனு
மாயிருப்பவனோடு வியவகாரம் நேருமேயல்லாது ஸாதுஸங்
கம் ஏற்படாது. பங்குனியீ நடைபெறும் ஸ்ரீஜம்புநாதரு
டைய உத்ஸவத்தின் முடிவில் அவபிருத ஸ்நானத்தை
செய்கிறவனுக்கு பிறப்பிறப்புக்கள் ஏற்படமாட்டா வென்
பது நிச்சயம். ஒவ்வொரு அமாவாசைதோறும் பக்தியாய்

ஸ்ரீஜம்புபதியை நமஸ்கரித்து அவருடைய தீர்த்தத்தில் ஒருவருஷம் ஸ்நானம் செய்தால் தாரித்ரியம் வியாதி மனக் கலக்கம் பாபஸமூகம் முதலானவைகள் நிவர்த்தியாகிவிடு கின்றன. காலதோஷத்தால் அதிக மழைபொழிந்து எங்கும் வெள்ளப்பெருக்கால் பூமிகளிலிருந்தும் ஒன்றும் கிடைக்கா விட்டாலும் ஞான பூமியில் வஸிப்பவர்கள் பிறரிடம் யாசிக் கமாட்டார்கள். இந்தஞான க்ஷேத்திரத்தின் வைபவத்தால் இங்கு வஸிப்பவர்களுக்கு கௌரவமான வாக்கு நல்லமந்திர ப்பிராப்தி ஜபஸித்தி தபோநிஷ்டை ஸ்திரீசுகம் இவைகள் கிடைக்கும். இங்கு தாம் ஸாப்பிடுவது பிறருக்கு அன்னம் போடுவது தானம் கொடுப்பது தான் தானம் வாங்குவது இவைகளெல்லாம் சிவனின் பொருட்டுக் கொடுக்கப்பட்ட தாக ஆகின்றன. இதர இடங்களில் அனேக பலங்களுடனும் பூர்ணமான பாலுடனும் யாதொரு அன்னதானம் செய்து அதனால் எந்த ஸௌக்கியம் அடையப்படுகின்றதோ அதைக்காட் டிலும் ஞானக்ஷேத்திரத்தில் மிகவும் அற்பமாக எதாகிலும் தானம் செய்தாலும் எட்டுமடங்கு அதிகமாக பலமேற்படு கின்றது. கெட்ட வியாதிகளாலும் தாரித்திரியத்தாலும் பீடி க்கப்பட்டவர்கள் இந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் அமிரு தேசுவாருடைய சரணங்களைத் தியானம் செய்வார்களாகில் அவர்களுக்கு ஒருசிரமமும் ஏற்படாது. ஸ்வர்க்கலோகத்தில் வஸித்துக்கொண்டு அமிருதத்தைப் புசிப்பதைக்காட்டிலும் கஜாரண்யத்தில் பிக்ஷை எடுத்து சிவபக்தர்களுக்கிட்டு உண் பதே சிறந்ததாகும். மஹான்களான பெரியோர்கள் இந்திர னுடைய பாதி ஆஸநம் கிடைத்தாலும் குபேரனுடைய புரத் தில் வஸிக்கும்படி நேர்ந்தாலும் ஸமீப தேசங்களிலுள்ள அரசர்களால் ஸேவிக்கத்தகுந்த ராஜ்யம் கிடைத்தாலும் இவைகளைத் துச்சமாகத்தள்ளிவிட்டு இந்தஞான க்ஷேத்தி ரத்திலேயே வஸிக்கவிரும்புவார்கள்.

பிராணிகளுக்கு யௌவனம் குறைகின்றது. பிராணனும் அவ்விதமே. தனமும் செலவிட்டால் குறையும் என்பதைய றிந்து ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கிறதாயும் எப்பொழுதும் குறைவடையாத சுகத்தையளிக்கிறதுமான இந்த ஞானக்ஷேத்திரத்தில் வஸிப்பது சிரேஷ்டம். இந்த க்ஷேத்திரத்திலிருந்து நான்கு விற்கக்கூடாத ஸாமான்களை வியாபாரம் செய்தாலும் வழியில் நடப்பவர்களிடமிருக்கும் தனத்தை அபகரித்தாலும் ஸேவகாவிருத்தி செய்தாலும் செக்காட்டினாலும் இன்னும் கீழானவிருத்திகளைச் செய்தாலும் இதுதான் உத்தமம். நாயாயிருப்பினும் பன்றியாயிருந்தாலும் காகமாயிருந்தாலும் சண்டாளனாயினும் கழுதைபிறவியாயிருந்தாலும் ஞானபூமியினுடைய எல்லைக்குள் வஸித்தால் அந்தப்பிராணியை தேவசிரேஷ்டனென்றே சொல்லவேண்டும். அற்பங்கூடப் புண்ணியகர்மம் இல்லாதவனும் ஸ்வர்க்கம் முதலான லோகங்களையடைவதற்குத் தகுதியற்றவனுமான ஒருவனுக்கு ஒருஸமயம் ஞானபூமியில் வஸிக்கும்படியான பாக்கியமேற்பட்டு இங்கு வஸித்தால் அவனுக்கு மறுபிறப்பில்லை. அதிக லஜ்ஜையை யுண்டுபண்ணுகிறதாயும் கௌரவத்திற்குக் குறைவைக்கொடுக்கிறதாயுமுள்ள அகங்காரங்கொண்ட தனிகர்களுடைய வீட்டு வாயற்படியில் காத்திருப்பதைக் காட்டிலும் ஞான க்ஷேத்திரத்தில் பிக்ஷை எடுத்துண்டு வஸித்தாலும் விசேஷ ஸுகத்தைக் கொடுக்கும். ஜனங்களுக்கெல்லாம் கஷ்டத்தையுண்டுபண்ணுகிறவனாயிருந்தாலும் மிகவும் துஷ்டனாயிருந்தாலும் ஞான பூமியில் வஸித்தானேயானால் அவன் ஹாலாஹலமென்கிற விஷத்தைப்போல் எனக்கு மிகவும் பிரியமுள்ளவனாகிறான். ஸங்கீதம் ஸாஹித்யம் பெரியோர்களோடு ஸ்நேகம் தாஸிகளுடைய ஸம்பந்தம் இந்நான்கும் ஞானபூமியில் வஸிப்பவர்களுக்கு விடமுடியாது. இங்கு வஸிக்கின்றவர்களுக்கு தவம் நியமம் புண்ணிய தீர்த்தஸ்நானம் தானம் மற்றுமுள்ள

கர்மா இவைகளிருக்கவேண்டுமென்கிற அவச்யமில்லை. எவ னுக்கு பரமேசுவரனுடைய பவித்ரமான நாமஸ்மரணமிருக் கின்றதோ பஸ்மதாரணத்துடன் பஞ்சாக்ஷரஜபத்தை எவன் ஜபிக்கிறானோ எவன் ஞானபூமியில் வஸிக்கிறானோ இவர்கள் நரகத்தை ஒருநாளும் பார்க்கமாட்டார்கள். முக்தி அதிக சிரேஷ்டமாகத் தோன்றியிருந்த பிர்ம்மா இந்திரன் விஷ்ணு இவர்களுடைய லோகங்கள் ஞானபூமியில் வாஸம் ஏற்பட் டபிறகு மிகவும் கீழ்பட்டவைகளாகத் தோன்றுகின்றன. தேவதைகளுக்குள் சிறந்தவரான பிர்ம்மாவைக்காட்டிலும் ஸ்வர்க்கத்திற்கு அதிபதியான இந்திரனைக்காட்டிலும் ஞான பூமியில் வஸிக்கும் நாயானது குணங்களால் மேம்பட்டதா கும். ஞானபூமியில் வஸித்துக்கொண்டு ஸ்ரீசங்கரரை ஸேவிப் பவர்களுக்கு ஸுவர்ணம் நல்லகீர்த்தி இஷ்டமான வரன் ஞானம் மறுபிறப்பில்லாமை இவைகள் கிடைக்கின்றன.

வேறு இடங்களில் யாகம் முதலான கர்மாக்களை யனுஷ்டித்து சிஷ்டர்களாய் விளங்கும் பிராமணர்களுடைய ஆயிரம் பேர்களுக்கு சாப்பாடு போடுவதைக் காட்டிலும் இந்த கஜாரண்யத்தில் நாய்க்கு ஒரு கபளம் அன்னமிடுவதே சிறந்த தர்மமாகும். ஞானபூமி எனப்பெயர்பெற்ற பெட்டி யில் அமிருதேசுவரரென்கிற ரஸமயமான குளிகையானது விளங்குகின்றது. அதானது தன்னை ஸேவிப்பவர்களுடைய பிறப்பிறப்பை விலக்கி விடுகின்றது. இந்த க்ஷேத்திரத்தில் வஸிப்பவர்களுக்கு அமிருதேசுவரர் என்கிற கற்பகவிருக்ஷ மானது அவ்வக்காலங்களில் வேண்டிய பலன்களை யளிக் கிறபடியால் உலகில் அதிக மழையாலும் மழையில்லாமை யாலும் எவ்விதக் கஷ்டங்களேற்பட்டாலும் இவர்களுக்கு சிரமமில்லை. உலகில் பிறப்பையடைந்த ஒருவனுக்கு நக்ஷத் திரம் கெடுதலாயிருந்தாலும் கெட்ட கிரகங்கள் விபரீதமான ஸ்தானங்களிலிருந்தாலும் ஸ்ரீஜம்புநாதருடைய சரணகமல

ங்களை ஸேவித்தால் அதனால் ஸகல துரிதங்களும் நசித்து விடும். மழையில்லாமல் தேசத்திற்கு கஷ்டமேற்பட்டால் பொருளிருக்கிறதென்று மதங்கொண்டவர்களுடைய வீட்டைச் சுற்றாமல் ஸ்ரீஜம்புநாதருடைய ஆலயத்தைப் பிரதக்ஷிணம் செய்தால் ஸகலாரிஷ்டங்களும் நிவர்த்தியாகிவிடும். ஞானபூமிவாஸிகளான ஸ்ரீஜம்புநாதபக்தர்களுக்குப் பிராணிவதம் தாஸீகமனம் பொய் சொல்லுவது முதலியவைகளாலேற்படும் பாபம் வாமாட்டாது. எந்த பாக்யசாலி ஞானக்ஷேத்திரத்தினுடைய எல்லையை விட்டுத்தாண்டாமலிருக்கிறானே அவனுடைய கிருகத்திலிருந்தும் லக்ஷ்மீ ஒருகாலும் வெளியில் போகமாட்டாள். இந்த க்ஷேத்திரத்தில் வேடிக்கையாகவோ ஸ்ரீபகவத்ஸேவையையுத்தேசித்தோ அல்லது பொருளில் ஆசைகொண்டோ எக்காரணத்தாலாகிலும் ஒரு ராத்திரி வஸிப்பவர்களுக்கு மறுபடியும் மாதாவினுடைய குக்ஷியில் பிரவேசம் கிடையாது. இவ்விடத்தில் பிரம்மஹத்தி முதலான பாபங்களைச் செய்திருந்தாலும் ஜம்புபதியை ஒருதடவை ஸ்மரித்தால் ஸகல பாபங்களும் நாசமாகிவிடுகின்றன. கடுகு அளவு ஸுவர்ணமாவது ஒரு காண்டி அன்னமாவது இந்த க்ஷேத்திரத்தில் யாருக்காவது தானம் செய்தால் அந்த ஸுவர்ணம் மகாமேருவுக்குச் சமமாயும் அந்த அன்னதானம் ஸஹஸ்ரபோஜனம் செய்ததற்குச் சமமாகவும் ஆகின்றது. இந்த க்ஷேத்திரத்தில் ஔபாஸநம் என்கிற கர்மாவைச் செய்தால் அது அச்வமேதமென்கிற யக்ஞானுஷ்டானத்திற்கொப்பாகும். இங்கு மூன்று நாள் வஸித்தால் கங்காதீரத்தில் மூன்று கல்பம் வஸித்ததாகும். ஸ்ரீபரமேசுவானுக்கு ஒரு சங்கத்தினுடைய தீர்த்தத்தால் அபிஷேகம் செய்தால் மது, நெய், பால் இவைகளுடன் கூடிய நூறு கோடி கடங்களால் அபிஷேகம் செய்தபலம் கிடைக்கும்.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் 4.

चतुर्थेऽप्युमया पृष्टः शंकरो लोकशंकरः ।
नवतीर्थजमाहात्म्यं वक्ति वक्तृविशारदः ॥

இந்த நான்காவது அத்தியாயத்தில் உமாதேவியால் வினவப்பட்டவரும் ஸகல ஜனங்களுக்கும் சுகத்தையுண்டு பண்ணுகிறவரும் விஷயங்களை நிருபணம் செய்யும் பண்டிதர்களுக்குள் சிறந்தவருமான ஸ்ரீசங்கரர் நவதீர்த்தங்களின் மஹிமையைப்பற்றிக் கூறுகின்றார்:—

இந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் தீர்த்தங்கள் எவ்வளவு? யார் தவம் செய்தார்? எந்தெந்த தீர்த்தம் யாரா ரிடமிருந்து உண்டாயிருக்கிறது? ஸ்நானம் செய்யவேண்டிய முறை எப்படி? எந்த மாதிரி விதிக்கப்பட்டிருக்கிறது? இந்த தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்கிறவர்களுக்கு ஏற்படும் பலம் என்ன? தீர்த்தபாலகர்கள் உண்டா? ஆங்காங்கு தேவதைகள் இருக்கின்றார்களா? அந்தந்த இடங்களில் செய்யவேண்டிய தானம் என்ன? ஜபிக்கவேண்டிய ஜபம் யாது? ஹே கருணாநிதே! உங்களைத்தவிர வேறொருவரால் தீர்த்த வைபவத்தை நன்றாய் கூறமுடியாதென்றும் என்னால் வினவப்பட்ட இந்த ஸகல விஷயங்களையும் எனக்கு சொல்ல வேண்டுமென்றும் ஸ்ரீபார்வதிதேவி தன்பதியைப் பார்த்து வினவுகின்றாள்.

கிரியினுடைய பெண்ணான ஹே கௌரி! சிறந்த புத்தியையுடையவளே! தீர்த்தங்களுடைய மகிமையைக் கேட்பதில் உன்புத்தி சென்றதே, இது மிகவும் சிலாகிக்கத்தகுந்தது. புருஷார்த்தங்களைப் பெறுவதற்கு முக்கிய ஸாதனமாயும் ரகஸியமாயும் சிரத்தையில்லாதவர்களுக்குச் சொல்லக் கூடாததுமான சிறந்த தீர்த்த வைபவத்தை, ஹேதேவி, கூறு

கிறேன் கேள். மிகவும் அழகான இந்த கஜாரண்யத்தில் ஒன்பது தீர்த்தங்களிருக்கின்றன. அவைகளில் ஸகல பாபங்களேயும் நாசம் செய்கிறதாயும் சுத்தமாயுமிருக்கும் பிர்ம்மபுஷ்கரிணீ என்கிற தீர்த்தமானது மிகவும் முக்கியம். மலர்ந்ததான தாமரை கல்ஹாரம் ஆம்பல் நீலோத்பலம் முதலான புஷ்பங்களையுடையதாயும் பெரிதாயும் சலிக்கிறதாயுமான அலைக்கூட்டத்தில் விளையாடுகின்ற அனேக மீன்களையுடையதாயும் அலைகளுடைய பரம்பரையில் கிரீடை செய்கின்ற சக்ரவாகம் காரண்டவம் ஹம்ஸம் முதலான பக்ஷிக்கூட்டங்களையுடையதாயும் மஹான்களுடைய சித்தம்போல் ஸ்வச்சமாயும் சந்திரிகைபோல் சீதளமாயும் மிகவும் ஏழ்மைத்தனத்திலிருக்கும் யாசகர்கள்போல் அதிக லகுவாயும் கரும்பின் ரஸம்போல் மதுரமாயும் பிரகாசிக்கும் ஒன்பது தடாகங்களுக்குள் பிர்ம்மபுஷ்கரிணீ என்கிற ஸரஸ்ஸானது மிகவும் பாவநமானது. மூவுலகங்களிலுமுள்ள தீர்த்தங்களிலும் அதுவே சிறந்தது. எங்கும் பிரஸித்திபெற்றது. பல மஹர்ஷிகளால் அலங்கரிக்கப்பட்ட கரைகளையுடையது. இந்த ஜலத்தில் விளையாடவேண்டுமென்று வந்த திக்பாலகர்களுடைய யானைக்கூட்டங்களால் தம்து திக்கைகளால் பிடுங்கி அடிக்கப்பட்டிருக்கிற தாமரைமலர்களால் அலங்கரிக்கப்பட்ட அலைகளோடு கூடியது. அலைகளில் விளையாடும் ஹம்ஸங்களுக்கும் அலைகளுக்கும் பேதமில்லாமல் ஒரே ரூபமாகக்காணப்படுகின்றது. ஸமீபத்திலிருக்கும் மண் முட்டுக்களில் விழுந்திருக்கும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. ஜலத்தில் இறங்குவதற்காக ஏற்பட்டிருக்கும் விசாலமான படித்துறைகளால் ரமணீயமாயிருக்கின்றது. இவ்விதம் கூறியதைச் செவியுற்ற ஸ்ரீமஹாதேவியானவள் தன் பர்த்தாவை நோக்கி இந்த தடாகத்திற்குப் பிரம்மபுஷ்கரிணீ என்கிற பெயர் எப்படி ஏற்பட்டது என்பதை எனக்குச் சொல்லவேண்டுமென்று வேண்ட ஸ்ரீசந்திரசேகரர் கூறுகின்றார்.

முன்னொரு ஸமயத்தில் சிருஷ்டி ஆரம்ப காலத்தில் பிர்ம்மாவானவர் இந்த ஸகல உலகங்களையும் சிருஷ்டித்துத் தன் சரீரத்தைப் பாதுகாக்கவேண்டி ஒருபுத்திரியையும் உண்டுபண்ணினார். அவளிடம் தானேபிரவேசிப்பது கூடாது பாபம் என்பதைக் கவனியாமல் பிர்ம்மா பெண்ணான அவளிடத்தில் தான் போகத்தை அனுபவித்தார். அந்த தோஷத்தால் அவளால் சிருஷ்டிக்கப்பட்ட பிரஜைகள் பூராவும் ஜரைமரணம் இவைகளுடன் கூடியவர்களாயும் அற்பமான ஆயுளையுடையவர்களாயும் ஆனார்கள். இதையறிந்த பிர்ம்மா நம்மால் உண்டுபண்ணப்பட்ட ஜனங்கள் இவ்விதம் ஆய்விட்டனரேயென்று வெறுப்பையடைந்து வைராக்கியம் பெற்று கடுந்தவத்தாலும் ஸ்தோத்திரங்களாலும் என்னை ஸந்தோஷப்படுத்திவைத்தார். நானும் அந்த ஸந்தோஷத்தால் மிகவும் சிறந்ததான பஞ்சாக்ஷரமென்கிற மந்திரத்தை அவருக்குபதேசித்து மிகவும் பக்தியுடனும் வணக்கத்துடனும் கூடிய அவருக்கு அடியில் வருமாறு உபதேசித்தேன். மண்ணுலகில் காவேரி நதிக்கரையில் ஜம்பூவனமென்று ஒரு க்ஷேத்திரமிருக்கின்றது. அதின் மத்தியில் இஷ்டமான ஸகலபலன்களையும் கொடுக்கும் சக்திவாய்ந்த புஷ்கரிணீ என்கிற ஒரு ஸரஸ்ஸானது இருக்கின்றது. நீ அங்கு சென்று என்னுடைய லிங்கத்தைப் பூஜித்து தபஸ் செய். அவ்விதம் செய்தால் பிரவேசிக்கக்கூடாத புத்திரியினிடம் பிரவேசித்ததால் ஏற்பட்ட தோஷத்திலிருந்தும் விடுபட்டவராயும் சிறந்த ஞானத்தையுடையவராயும் ஆகி, நீர் நித்யராகவும் ஆவீர் என்று சொன்னேன். என்னுடைய ஆக்ஞாப்பிரகாரம் பிர்ம்மாவும் அனுஷ்டித்து வெகுகாலத்திற்குப்பிறகு நித்யத்வத்தையும் பெற்றார். அந்த புஷ்கரிணீ கரையில் சங்கரநாதர் என்று பெயர் கொண்ட லிங்கம் இப்பொழுதும் காணப்படுகின்றது. அதுமுதற்கொண்டு அந்த ஸரஸ்ஸானது பிர்ம்மபுஷ்கரிணீ என்று பிரஸித்தி பெற்றிருக்கிறது. முன் ஒரு காலத்

தில் இந்திரன் விருத்திராஸுரனை வதம் செய்து அதனால் சினங்கொண்ட பயங்கரமான ராக்ஷஸர்களால் சூழப்பட்டவனாய்க்கொண்டு பயந்து என்னை நமஸ்கரித்து என்னுடைய தடாகத்தினுடைய மேல்கரையில் தபஸ் செய்தான். அந்த புண்யதீர்த்தமானது பாபங்களைப் போக்க வேண்டுமென்று எண்ணங்கொண்ட மஹர்ஷிக்கூட்டங்களால் ஸ்நாநம் செய்யப்பட்டதாயும் கரையிலிருந்து பல ஸாதுக்களால் ஜபம் செய்யப்பட்டதாயும் விளங்குகின்றது. மஹாபாதகமென்னும் பாபத்தைச் செய்தவனாயிருந்தாலும் இந்தத் தடாகத்தில் யதிருச்சையாய் ஒருதடவை ஸ்நாநம் செய்தால் அப்பாபம் விலகிவிடுகின்றது. இங்கு வந்து ஸ்நாநம் செய்து தவம் பண்ணினபடியால் இந்திரன் ராக்ஷஸருடைய பயத்திலிருந்தும் விடுபட்டு ஸ்வாராஜ்யத்தையடைந்தான். அதுமுதற்கொண்டு இந்திரபுஷ்கரிணீ என்கிற பெயராலும் அழைக்கப்படுகின்றது. ஜம்பூமுனி என்ற பெயர் கொண்ட பிரஸித்தான ஒரு மஹர்ஷி அதிகமான தபஸ்ஸை இங்கு செய்தார். பின்னும் என்னிடத்தில் விசேஷ பக்தியுடையவராய்க்கொண்டு இந்த புஷ்கரிணீயினுடைய கரையில் பஞ்சாக்ஷரஜபத்தை ஜபித்துக்கொண்டு எப்பொழுதும் என்னையே தியானித்துவந்தார். ஸகல லோகங்களையும் என்னுடைய ஸ்வரூபமாக பாவனை செய்து கொண்டிருந்த அம்முனிவர் என்னுடைய அனுக்கிரகத்தால் ஸித்தி பெற்றார். பாசிக் கொடிகளிலிருந்தும் கிளம்பி சுற்றுகின்றதான மீன் கூட்டங்களால் அடிக்கப்பட்டிருக்கிற தாமரைப் புஷ்பங்களையுடையதாயும் நன்றாய் மலர்ந்ததான ஆம்பல் வனங்களுடைய அதிகமான வாஸனைகளால் நிறைந்ததாயும் அதில் ஸ்நாநம் செய்யும் மானிடர்களுக்குப் பாபங்களைப் போக்கி ஐசுவர்யங்களையும் மோக்ஷத்தையும் அளிக்கிறதாயுமான அந்தத்தீர்த்தம் அதுமுதல் ஜம்பு தீர்த்தமென்று மூன்றுலகங்களிலும் பிரஸித்தி பெற்றது. ஜம்பு முனிவரால்

அர்ச்சிக்கப்பட்டலிங்கம் இன்னும் அதன் கரையில் காணப்படுகின்றது. ஸ்ரீராமனிடத்திலிருந்து விபீஷணர் ரங்கவிமானத்தையடைந்து அதைத்தன் பட்டணத்திற்குக் கொண்டு போகவேண்டுமென்று கருதி ஸாயங்காலத்தில் காவேரியினுடைய மணலில் அதை வைத்து விட்டு உடனே அதை எடுப்பதற்கு முடியாமல் கஷ்டப்படும் பொழுது இவருக்கு ஸ்வப்நத்தில் ஸ்ரீநாராயணன் ஞானபூமியினுடையவும் காவேரியினுடையவும் சோளபூமியினுடையவும் வைபவங்களைக் கூறி என்னிடத்திலிருக்கும் பக்தியையும் அவரால் செய்யப்பட்ட பிரதிஷ்டையையும் தனக்கு ராக்ஷஸர்களிடமிருந்து ஏற்பட்ட பயம் விலகவேண்டி என்னை ஸேவிப்பதற்காக ரங்க க்ஷேத்திரத்தில் தனக்கு ஏற்படும் வாஸத்தையும் சொல்லப் போகிறார். இவ்விதம் ரங்கபதியால் கூறப்பட்ட ஞானபூமியை விபீஷணர் அடைந்து ராமபக்தான அவர் என்னை நமஸ்கரித்து கஜாரண்யத்திற்கும் ரங்கதீர்த்தத்திற்கும் மத்தியில் லோகக்ஷேமத்தின் பொருட்டு லிங்கம் தீர்த்தம் இவைகளைப் பிரதிஷ்டை செய்வார். அந்த லிங்கம் நீலவிஷ்ணுநாதர் என்றும் அந்தத் தீர்த்தம் ராமதீர்த்தமென்றும் வியவகரிக்கப்படுகின்றது. ஹே தேவி! ஒரு ஸமயம் நீ என்னுடைய ஆலயத்தை யடைந்து எனக்குப் பாதசுத்தி செய்வதற்கு ஜலத்தைத் தேடியும் அங்கு கிடைக்காமல் சுத்தமான ஸகலதீர்த்தங்களையும் வரவேண்டி நீ ஸ்மரித்தாய். ஹே பிரியே! உன்னுடைய அபிப்பிராயத்தை யறிந்த ஈசனான என்னுடைய கடைக்கண்ணிலிருந்தும் உடனே ஸகல தீர்த்தங்களும் கர்ப்ப கிருகத்தில் உண்டாகப் போகின்றன. அந்தத் தீர்த்தங்களை நீ பார்த்து ஸ்ரீமத் தீர்த்தமென்று பெயரிடப் போகிறாய். என்னுடைய மூலஸ்தானத்திலிருக்கும் அந்த தீர்த்தத்தை அதுமுதற்கொண்டு ஸ்ரீமத் தீர்த்தமென்று வித்வான்களும் கூறுவார்கள். வருணனுடைய பத்னியான நதியை ஒரு ஸமயம் அக்னி இச்சைகொண்டு பிரவேசித்

தான். உடனே ஸுவர்ணமயமான அவனுடைய வீர்யம் பூராவும் விழுந்துவிட்டது. தன்னுடைய தேஜஸ்ஸைப் பெற வேண்டி அக்னியானவன் இந்த கஜாரண்ய க்ஷேத்திரத்தை யடைந்து தவம்புரிந்தான். இங்குள்ள தடாகத்தில் ஸ்நாநம் செய்து என்னை நமஸ்கரித்து வரன் வேண்டுமென்று யாசித்தான். அவனுக்கு எப்பொழுதும் மேல்நோக்கும் தேஜஸ்ஸை யுடையவனாகவும் ஸகல தேவதைகளுக்கும் முகமாகவும் இருக்கவேண்டுமென்று அவனால் விரும்பப்பட்ட வரன்களை யளித்தேன். கஜாரண்ய க்ஷேத்திரத்திற்குக் கீழ்ப்பாகத்திலிருக்கும் அந்தத் தடாகத்திற்கு அக்னி தீர்த்தமென்று பெயர். அந்தத் தீர்த்தத்தை தொட்டாலும் பாத்திரங்களால் எடுத்து ஸ்நாநம் செய்தாலும் இறங்கி நன்றாய் அவகாஹ ஸ்நாநம் செய்தாலும் ஸகல இஷ்டங்களையும் அடைவார்கள். பின்னொரு ஸமயம் தென்தேசமானது உயரக்கிளம்பின ஸமயத்தில் அதை ஸமமாகச் செய்யவேண்டி என்னுடைய ஆக்ஞையின் பேரில் புறப்பட்டு வந்த அகத்தியமாமுனிவர் இந்த க்ஷேத்திரத்திற்கு வந்து சேருவார். உன்னுடைய ஸந்நதியிலிருக்கும் தடாகத்தினுடைய தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து நம்மிருவர்களையும் ஸேவிக்கப் போகிறார். அவ்விதம் ஸேவித்துத் தன்னுடைய இஷ்டஸித்தியையும் பெறப் போகிறார். அந்த ஸரஸ்ஸிற்கு அகஸ்திய தீர்த்தமென்றும் பெயர் ஏற்படப் போகின்றது. மேலும் கச்யபப்பிரஜாபதியால் கோபத்தையடைந்து சபிக்கப்பட்ட சந்திரன் ஒளியிழந்தவனாகவும் ரோகிணியினுடைய சாபத்தாலும் இதர ஸ்திரீகளுடைய சாபத்தாலும் ராஜயக்ஷ்மா என்று சொல்லப்பட்ட மஹாரோகத்தால் பீடிக்கப்பட்டவனாகவும் ஆய்விட்டான். கஜாரண்ய க்ஷேத்திரத்திலுள்ள இந்த புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்து பஞ்சாக்ஷரமென்கிற மஹாமந்திரத்தை ஜபித்துக்கொண்டு புன்னாக விருக்ஷத்தினடியில் கிரீஷ்மருதுவில் பஞ்சாக்னிமத்தியிலும் வர்ஷாகாலத்தில் கழுத்தளவு

ஜலத்திலுமிருந்துகொண்டு இலை, ஜலம், காற்று இவைகளை யே புசித்துக்கொண்டு கடுந்தவம் புரிந்தான். அத்தவத்தால் மகிழ்ந்த நான் அந்தத் திங்களின் பொருட்டு மகாரோகத்து க்கு நாசத்தையும் மூவுலகங்களும் கண்டுகளிக்கும்படியான அமிருதமயமான சரீரத்தையும் சிறந்த காந்தியையும் கொடு த்தேன்.

அதுமுதல் பெரியோர்கள் இந்த தீர்த்தத்தை சந்திர புஷ்கரிணீ என்று கூறுகிறார்கள். ஸ்ரீபதியான விஷ்ணுவான வர் சந்திர புஷ்கரிணீ தீரத்தில் என்னை ஸேவிக்க வேண்டி வரப்போகிறார். அவருக்கு நித்யோத்ஸவத்தையும் ஞானத் தையும் கொடுக்கப் போகிறேன். ஸர்வ லோகங்களுக்கும் பிரகாசத்தைக் கொடுக்கக் கூடிய தேஜஸ்ஸை யுடைய வேண்டுமென்று சூர்யன் தடாகத்தினுடைய கரையில் தேவ வருஷத்தில் ஆயிரம் வருஷம் தவம் புரிந்தான். பிறகு என் னால் கொடுக்கப்பட்ட வரத்தால் ஆயிரம் கிரணங்களையு டையவனாகவும் இருட்டுக்குச் சத்துருவாகவும் ஆனான். அந்த ரவியினுடைய பெயரால் சூர்ய புஷ்கரிணீ என்று எங்கும் பிரஸித்தி பெற்றதாய்க்கொண்டு மிகவும் பரிசுத்த மான அந்தத் தீர்த்தமானது பல மஹான்களாலும் இன் னும் ஸேவிக்கப்படுகின்றது.

இவ்விதம் அநேகம் பெரியோர்களால் ஸேவிக்கப்பட் டதும் நிர்மலமாயும் புண்ய ரூபமாயும் சஜவன மத்தியில் விளங்குவதுமான அநாதியான தீர்த்தங்களை எவர்கள் தர் சனம் செய்கிறார்களோ எவர்கள் புரோக்ஷித்துக் கொள்ளு கிறார்களோ அவர்கள் ஸகலபாபங்களிலிருந்தும் விடுபட்டுப் பூர்ணமான ஆயுள் ஐசுவர்யம் ஆரோக்கியம் முதலான சிரே யஸ்ஸைப் பெற்று சுகித்திருப்பார்கள்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் 5.

पञ्चमे पार्वतीकान्तः प्राकृतस्नानविधिं स्फुटम् ।
दानद्रव्यादिकं मन्त्रान्देव्यैनिर्द्वीपरं हरः ॥

இந்த ஐந்தாவது அத்தியாயத்தில் ஸ்ரீபார்வதிபதியான பரமேசுவரன் பத்நியின் பொருட்டு புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்யவேண்டிய முறையையும், தானம் செய்ய வேண்டிய திரவ்யம் முதலானவைகளையும், அவைகளுக்கு வேண்டிய மந்திரங்களையும் சொல்லுகிறார்:—

ஹே தேவி! பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஸ்திரீ இவர்களுக்கு வேண்டிய ஸ்நாநவிதியைக் கூறுகின்றேன். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்கிற இம்மூன்று ஜாதிகளும் மந்திரபூர்வகமாகச் செய்யவேண்டும். ஸ்திரீகளும் சூத்திரர்களும் தந்திரத்தால் அநுஷ்டிக்கவேண்டும். ரோகம் பாபம் இவைகளுடைய நிவிருத்தியையும் ஐசுவர்யம், புத்திரன், மோக்ஷம் இவை களையும் இச்சிப்பவர்கள் நவதீர்த்த ஸேவையைச் செய்ய வேண்டும். அவர்கள் பௌர்ணமியன்று விடியற்காலையில் எழுந்திருந்து செய்யவேண்டிய விதிகளை முடித்துக்கொண்டு அரசமரம், நாகமரம், ஆல், வில்வம், புளி, துளசி இவைகளு டைய பத்திரங்களும், அருகம்புல்லும், பஞ்சகவ்யமும் யா னை, குதிரை, பசு, எள்ளு, நெய், கோதுமை, வெல்லம், தான் யம், ஈசுவரலிங்கம், வஸ்திரம், ரத்தினம், ஸுவர்ணம் இவை களை எடுத்துக்கொண்டு என்னுடைய மண்டப மத்தியில் போய் அங்கு முப்பதடி விஸ்தீர்ணமுள்ள ஒரு மண்டலம் ஏற்படுத்தவேண்டும். பிறகு பக்தியுடன் சந்தனம், புஷ்பம், பலம் இவைகளால் விக்னேசுவரரைப் பூஜித்து ஹே கண திப! இப்பொழுது என்னால் செய்யப்படும் ஸ்நாநகர்மாவை

நீர் யாதொரு இடையூறுமின்றி பூர்த்தியடையும்படி செய்ய வேண்டும் என்று பிரார்த்திக்கவேண்டும். பிறகு திரியம்பகம் என்கிற மந்திரத்தால் தீர்த்தத்தைத் தொடவேண்டும். உத்பூய சுந்தத்வம் என்கிற மந்திரத்தால் மூன்று தடவை புரோக்ஷணம் செய்துகொள்ளவேண்டும். அப்பால் வேதத்தில் கூறப்பட்ட மந்திரங்களால் பஞ்சகவ்யம், துளஸி, அருகம்புல்லு, மிருத்து இவைகளையும் கொடுக்கவேண்டும். பிறகு शिवः प्रदाता च शिवो प्रहीता ஸகலப்பிராணிகளுக்கும் விரும்பியதைக் கொடுப்பவர் சிவன்தான். கொடுப்பதைப் பெற்றுக்கொள்ளுகிறவரும் சிவன்தான். கொடுக்கத்தகுந்தவரும் அவர்தான். அவரைக் காட்டிலும் வேறான வஸ்து அற்பம்கூட இல்லை. ஆகையால் அவ்வித சிவன் கொடுக்கத்தகுந்த இந்த வஸ்துக்களைப் பரிசுத்தமாகப் பண்ணட்டும். என்னுடைய இந்தக் காரியத்தைப் பூர்த்தி செய்யட்டும். என்று பிரார்த்தித்து வந்தனம் செய்து பிறகு பைரவருடைய ஸமீபத்தை யடைந்து அவருடைய அனுக்ஞையையும் பெற்று அதற்குப்பிறகு அக்னிதிக்கிலிருக்கும் விதிபுஷ்கரிணீ என்கிற தடாகத்தின் கரையில் விளங்கும் மாமரத்தை நமஸ்காரம் செய்து தொடவேண்டும். பிறகு பிரம்மா, முனிகள், சங்கரர், இந்திரன், தேவதை இவர்களை நமஸ்கரித்து மனதில் தியானிக்கவேண்டும். அங்கு விளங்கும் புஷ்பதந்தன் என்று பெயர்கொண்ட கணேசனையும் அடிபணிந்து பிறகு मृत्तिके हन मे पापं என்கிற மந்திரத்தால் பஞ்சகவ்யத்தாலும் மிருத்துக்களாலும் சரீரத்தில் பூசிக்கொள்ளவேண்டும். ஸாவித்ரீமந்திரத்தால் கோமூத்திரத்தையும் गंधद्वारा என்கிற மந்திரத்தால் கோமயத்தையும் पयस्व आप्यायस्वेति–दधिक्रावादधीति–शुक्रमसी என்கிற மந்திரங்களினால் பால், தயிர், நெய் இவைகளாலும் தனித்தனியாகச் சரீரத்தில் பூசிக்கொள்ளவேண்டும். हिरण्यशृङ्ग என்கிற மந்திரத்தைச் சொல்லி ஸ்நாநம் செய்யவேண்டும். ஸ்நாநம் செய்து தேவதைகள், ரிஷிகள், பிதுர்க்கள் இவர்

களுக்கு திலதர்ப்பணம் செய்யவேண்டும். பிறகு எள்ளையும் மந்திரத்தைச் சொல்லி தானம் செய்யவேண்டும். எள்ளு தானத்தால் சேரக்கூடாத ஸ்திரீகளுடைய போகத்தால் ஏற்படும் தோஷத்திலிருந்தும் விடுபட்டு பூர்ணமான ஆயுளையும் அடைகிறான். திலங்கள் பிதுருக்களுக்குப் பிரீதியைக் கொடுக்கின்றன. ஸகல பாபங்களையும் அபகரித்துவிடும். ஸ்ரீபரமேசுவரனும் தில்தானத்தால் ஸந்தோஷத்தை யடைந்தவராய்க் கொண்டு சிறந்த ஆயுளைக் கொடுக்கிறார். பிறகு இந்திரவாபீ என்கிற தடாகத்தின் கரையை யடைந்து தேங்காயை நமஸ்கரித்து சிவனுடைய நாமாவை உச்சரிக்கவேண்டும். இந்தத்தீர்த்தத்திற்கு இந்திரன் தேவதை. கும்போதரன் என்று பெயர் வாய்ந்த ஒரு கணம் இதை ரக்ஷிக்கிறது. இந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து க்ஷேத்திரபிண்டம் போட்டுப் பிதிருக்களுக்குத் திருப்தி செய்து வேதாத்யயனம் செய்த பிராமணர்களின் பொருட்டு நெய்தானம் செய்யவேண்டும். அதுவும் தக்ஷிணையுடன்கூடவும் ஒருபடி அளவுள்ளதாகவுமிருக்கவேண்டும். அப்படி செய்தால் பிராமணக்ஷத்திரியவைசியர்களுடைய வதத்தால் நேர்ந்த தோஷத்திலிருந்தும் விடுபடுகிறான். தானம் செய்த பிறகு

प्रियं धाम शिवस्यैतत् घृतमस्तु शिवार्पणम् ।

तस्मात् घृतस्य दानेन प्रीयतां मे सदाशिवः ॥ என்கிற இந்த மந்திரத்தைச் சொல்லவேண்டும். பிறகு சமீபத்திலிருக்கும் ஜம்புமஹர்ஷியை வந்தனம் செய்து வஸிஷ்டரை ரிஷியாக உடையதாயும் மஹேசுவரனை என்னை தேவதையாகவுடையதாயும் ஸநந்தன் என்பவனால் ரக்ஷிக்கப்பட்டதாயுமிருக்கிற அந்த ஜம்புதீர்த்தத்தில் பரமேசுவரனுடைய பெயரைச் சொல்லிக்கொண்டு ஸ்நாநம் செய்யவேண்டும். ஸ்நாநமானவுடன் ஆத்மவித்தான பிராமணர்களின்பொருட்டு கோதுமையைக் கொடுக்கவேண்டும். இதற்கு மந்திரம் :—

गोधूमो देवताहारः शुचिः पापापनोदनः ।
तस्य दानेन भूतेशः प्रियतां पाशमोचकः ॥

என்று சொல்லவேண்டும். இவ்விதம் செய்தால் பாபங்களி லிருந்தும் விடுபட்டு ஜம்புமஹர்ஷியைப்போல் வைராக்கி யத்தையடைந்து எதெதை விரும்புகிருனே அதைதைப் பெறுகிருன். பிறகு மேல் கரையில் ராமதீர்த்தமிருக்கி ன்றது. அங்கு சென்று மதுகர் என்கிற தேவதையை நமஸ் கரித்து இந்த தீர்த்தத்திற்கு ரிஷியான ஸ்ரீராமரையும் தேவ தையான ஸ்ரீநீலஹரீச்வரரையும் தியானம் செய்துகொண்டு இந்தத்தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து ஸ்ரீராமரின் பொருட்டு வந்தனம் செய்யவேண்டும். பிறகு

गुडं तु रसवच्छ्रेष्ठ शिवभक्तिरसप्रदम् ।
तस्मात् गुडस्य दानेन शंकरः प्रीयतां सदा ॥

என்கிற இந்த மந்திரத்தைச் சொல்லி பிர்ம்மவித்தான துவிஜ ரிடம் வெல்லத்தை தானம் செய்யவேண்டும். இவ்விதம அனுஷ்டிக்கிறவன் உபபாதங்களிலிருந்தும் விடுபட்டு வித் யாதரர்களால் போற்றப்படுகிருன்.

ஸகல ஐசுவர்யத்தையும் கொடுக்கிறதாயும் என்னு டைய ஹ்ருதயத்திலிருப்பதாயும் என்னுடைய சரணமூலத் திலிருந்தும் வெளிவந்ததாயுமான ஜம்பு தீர்த்தத்தை யடை ந்து நமஸ்காரம் செய்து, அந்த தீர்த்தத்திற்கு முனியான கார்க்கியரையும் அமிருதேசுவரர் என்று என்பெயர் பூண்ட கணபதியையும் தியானித்து பாத்திரத்தால் தீர்த்தத்தை எடுத்து ஸ்நாநம் செய்யவேண்டும். அப்பால்

सन्निगते शिवो लिंगे सर्वं लिङ्गमयं जगत् ।
लिंगदानाच्छिवस्तुष्टः सायुज्यं मे प्रयच्छतु ॥

இந்த மந்திரத்தை ஜபித்து விபூதியால் அலங்கரிக்கப்பட்ட சிவபக்தனான வேதியரின் பொருட்டு சிவலிங்கத்தை தானம் செய்யவேண்டும். அவ்விதம் செய்தால் ஸ்ரீபரமேசுவரனுடைய ஸாயுஜ்யத்தை யடைகிறான். கிழக்கு திக்கில் அக்னிஸரஸ் என்கிற தீர்த்தமிருக்கின்றது. அதன் கரையிலிருக்கும் புன்னயமரத்தை நமஸ்காரம் செய்யவேண்டும். இதற்கு ரிஷி. ஸாக்ஷாத் பரமேசுவரன். நந்திகரூபன் என்று பெயர் கொண்ட கணபதி இதற்கு தேவதை. இவர்களுக்கும் வந்தனம் செய்து விதிப்பிரகாரம் ஸ்நானம் செய்யவேண்டும். பிறகு

क्षुत्तृष्णाशमनं धान्यं तुष्टिदं वैश्वदेविकम् ।
अस्य दानेन भगवान् प्रीयताममृतेश्वरः ॥

என்கிற இந்த மந்திரத்தை ஜபித்துக் குடும்பியாயும் தரித்திரனுயுமிருக்கும் அந்தணரின்பொருட்டுத் தான்யத்தைக் கொடுக்க வேண்டும். இதனால் பரஸ்திரீஸங்கத்தாலுண்டான தோஷத்திலிருந்தும் விடுபடுகிறான். அதற்குப்பிறகு அகஸ்தியரை ரிஷியாக உடையதும், அகிலாண்டேசுவரீ என்று பெயர் பெற்ற உன்னை தேவதையாக உடையதும், உன் ஸந்நிதியில் கிழக்கு திக்கிலிருக்கும் அகஸ்தியர் தீர்த்தத்தை யடைந்து அங்கு விளங்கும் பலாமரத்தை நமஸ்கரித்து உன்னுடைய நாமங்களை ஜபித்துக்கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். ஸ்நானம் ஆனவுடன்

वासस्तु सर्वदैवत्यं शीतातपनिवारणम् ।
तस्मादस्य प्रदानेन प्रीयतां सर्वदेवताः ॥

என்று மந்திரத்தை ஜபித்து கர்மநிஷ்டனுயும் நல்ல மனதுடன் கூடியவனுயுமிருக்கும் வேதியருக்குச் சிறந்த வஸ்திரத்தைக் கொடுக்கவேண்டும். இதனால் ஸூக்ஷ்மமான புத்தி

யையும் பூர்ணமான ஆயுளையும் ஸமஸ்த தேவதைகளுடைய அனுக்கிரகத்திற்குப் பாத்திரனாகும் பாக்கியத்தையும் பெறுகிறான். அதற்குப்பிறகு சந்திர புஷ்கரணீ என்கிற தீர்த்தத்திற்குப் போகவேண்டும். அதற்குச் சந்திரன் ரிஷி; புஷ்கரன் புஷ்கராக்ஷன் என்கிற இரண்டு பேர்களும் தீர்த்தபாலகர்கள். குமுதன் என்பவன் தேவதை. இங்கு புன்னாகமென்கிற விருக்ஷமிருக்கின்றது. அந்த விருக்ஷத்திற்குப் பிரணாமம் செய்து ரிஷி தேவதை முதலானவர்களையும் ஸ்மரித்துக் கொண்டு இந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்யவேண்டும். க்ஷேத்திர பிண்டமும் இவ்விடத்தில் போடவேண்டும். பிறகு

हिरण्यमिदमाग्नेयं जगदाह्लादकारणम् ।
अस्य दानेन मे शम्भुः प्रीयतामग्निलोचनः ॥

என்கிற மந்திரத்தைச் சொல்லி யாகம் செய்த தீக்ஷிதருக்கு ஸுவர்ண தானம் செய்யவேண்டும். இதனால் ராஜயக்ஷ்மா என்கிற ரோகம் பெரியோர்களுடைய சாபம் இவைகளிலிருந்து விடுபடுகிறான். அப்பால் இந்த க்ஷேத்திரத்தில் மேல் பக்கமாய் தென்பாகத்திலிருக்கும் சூர்யபுஷ்கரணீ என்கிற தீர்த்தத்திற்குப் போகவேண்டும். அவ்விடத்தில் விளங்கும் பில்வ விருக்ஷத்தையும் முனியான பிருகுவையும் சூர்ய பகவானையும் தீர்த்த பாலகரான பைரவரையும் நமஸ்காரம் செய்து பிறகு ஸ்நாநம் செய்யவேண்டும். ஸ்நாநம் செய்து

देवतेजोंशसंभूतं रक्तं तेजोमयं यतः ।
अस्य दानेन भगवान् प्रीयतां मे प्रभाकरः ॥

என்கிற மந்திரத்தை ஜபித்து விபூதிருத்திராக்ஷங்களால் அலங்கிருதனும் சிவபக்தியுடையவனுமான பிராமணனின் பொருட்டு ரத்னதானம் செய்யவேண்டும். இவ்விதம் செய்

தால் உத்தமமான ஞானத்தையும் வித்யையையும் ஸுகத்தை யும் அடைகிறான். ஹே தேவி! இந்தப் பிரகாரம் ஒன்பது தீர்த்தங்களிலும் ஸ்நாநம் தானம் முதலானவைகளை யனுஷ்டித்து என்னுடைய ஸந்நிதியையடைந்து ஹே கிரிச! என்னால் செய்யப்பட்ட நவதீர்த்தங்களுடைய ஸ்நாநத்தைப் பூர்ணமாகச் செய்யும் என்று பரமேசுவானுன என்னிடம் விக்ஞாபனம் செய்து பக்தியுடன் உன்னையும் என்னையும் மூன்று தடவை பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து பஞ்சாக்ஷாத்தையும் திரியம்பகம் என்கிற மந்திரத்தையும் 108 ஆவர்த்தி ஜபிக்கவேண்டும். எவன் இந்த மாதிரி நியமத்துடன் நவதீர்த்தஸ்நாநம் செய்கிறானோ அவன் திருடனுக விருந்தாலும் பிர்ம்மஹத்தி ஸுராபானம் குருதாரகமனம் முதலிய மஹாபாதகங்களிலிருந்தும் விடுபட்டு கைலாஸத்தையடைகிறான். இவ்விஷயத்தில் அற்பங்கூட சந்தேகமில்லை. பொருள், புத்திரன், பெண்டீர், வித்யா முதலியவைகளில் எதை விரும்பினுலும் அதை அடைகிறான். ஹே தேவி! நீயும் இந்த உத்தமமான தீர்த்தத்தில் ஸ்நாநம் செய் என்று பகவான் கூறினர். இவ்விதம் சொல்லும் பரமேசுவானைப் பார்த்து ஹே பிரபோ! இவ்வித மஹிமை பொருந்திய ஒன்பது தீர்த்தங்கள் இருக்கும்பொழுது என் ஜனங்கள் நரகத்தில் விழுகிறார்கள்? ரோகிகளாகவும் அக்ஞானிகளாகவும் தரித்திரர்களாகவும் என் இருக்கிறார்கள்? என்று வினவும் தேவியைப் பார்த்து சங்கரர் ஹே கௌரி! நந்தீசுவரர் கௌதமர் ததீசி முதலியவர்களுடைய சாபத்தால் துவிஜர்கள் என்னிடத்தில் பக்தியில்லாதவர்களாயும் வேதத்திற்கு விரோதமாய் நடப்பவர்களாயுமிருந்துகொண்டு புண்யகர்மாக்களை அனுஷ்டிப்பதில்லை. ஆகையால் இவர்கள் நரகம் முதலான துக்கத்தை அனுபவிக்கிறார்கள். தெய்வவசத்தால் பஞ்சாக்ஷரஜபத்தைச் செய்து நவதீர்த்தங்க

ளில் ஸ்நானம் பண்ணுவது முதலிய காரியங்களைச் செய்கிற வர்கள், தான் முக்தியடைகிறார்கள். இவ்விதம் சிறந்த உபாயம் வேறில்லை என்று கூறினார்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 6

**षट्के तु पार्वतीपृष्टः सर्वात्मा शंभुरीश्वरः ।**
**तस्यै वेदान्तविज्ञानं संगृह्य वदति स्वयम् ॥**

இந்த ஆறுவது அத்தியாயத்தில் ஸர்வாத்மஸ்வரூபியாயும் ஸகல ஜகத்திற்கும் ஈசுவரனாயும் ஸ்ரீபார்வதீ தேவியால் வினவப்பட்டவருமான சம்புவினால் உமாதேவியின் பொருட்டு வேதாந்த சாஸ்தித்திரனுடைய தத்வக்ஞானம் சுருக்கமாக அடியில் வருமாறு கூறப்படுகின்றது.

ஹே மஹேசுவர! ஸமாதியினால் உம்மைக்காட்டிலும் வேறு தியானம் செய்யக்கூடிய வஸ்து உண்டா? அது என்ன? எந்த இடத்தில் தபஸ் செய்யவேணும்? ஞானம் எப்படி உண்டாகும்? முக்தியடைவது எப்படி என்று இவ்விதம் பிரச்னம்பண்ணி லஜ்ஜையுடனும் பயத்துடனும் தம் பக்கத்தில் நிற்கும் அற்பம் மலர்ந்த தானநேத்திரத்தையுடைய தேவியைப்பார்த்து கருணைகொண்டு விசவாத்மாவான ஸ்ரீகிரிசர் மந்தஹாஸத்துடன் மொழிகின்றார்.

ஹே பார்வதி! இதுவரையில் இவ்விதம் என்னிடத்தில் ஒருவரும் பிரச்னம் செய்ததில்லை. நீ வினவியபடியால் உனக்கு நான் கூறுகிறேன். நீ கவனத்துடன் கேட்கவேண்டும். என்னைக்காட்டிலும் வேறு ஒன்றுமில்லை என்று உன்னால்

சொல்லப்பட்டது மிகவும் சிறந்ததாயிருக்கின்றது. பிரம்மா
முதற்கொண்டு ஸ்தம்பபர்யந்தமுள்ள சகலப்பிராணிகளும்
ஸர்வாத்மஸ்வரூபியாயும் நித்யனாயும் விளங்கும் என் ஒரு
வனையே சிரவண மனன நிதித்யாஸனங்களால் ஆராதனம்
செய்து ஜீவிக்கிறார்கள். பலத்தில் விருப்பமுள்ள அக்
ஞானிகள் மாயையை தியானம் செய்து வெவ்வேறுவித
மாகப் பலதேவதைகளை உபாஸித்துக் கஷ்டப்படுகிறார்கள்.
ஆத்மஸ்வரூபத்தை யடையவேண்டுமென்று இச்சிக்கும்
சிலர் சித்தத்தை ஆத்மஸ்வரூபத்தில் லயத்தையடையும்படி
செய்து பேதத்தை விலக்கிவிட்டு ஏகாகாரமாய் பார்ப்பது
தான் முக்தியென்று கூறும் சாஸ்திரங்களின் கருத்தை
யனுஸரித்து என்னுடைய சுத்தஸ்வரூபத்தில் சித்தத்தை
லயத்தையடையும்படி செய்து ஆனந்தத்தையனுபவிக்கிறார்
கள். மாயைக்குச் சுவாதீனமான அக்ஞானிகளுடைய
சித்தமானது என்னிடத்தில் ஒருஸமயமும் ஸம்பந்தப்படு
கிறதில்லை. மாயாசக்தி என்பது என்னுடையதுதான். என்
னிடம் அது அடங்கியிருக்கிறது. நான் அதற்கு ஸ்வாதீன
னல்லன். எப்படி நீ என் வசமாயிருக்கிறாய்; நான் உன
க்கு அதீனமாகவில்லையோ அப்படியே மாயைக்கு நான்
அடங்கினவல்லன். என்னைத்தவிர்த்து இதரர்களுக்கு அந்
த மாயை ஸத்யமாகத்தோன்றலாம். நான் நித்யனாயும் முக்
தனாயும், ஏகனாயும் இருக்கிறேன். ஆகையால் என்னு
டைய மாயையால் இதரர்களுக்குத்தான் பந்தமேற்படுகின்
றது. என்னுடைய அனுக்கிரகத்தால்தான் அந்தப்பந்தத்தி
லிருந்தும் விடுபடவேண்டும். என்னுடன் ஏகீபாவத்தை
யடைந்தால்தான் முக்தி ஏற்படும். பேதபுத்தியையுடைய
வர்களுக்கு முத்திகிடைக்காது. இக்கருத்தையே பந்தத்தின்
பொருட்டு பேதபுத்தி என்றும் மோக்ஷத்தின் பொருட்டு
அபேதபுத்தி என்றும் சுருதியும் கூறுகின்றது. ஆகை
யால் மாயாஸம்பந்தமில்லாதவனாயும் நாசமற்றவனாயும் சுத்

தனாயும் கிரியையில்லாதவனாயும் ஆத்மஸ்வரூபியாயுமாக நான்தான் ஆகிறேன். ஜகத்திலுள்ள மாயையைப்பார்த்துக்கொண்டு ஸாக்ஷியாக மாத்திரம் நானிருக்கிறேன். மாயாஸம்பந்தம் எனக்கிருந்தாலும் மோக்ஷஸ்வரூபத்திலிருந்தும் ஒருகாலும் நான் விலகமாட்டேன். நீ மாயைதான்; ஆனாலும் ஸத்யமல்ல. இந்திரஜாலம்போல் பொய். ஆகையால்தான் இப்பிரபஞ்சமும் அதிலுண்டாகும் வஸ்துக்களும் ஆத்மாவிற்கு இரண்டாவது வஸ்துக்களாக ஆகின்றதில்லை. இவைகள் உண்மையாயிருப்பின் ஆத்மா ஒன்றல்ல. இரண்டாவது வஸ்துவுடன் கூடியது என்று ஏற்பட்டுவிடும். அப்படியானால் ஆத்மா இரண்டாவதற்றது என்று கூறும் சுருதிக்கு விரோதமுண்டாகிறது. பேதமென்பது பிரமத்தாலேற்படுகிறபடியால் அபேதத்தைப்போதிக்கும் சுருதிகளுக்குவிரோதமில்லை. ஒரேசந்திரன் மேகத்தால் மறைக்கப்பட்ட ஸமயத்தில் அஞ்ஞானத்தால் இரண்டாகத்தோன்றினால் உண்மையில் இரண்டாக ஆய்விடுமா? ஆகாது என்று கூறும் சங்கரரிடம் ஹே ஸ்வாமி! அகங்காரமில்லாத அவஸ்தை கிடையாது; அகங்காரமென்பது மனோமூலம்; அந்தமனமானது மாயாஸ்வரூபம்; அந்தமாயையானது உமக்கில்லை; மாயாக்ராந்தமானமனதினால் உம்முடைய சுத்தஸ்வரூபத்தியானம் எப்படி ஏற்படும்? என்று தேவி வினவினாள். அதைச்செவியுற்ற ஈசுவரன் ஹே கௌரி! நீ கூறியதுண்மையே. என்னை ஆச்ரயித்திருந்தாலும் மாயை எனக்கு மோகத்தையுண்டுபண்ணாது. உலகில் ஒருவன் பலவிதங்களான இந்திரஜாலவித்தையைச் செய்தால் அவைகளினால் பிறருக்கு மோகம் ஏற்படுமேயன்றி அவனுக்கும் மோகம் ஏற்படுமா? அக்னியினுடைய உஷ்ணத்தால் பிறருக்குத்தாகம் உண்டானாலும் அக்னிக்கு எப்படி உண்டாகாதோ ஸர்ப்பத்தினிடமிருக்கும் விஷமானது எப்படி அதற்கு மரணத்தையுண்டுபண்ணாதோ அவ்விதம் என்னை ஆச்ரயித்துக்கொண்டிருக்கு

ம் மாயையினுல் எனக்கு யாதொரு பிரமமுமேற்படாது. ஒரு வன் தன்னிடமிருக்கும் வஸ்துவால் பிறருக்கு மோஹத்தை யுண்டுபண்ணுவனேயல்லாமல் தான் மோஹத்தையடைய மாட்டான். ஸ்படிகமானது பலவித உபாயங்களால் எங் ஙனம் அனேகரூபங்களாகத் தோன்றுகிறதோ அங்ஙனம் நான் ஒருவனுயிருந்தாலும் உபாதிகளுடைய பேதத்தால் அநேகரூபமுள்ளவன்போல் அக்ஞர்களாலறியப்படுகிறேன். அசேதனங்களான சிலைமுதலாவனவைகள் தம்மிடமிருக்கும் வர்ணபேதங்களை எப்படியறிய சக்தியற்றவைகளாயிருக்கி ன்றனவோ அவ்விதம் அக்ஞானிகளும் உபாதிகளாலேற்ப டும் பேதங்களையறியமாட்டார்கள் ஆத்மா சேதனனுகையா ல் தனக்கு உபாதியால் ஏற்படும் பேதத்தை நன்கறிகின் ருன். அந்த உபாதி என்பது அஸத்தியமாகையால் அத னுல் ஏற்படும் பேதக்ஞானமும் உண்மையல்ல. ஆத்மாவா னவன் ஜடங்களான சரீரம் முதலியவைகளில் ஆத்மஞான த்தை யுண்டுபண்ணுகிறதான அவித்யையை நாசத்தைய டையும்படி செய்கிருன். இந்த அவித்யையால் வேறுவித மாக மாறியிருக்கிற ஜீவன் தன்னுடைய உண்மையான ஸ்வ ரூபத்தையறிகிருன். ஹே பார்வதி! ஒருவனுகிய எனக்கு இரண்டுவிதமாயிருக்கும் தன்மை விரோதமல்லவா? கிளிஞ் சலில் வெள்ளி என்கிற தோற்றம் எங்ஙனம கற்பி தமோ அங்ஙனம் பந்தமென்பதும் கற்பிதம். உண்மை யிற் கிடையாது. அக்ஞானிகள் இந்த உண்மையை யறியாமல் தங்களை பந்தத்தில் கட்டுப்பட்டவர்களாகக்கரு துகிருர்கள். அஸத்தியமான இந்த பந்தத்திலிருந்தும் விடு பட்டு என்னொடு ஏகீபாவத்தை அதாவது அபேதமாயிருக் கும் தன்மையை அடையவேண்டி ஆத்மா நித்யமுக்தன் பத்தனல்லன் என்கிற இந்தத்தத்வத்தை சாஸ்திரங்களின் வாயிலாகவும் ஆசார்யாளுடைய சிறந்த உபதேசமொழி களாலும நன்கறிந்து அவித்யையிலிருந்தும் விலகிய சில

புண்யவான்கள் எப்பொழுதும் ஸ்வரூபத்தியானத்திலேயே இருந்துகொண்டிருக்கிறார்கள். ஆகையால் எவர்கள் சாஸ்திராசார்யர்களுடைய உபதேசங்களைப்பெற்று உண்மையான ஆத்மஸ்வரூபஞானத்தை யடைகிறார்களோ அவர்கள் அவித்யையிலிருந்தும் விடுபட்டவர்களாவார்கள். இதரர்கள் மாயையால் மறைக்கப்பட்ட கண்ணையுடையவர்கள். இந்தமறைவு நீங்கி உண்மைஸ்வரூபத்தையறிய வேண்டியதற்காக ஞானாஞ்சனத்தை ஸேவிக்கவேண்டும். இவ்விதம் அனாதியாய் ஏற்பட்டிருக்கும் அக்ஞானம் நிவர்த்திக்க வேண்டுமானால் ஞானம் ஒன்றுதான் அதற்கு முக்கியமான ஸாதனம். அஃதன்றி முடியாது. ஆகையால் இந்த ஸம்ஸாரபந்தத்திலிருந்தும் விடுபடவேண்டுமென்று எவன் ஆத்மக்ஞானத்தையடைய விரும்புகிறானோ அவனுடைய ஜன்மாதான் பயனுடன் கூடியது. அவனே முக்தியையடையத்தகுதியுள்ளவன். இதரர்களால் அடையமுடியாது. மோக்ஷத்தை யடையவேண்டுமென்று இச்சையுடையவர்களுக்குத்தான் ஆத்மவிசாரத்தில் பிரவிருத்தி ஏற்படும். சிறந்த ஞானத்தைப்பெற்று அவ்விதம் விசாரிப்பவர்கள் தான் கைவல்யமென்கிற உத்தமமான மோக்ஷ சுகத்தையனுபவிக்கிறார்கள். இவ்விதம் கூறுகிறவரான பரமேசுவரரைப் பார்த்து மறுபடியும் உமாதேவியானவள் ஹே பிரபோ! முமுக்ஷு என்றால் என்ன? எதனால் ஆத்மஸ்வரூபத்தையறியவேண்டுமென்கிற இச்சையேற்படும். ஞானத்தால் தான் கைவல்யமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகளை நன்றாய் எனக்குத்தெரிவிக்கவேண்டுமென்று வினவினாள்.

ஈசுவரன் ஹே தேவி! எந்தஸமயத்தில் ராகம், த்வேஷம் முதலான தோஷங்கள் விலகி சாந்தி முதலிய குணங்கள் உண்டாகின்றனவோ அந்தக்காலத்தில் புருஷனுக்கு மோக்ஷத்தையடையவேண்டுமென்கிற இச்சையுண்டாகும்,

ராகம் முதலான தோஷங்கள்தான் முமுக்ஷுக்கு இடையூர்களாயிருக்கின்றன. நித்யாநித்யவஸ்துவிவேகம் முதலான நான்கு விதங்களான ஸாதனங்களும் முமுக்ஷுக்குக்காரணம். சுத்தமான சித்தத்தையுடைய புருஷர்களுக்குத் தான் இந்த ஸாதனம் ஏற்படும். இந்நான்கு ஸாதனங்களும் நன்கு ஸ்திரமாய் நிலைத்திருந்தால்தான் பிர்ம்ம விசாரத்தில் பலபரியந்தமுள்ள திருடமான பிரவிருத்தியேற்படுமென்பது நிச்சயம். இது இல்லாமல் கோடி ஜன்மங்களில் பல கர்மாக்களையனுஷ்டித்தாலும் அவைகளால் மாத்திரம் ஸாத்தியமில்லை. கர்மாக்கள்யாவும் ராகம் துவேஷம் முதலிய தோஷங்களைக் காரணமாகவுடையன. ஆத்மக்ஞானத்தால்தான் அந்த தோஷங்கள் விலகவேண்டும். அந்த தோஷங்கள் விலகிவிட்டால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படும். அதுதான் மூக்தி என்று கூறப்படுகின்றது. மேகமானது ஸூர்யபிம்பத்தை மறைப்பதுபோல் ராகத்துவேஷம் முதலானவைகளால் ஏற்படும் தோஷத்தால் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்படுகின்றது. உடனே அநாத்மாவாயும் ஜடமாயுமிருக்கும் தேகமுதலியவைகளில் ஆத்மபுத்தியுண்டாகிறது. யாதொருகர்மாவுமில்லாத ஆத்மாவுக்குச்சரீரத்தில் நான் என்கிற புத்திபூர்வமாக கர்மாவும் ஏற்படுகின்றது. இவ்விதமேற்படும் தேகம் இந்திரியங்கள் இவைகளுடைய கர்மாக்கள்தான் ஸம்ஸாரத்திற்குக்காரணமாகின்றன.

இந்தக்கர்மாக்கள் காம்யம் நித்யம் நைமித்திகம் என்று மூன்றுவகைப்படும. அவைகளில் காம்யங்கள் தம்மால் இச்சிக்கப்பட்ட சிற்சில பலன்களையளிக்கின்றன. நித்ய நைமித்திகமான கர்மாக்கள் விக்னங்களைப்போக்கி இவ்வுலகிலும் பரலோகத்திலும் அடையக்கூடிய பலத்திற்கு ஸாதகமாயிருந்துகொண்டு சித்தத்திற்கு சுத்தியையுண்

டுபண்ணுகின்றன. காம்யகர்மாவும் பலத்தில் விருப்ப மின்றிச் செய்தால் சித்தசுத்தியின்பொருட்டு ஆகும். இவ் விதம் கர்மானுஷ்டானத்தால் சுத்தமான சித்தத்தையுடை யவனுக்கு நான்குவிதமான ஸாதனமும் கூறப்பட்டிருக்கின் றது. சாஸ்திரங்களில் முமுக்ஷுக்களுக்குச் சித்தசுத்தி யுண்டாகவேண்டித்தான் வர்ணாசிரமிகளுக்குக் கர்மாக்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஸகலமான முமுக்ஷுக்களுக் கும் ஞானசாஸ்திரத்தில் அதிகாரமுண்டு. ஆகையால் வர் ணாசிரமங்களுக்குக் கூறப்பட்ட கர்மாக்களையனுஷ்டித்துச் சித்தசுத்தியையடைந்தவர்கள்தான் ஸ்திரமான ஸாதன சது ஷ்டய ஸம்பத்தியையயடைகிறார்கள். இவ்விதம் அடை ந்த ஸாதனங்களால் முக்தர்களானவர்களுக்குக் கர்மானுஷ் டானம் வேண்டியதில்லை. தபஸ் என்பது ஞானமூலமேற் படுகின்றது, அந்தஞானம்தான் ஸத்து, சித்து ஸுகஸ்வ ரூபமென்று கூறப்படுகின்றது. இவ்விதம் உன்னுடைய பிரியத்தின்பொருட்டு என்னால் கூறப்பட்டது. என்னைக் காட்டிலும் வேறாக எனக்குத்தியானம் செய்யக்கூடிய வஸ் து கிடையாது என்று பகவான் பகர்ந்தார்.

இந்தப்பிரகாரம் பசுபதியாயும் ஜகத்பதியாயும் விளங் கும் சம்புவினுடைய வசனத்தைக்கேட்டு அந்தப்பார்வதி யானவள் மிகவும் வணக்கத்துடன் தன்பர்த்தாவை நமஸ் கரித்து ஹே நாதா! நான் உம்முடைய பக்தையாயிருந் தால் மறுபடியும் ஜன்மா ஏற்படாமல் தடுக்கக்கூடிய ஆத் மஸ்வரூபலாபத்தைப் பெறும்படி எனக்கு அனுக்கிரகிக்க வேண்டுமென்று வேண்டினாள். பக்தவத்ஸலரான பக வானும் தேவியினுடைய வேண்டுகோளுக்கிணங்கி ஸந் தோஷத்தையடைந்தவராய்க்கொண்டு பார்வதியிடம் அடி யில்வருமாறு மொழிகின்றார். ஹே பார்வதி! நீ என்னிடம் பிரச்னம் செய்த இந்த விஷயமானது மிகமிகச்சிறந்தது.

மோக்ஷத்தையடைவதற்கு முக்கிய ஸாதனமாய் விளங்கும் இந்த வினாவானது மஹாபாக்யவான்களால் செய்யத்தகுந்தது. என்னிடமுனக்கிருக்கும் பக்திவிசேஷத்தாலும் உன்னுடைய பாக்யத்தாலும் அவ்வித வினாவை நீ வினவியிருக்கிறாய். சித்தத்திற்கு சுத்தி ஏற்படவேண்டிய நிமித்தம் நீயும் தவம்புரியவேண்டும் என்று கூறினார். இம்மொழியைச் செவியுற்ற சிவையானவள் ஹே தேவ! அந்தத்தவத்தின் ஸ்வரூபம் யாது? தேவதை எது? அதை அனுஷ்டிப்பதற்கு ஸ்தானம் எது? இவை எல்லாவற்றையும் விரிவாய் எனக்குரைக்கவேண்டுமென்று பிரார்த்தித்தாள். இவ்விதம் பிரார்த்திக்கும் பத்நியிடம் ஸ்நேகத்தால் கிரீசரும் ஞானபூமி என்கிற க்ஷேத்திரத்தில் ஜம்புமுனியைப்போல் நீயும் தவம்புரிந்தால் உன்னிஷ்டஸித்தியை யடையலாமென்று கூறி முடித்தார்.

ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 7.

जम्बूमुनितपस्सिद्धस्सम्प्रभाणि नन्दिने ।
देवेन पश्चाद्देव्या च तपःप्रस्थानमुच्यते ॥

ஜம்புமகரிஷியானவர் எவ்விதம் தவம்புரிந்தார் அவருடைய தபஸ்ஸிற்கு ஸித்தி எவ்விதமேற்பட்டது என்பதை நந்திகேசுவரரின் பொருட்டு அறிவித்துப்பிறகு பரமேசுவரரால் ஸ்ரீபார்வதீ தேவியினுடைய தவத்தின் ஆரம்பமானது இந்த ஏழாவது அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

நந்திகேசுவரர் ஹே சங்கர! பிரபோ! ஜம்பூமுனிவர் எப்படித்தவம் செய்தார். எவ்விதம் அவர் ஸித்தி

பெற்றார் என்கிற இவ்விஷயத்தைதயவு செய்து எனக்குக் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தார். நந்திகேசுவாருடைய பிரார்த்தனைக்கிணங்கிய கருணாநிதியான பரமேசுவரன் கூறுகின்றார். ஜம்பூமுனி என்றுபெயர் பூண்ட ஒருவர் அதிக நியமத்துடன் கூடியவராய்க்கொண்டு ஜம்பூவனத்தின் மத்தியில் உக்கிரமான தபஸ்ஸைச் செய்தார். ஸகலஜகத்தும் ஈசுவராத்மகம் என்கிற பாவனையுடனும் புத்திரன், மித்திரன், களத்திரம் முதலானவைகளில் பற்றுதலற்ற மனதை யுடையவராயும் ஸர்வக்ஞராயுமிருக்கும் அம்மஹரிஷி தபஸ் செய்துகொண்டிருக்கும் ஸமயத்தில் அகாலத்தில் ஜம்பூ விருக்ஷத்திலிருந்து வெளுப்பான ஒருகனி அவருக்கு முன் விழுந்தது. அக்கனியைப்பார்த்து ஆச்சரியத்துடன் கூடியவராய்கொண்டு அடியில்வருமாறு ஆலோசித்தார். பார்ப்பதற்கு மிகவும் அழகான இந்தப்பலம் கிடைக்கக்கூடாத காலத்தில் நம்மால் அடையப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள ஸகலமான ஜம்பூ விருக்ஷங்களுடைய பலமும் கறுப்பாயிருக்கும். இந்தபலமானது வெண்ணிறமாயும் அழகாயும் அதிக ரஸமுள்ளதாயும் இருக்கின்றது. ஆகையால் இது தேவதேவரான ஸ்ரீபினகபாணிக்குத்தான் அருகமானது என்றுதீர்மானித்து அந்தபலத்தை எடுத்துக்கொண்டு இந்தப் பர்வதத்திற்குவந்து மிகவும் பத்தியுடன் என்னிடம் கொடுத்தார். நானும் அதைக்கிரகித்துக்கொண்டு அந்த விதையை எனதருகில் துப்பிவிட்டேன். அம்முனிவர் என்னிடமிருக்கும் பக்திவலிமையால் அந்த ஜம்பூபீஜத்தைத் தான் புசித்தார். உடனே என்னுடைய வாயிலுள்ள ஜலத்தில் நனைந்து வரிய அக்கொட்டையானது அவர் வயிற்றிற்சென்றவுடன் முளைத்துவிட்டது. முளைத்தவுடன் முறையே விருத்திபடைந்து அம்முனிவரது சிரஸ்ஸைப் பிளந்து கொண்டு பெரிய விருக்ஷமாக ஆய்விட்டது. இதைப்பார்த்த மஹரிஷியும் அதின்நிழல் தனக்குத் தவஞ்செய்ய ஸௌ

கர்யமாயிருக்கிறதென்று கருதினார். அவ்விதமே அந்த
நிழலில் வெகுகாலம் வரையில் அவர் தபஸ்செய்தார். ஹே
சிவே! இவ்விதம் குரோமாய்த் தவம்புரியும் அந்தஜம்புரிஷி
ஒருஸமயம் என்னிடம் வந்து பக்தியுடன் அடிபணிந்து என்
னுடைய விருக்ஷமான இந்த விருக்ஷத்தினுடைய நிழலில்
தாங்கள் வஸிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். உடனே
தபஸ்ஸால் பிரகாசிப்பவரும் முனிசிரேஷ்டருமான அந்த
ரிஷியிடம் ஹே முனே! முன் எந்த இடத்தில் நீர் தவம்
செய்தீரோ அங்குசென்று உமதுகாரியத்தைச்செய்யும். நா
னும் அந்தஸ்தானத்திற்கு வந்துசேருகிறேன் என்று என்
னால் கூறப்பட்டது. என்னுடைய வசனத்தைக் கேட்டு
அந்தமுனிவரும் பக்தியால் என்னை நமஸ்கரித்து என்னையே
தியானம்செய்து கொண்டு தபஸ் செய்யவேண்டி அந்தஸ்தா
னத்தையடைந்துவிட்டார். ஹே நந்தி! என்னுடைய
ஆக்ஞையால் மறுபடியும் அதிகமான பக்திசிரத்தையுடன்
கூடியவராய்கொண்டு அவர் உக்கிரமான தவத்தைச்செய்
தார். க்ரீஷ்மருதுவில் நான்கு அக்னிகளையும் நன்கு விருத்தி
செய்து கால்கட்டவிரலால் பூமியைத் தொட்டுக்கொண்டு
சூரியனைப்பார்த்துக்கொண்டும், வர்ஷாகாலத்தில் ஜலத்தின்
மத்தியிலிருந்துகொண்டும், ஹேமந்தருதுவில் பனிக்கட்டி
களால் ஹிம்ஸிக்கப்பட்ட சரீரத்தையுடையவராகவும் இரு
ந்துகொண்டு உக்கிரமான தவம்புரிந்தார். பின்னும் காய்,
கிழங்கு, பலம் இவைகளையே ஆகாரமாகப் புசித்துக்கொண்
டும் காத்து இலை இவைகளையும் சிலஸமயங்களில் அருந்து
கிறவரும் தன் தேஜஸ்ஸால் மிகுந்த ஒளியுடன் கூடிய
வரும் வெளியிலுள்ள ஸகல வியாபாரங்களையும் அறவே
ஒழித்து மனதால் ஸர்வலோகத்திற்கும்பதியான என்னை
மாத்திரம் தியானம் செய்துகொண்டு மிகவும் சிறந்ததான
பஞ்சாக்ஷரமென்கிற ஜபத்தையும் அடிக்கடி ஆவிருத்தி செய்
துகொண்டு ஸகல வாஸனைகளையும் விட்டு விட்டு என்னுடை

ய தத்துவத்தை மாத்திரம் சிந்தித்துக்கொண்டு என்னிடத்திலேயே பற்றுள்ளவராயும் ஆனந்தபாஷ்பங்களால் நிறைந்த கண்களையுடையவராயும் எப்பொழுதும் விபூதியாலும் ருத்ராக்ஷமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட சரீரத்தையுடையவரும் தன்னுடைய ஜடைகளால் சூழப்பட்ட பூமியையுடையவரும் தன் ஜடைகளில் கூடுகட்டிக்கொண்டு ஆனந்தமாய் வஸிக்கும் பக்ஷிக்கூட்டங்களால் பூஷிதரும் பால சூர்யனைப்போல் பிரகாசிப்பவரும் ருத்திராக்ஷமாலையால் பஞ்சாக்ஷரம் முதலான மந்திரங்களை ஆவர்த்தி செய்கிறவருமாக இருந்தார். இந்த ஸமயத்தில் வஸந்தருதுவும் விருத்தியடைந்து எங்கு பார்த்தாலும் புஷ்பங்களுடைய வாஸனையும் கோகிலபக்ஷிகளுடைய பஞ்சமஸ்வரங்களும் விருத்தியடைந்து அதனால் ஸகலப்பிராணிகளும் மன்மதன் கணைக்கிடுபட்டிருந்தாலும் இம்முனிவரதுமனம் அற்பங்கூடச்சலிக்கவில்லை. அவருடைய மனமானது என்னுடைய தத்வத்தைச் சிந்திப்பதைத்தவிர்த்து மற்றொன்றையும் கவனிக்கவில்லை. இவ்விதமிருக்கும் ஸமயத்தில் ஹே கணேச்வர! நான் மனதிலுள்ள ஸகல விகாரத்தையும்விட்டவனாய் உக்கிரமான ஸமாதியிலிருந்துகொண்டு பார்சுவத்திலிருக்கும் யௌவநாதிக்கத்தாலுண்டான மதவிலாஸத்தையுடையவளான பார்வதியைப் பார்த்தேன். உடனே ஸ்வஸ்வரூபத்தில் லயத்தையடைந்த என்னைப்பார்த்து சைலபுத்திரியானவள் கணங்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது கர்வத்துடன் மந்தஹாஸம்பண்ணினாள். அதிகமான கிரிகன்னிகையினுடைய விகாரத்தைப் பார்த்து நான் கோபமுள்ளவனாக ஆனேன். என்னுடைய கோபத்தையறிந்து பார்சுவத்தில் நடுங்கின சரீரத்துடன் நிற்கும் அவளைப்பார்த்து இவ்விதம் சாபம் கொடுத்தேன். ஹே கௌரி! நீ உன்னுடைய அழகால் மோகத்தையடைந்து கர்வம்கொண்டு யாதொரு காரணத்தால் என்னையும் அறிய

வில்லையோ மிகவும் அதிகமான அந்தப்பாபத்தினுல் பெண் அணில்போல் பதியை விட்டு விட்டு விரகதாபத்தையடைந்தவளாய்க் கொண்டு இந்த விடத்தைவிட்டு எங்காகிலுமோரிடத்தில் சிலவருஷங்கள் வஸிக்கப்போகின்ருய் என்று என்னுல் சபிக்கப்பட்டாள். மிகவும் கோபத்துடன் சபிக்கப்பட்ட கிரிஜையானவள் பெருங்காற்றிலகப்பட்ட வாழைபோல் பயந்து அதிக நடுக்கமுற்ருள். இச்சாபத்தால் நடுங்கி சரீரம் முழுமையும் வேர்வையுண்டாகி கைகளை அஞ்சலிபந்தம் செய்துகொண்டு என்னை நமஸ்காரஞ் செய்து ரோதனம் செய்துகொண்டு என்னிடம் அறிவித்தாள். தேவதைகளுக்கெல்லாம் தேவனும் பக்தர்களைப் பாதுகாக்கும் கருணைகொண்ட ஹே சங்கர! அறிவின்மையால் என்னுல் பண்ணப்பட்ட அபராதத்தைத் தாங்கள் பொறுத்துக் கொள்ளவேண்டும். ஜலத்திலிருந்து கரையில் வந்த தாமரைமலர்போல் உம்முடைய பாதஸேவையைவிட்டு ஒரு முகூர்த்தகாலங்கூட ஜீவிப்பதற்கு முடியாது. ஆகாயத்தில் சந்திரனைவிட்டுச் சந்திரிகை மாத்திரம் இருக்குமா? அரண்யத்தில் விருக்ஷமில்லாமல் லதையானது எப்படிப்படர்ந்து புஷ்பிக்கும்? ஸ்திரீகளுக்குப் பிராணனைப்போல் பிரியனுன பர்த்தா இல்லாவிட்டால் ஸௌக்கியம் உண்டாகுமா? சூர்யனில்லாமல் தாமரை ஓடை சோபையையடையுமா? லஹிக்கமுடியாததான இந்தச்சாபத்திலிருந்தும் எனக்கு எப்பொழுது முக்தி ஏற்படும்? தாங்கள் எப்பொழுது எனக்கு அனுக்கிரகம் செய்கிறீர்களோ அதுவரையில் நான் எங்கு வஸிக்கிறது? என்று நாதனில்லாத ஸ்திரீயைப்போல் பயந்துகொண்டு இவ்விதம் பிரார்த்தித்தாள். ஹே கணநாத! கிரிஜையினுடைய பிரார்த்தனையைக்கேட்டவுடன் கருணையுண்டாகி பிரஸந்நனுயிருந்துகொண்டு மறுபடியும் அடியில் வருமாறு அறிவித்தேன். ஹே மங்களஸ்வரூபியானசிவே! நீ பயப்படவேண்டாம்; சிறந்தநியமத்துடன் கூடிய

நீ அற்பகாலம் என்னுடைய விரகத்தைப்பொறுத்துக்கொள். நான் கைலாஸகிரிக்கு ஸமானமாயிருக்கும் விருஷபத்தின் பேரில் ஏறிக்கொண்டு வெளியில் ஸஞ்சாரம் செய்துகொண்டு முன்சொல்லப்பட்ட ஸ்தானத்தையடைகிறேன். பூர்வம் என்னால் அளிக்கப்பட்ட வரத்தைப்பெற்ற ஒருமுனிவர் இருக்கிறார். மஹாத்மாவான அம்முனிவர் அதிகமான பக்தியுடன் என்னையே சித்தத்தில் தியானம் செய்துகொண்டு காவேரியினுடைய அழகானகரையில் விளங்கும் மிகவும் புண்யமான ஜம்பூக்ஷேத்திரத்தில் என்னுடைய ஆவிர்ப்பாவத்தை இச்சிக்கிறவராய்க்கொண்டு வெகுகாலமாய் தபஸ்செய்கிறார். அந்த க்ஷேத்திரத்திற்கு நீயும்போய் தபஸ்செய்து என்னையும் பூஜித்தால் உனக்கு அனுக்கிரகமேற்படும். என்னால் கொடுக்கப்பட்ட இந்தசாபமும் நிவர்த்தியாகும். ஆகையால் ஹே காமினி! அங்குசென்று தபஸ்செய்துகொண்டிரு. முன்னொரு ஸமயத்தில் காவேரியானவள் கங்கையினிடம் அசூயைகொண்டு என்னைத்தன்னுடைய மத்தியதிட்டான இந்த க்ஷேத்திரத்திற்கு வரவேண்டுமென்று தபஸ்ஸால் விசேஷமாக ஆராதித்து பிரார்த்தித்திருக்கிறாள். நானும் அவளுக்காக அவ்விடத்திற்கு வரப்போகிறேன். ஹே ஸர்வமங்களே! நீயும் சீக்கிரமாக அவ்விடம்போய் தபஸ் செய்துகொண்டு என்னையும் விதிப்படி பூஜித்துக்கொண்டிரு என்று சொன்னார். இவ்விதம்கூறிய பர்த்தாவை தேவியானவள் அடிபணிந்து அதிகமான சிந்தையுடன் கூடியவளாய்க்கொண்டு வைராக்கியத்தையடைந்து மறுபடியும் பரமேசுவரரிடம் அறிவித்தாள். ஹே பகவன்! ஹே தேவ! ஹே விபோ! உம்மால் இப்பொழுது ஏன் இவ்விதம் சொல்லப்பட்டது. உம்மால் நான் சபிக்கப்பட்டாலும் என்மனதில் உம்மையே தியானம் செய்கிறேன், உம்மையே பூஜிக்கிறேன். இந்தகைலாஸபர்வதத்திலேயே தபஸ்செய்துகொண்டு உம்மை அர்

ச்சிக்கவேண்டுமென்று இச்சிக்கிறேன். இவ்விடத்திலேயே சுத்தமான புண்யதீர்த்தங்களால் பாபங்களைப்போக்கடிக்கக் கூடிய பலஸ்தானங்களிருக்கின்றன. பிர்ம்மா, விஷ்ணு, இந்திரன் முதலான தேவதைகளும் ஸப்தரிஷிகள் எட்டுவஸுக்கள் பத்துப்பிதாமஹர்கள், ஐந்து இந்திரர்கள், பத்துதிக்பாலகர்கள், விச்வேதேவர்கள், நவக்கிரகங்கள், பதினொருருத்திரர்கள், சூர்யன், கணபதி, ஷஷ்டி, யக்ஷர்கள், கிந்நரர்கள், கந்தர்வர்கள், வித்யாதரர்கள் முதலான ஸகலமான மஹான்களும் வஸிக்கிறார்கள். இந்தப்பிரதேசத்தைக்காட்டிலும் சிரேஷ்டமான வேறு ஸ்தானம் கிடையாது. ஆகையால் இங்கிருந்துகொண்டே தபஸ் செய்துகொண்டு என்னுடைய தைவதமான உம்மையும் பூஜிக்கிறேன். ஸர்வக்ஞரா யும் மஹாத்மாவாயுமிருக்கும் தாங்கள் எங்கு வஸிக்கிறீர்களோ அந்த இடமே உம்மை அர்ச்சிப்பதற்குச் சிறந்த ஸ்தானம். ஹே பிரபோ! எந்த இடத்தில் தபஸ்செய்ய வேண்டுமென்று உம்முடைய மனதிற்குத்தோன்றுகிறதோ அந்தஇடமே தேவதைகளுக்கும் பிர்ம்மரிஷிகளுக்கும் தபஸ்விஜனங்களுக்கும் தபஸ்தானமாக விளங்குகிறது. இந்தஇடத்தில் கங்காபிரவாஹமானது ஸ்நாநத்திற்கும் பானத்திற்கும் ஸௌகர்யமாயிருக்கின்றது. பூலோகத்தில் தவம்செய்து முக்தி பெறவேண்டுமென்று விரும்பும் புமான்களுக்கு மறுபிறப்பின்றி ஸ்திரமாய் வஸிக்கக்கூடிய ஸ்தானம் இதுவே. சைவாகமத்தைப் பின்பற்றுகிறவர்களான சிவத்துவிஜர்களுக்கும் இதுவே தீக்ஷாகுருவான உத்தமமான ஸ்தானமாயிருக்கிறது. இந்தக்கைலாஸமே உமக்கு மிகவும் பிரியமுள்ளதாயும் சிறந்தஸ்தானமாயுமிருப்பதால் இதைவிட்டுப் போவதற்கு என்மனம் பிரியப்படவில்லை. இங்கிருக்கப்பட்ட ஸாதனஸௌகர்யங்களால் என்பிரியஸகிபோலிருக்கும் இதைவிட்டுவேறுஇடம் போவதில் எனக்குத்திருப்தியில்லை

என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு மிகவும் தைன்யமான சித்தத்தோடுகூட தேவியானவள் கருணாநிதியான சங்கரரிடம் விக்ஞாபனம் செய்துவிட்டு மௌனமாயிருந்தாள். இவ்விதம் அறிவித்த பார்வதீ தேவியைப்பார்த்து பக்தவத்ஸலரானபகவானும் ஹே பார்வதி! நீ பயப்படவேண்டாம் மனதில் துக்கப்படாதே அதிக வார்த்தைகளைப்பேசுவதில் யாது பயன்; உனக்கு ஹிதத்தைச்செய்கிறேன். மனதில் பலவாறாக ஆலோசிக்காமல் சீக்கிரம் தவம் செய்யவேண்டுமென்று யத்தனம்செய்; என்னுடைய விரகத்தாலுண்டாகும் மனக்கலக்கத்தை விட்டுவிட்டு தவத்திற்குச் சீக்கிரம் ஸித்தியைக்கொடுக்கும் உத்தமமான அந்த கஜாரண்ய க்ஷேத்திரத்தையடைவாயாக. ஹே பிரியே! ஜயா விஜயா என்கிற இரண்டு ஸகிகளும் உனக்கு ஸஹாயமாகவருவார்கள். எந்த ஆக்ஞையை நீ செய்தாலும் அதை அவர்கள் அனுஷ்டிப்பார்கள். என்னுடைய கணநாதன் இந்திரன் முதலான தேவர்களும் அனுஷ்டானங்களை நன்கறிந்த மஹரிஷிகளும் உன்னுடன்கூட வரப்போகிறார்கள் என்று கூறினார் என்கிற விஷயத்தை சூதமஹர்ஷி முனிகளுக்குப் போதித்தார். இவ்விதம் சொல்லப்பட்ட சந்திரசேகருடைய வசனத்தால் மிகவும் ஸந்தோஷங்கொண்ட கிரிஜையானவள் கஜாரண்யத்திற்குப் போகவேண்டி, தன் ஸகிகளான ஜயா விஜயா இவர்களையழைத்து ஹே ஸகிகளே! உங்களுடன் அகிலாண்டேசுவரீ என்கிற தேவியாலலங்கரிக்கப்பட்ட தாயும் நன்கு பிரகாசிக்கிறதாயுமான கஜாரண்ய க்ஷேத்திரமென்கிற புண்யஸ்தலத்திற்குப் போகவேணுமென்று சொன்னாள். இதைக்கேட்ட ஸகிகளும் ஆனந்தத்துடன் போவோமென்று அங்கீகரித்தார்கள். உடனே தேவியும் தவத்தின் பொருட்டுப் போகவேண்டுமென்று தீர்மானித்து ஸ்ரீசந்திரசேகரரை நமஸ்கரித்துக் கைலாஸகிரியிலிருந்தும் கஜாரண்ய க்ஷேத்திரத்திற்குப்

புறப்பட்டாள். அவளுடன்கூட திக்பதிகளும் தேவிக்குப் பணிவிடை செய்வதற்காக சக்திகளும் மற்றும் பலதேவதைகளும் சென்றார்கள்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 8.

अष्टमे क्षेत्रमागत्य गजारण्यं गिरेस्सुता ।
कीलाललिङ्गं संस्थाप्य पूजयामास सादरम् ॥

இந்த எட்டாவது அத்தியாயத்தில் ஹிமவானுடைய புத்திரியான தேவியானவள் கஜாரண்யத்தையடைந்து ஜலலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து பக்தியுடன் பூஜித்தாள் என்று கூறப்படுகின்றது.

கைலாஸபர்வதத்திலிருந்து புறப்பட்ட அகிலாண்டேசுவரியான உமையானவள் காவேரியினுடைய தென்கரையில் விளங்கும் ஞானபூமியையடைந்தாள். அந்த க்ஷேத்திரத்தையடைந்ததும் நாலுபக்கங்களிலும் பார்த்து அங்குள்ள வைபவங்களை அடியில்வருமாறு தேவி நிரூபிக்கிறாள்.

ஜம்புமஹரிஷியினுடைய உதரத்திலிருந்து உண்டான நாகமரமானது ஆகாயத்தையளாவி நிற்கும் தன்கிளைகளில் நெருக்கமாகஇருக்கும் வெளுப்பான பழங்களால் பகலிலும் வானத்தில் நக்ஷத்திரங்கள் இருக்கின்றனவா என்கிற பிரமத்தை பார்க்கும் ஜனங்களுக்கு உண்டுபண்ணுகிறதாய்க் கொண்டு நன்கு விளங்குகின்றது. அஷ்டப்பிராணிகளுடைய



அகிலாண்டேச்வரி அம்பாள் ஜம்புகேச்
வரரை பூஜை செய்தல்



எகபாத திருமூர்த்தம்.

ஸம்பந்தமே இங்குகிடையாது. சலிக்கவியலாத ஸ்திரமான சரீரத்தைப்பெற்றவைகள்கூட தம்மிஷ்டப்படி ஸஞ்சாரம் செய்கின்றன. இந்த ஞானக்ஷேத்திரத்தினுடைய ஆச்சரியமான வைபவமானது எனது சித்தத்திற்கு மிகவும் ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறது. மேலும் பசியுடன்கூடிய யானைக்குழவிக்குப் பெண்சிங்கம் தன்குட்டிக்குப்போல் அன்பாகப் பால் கொடுக்கின்றது. அந்த யானைக்குட்டியின் காதுஅடியால் தூக்கப்பட்ட ஸிம்மக்குட்டியானது பெண்யானையிடம் பால் குடிக்கின்றது. இந்த வேடிக்கையை அற்பம்கூட பயமில்லாமல் நின்றுகொண்டிருக்கும் பெண்மான் அசையாமல் பார்த்துக்கொண்டிருக்கிறது. ஞானக்ஷேத்திரத்தினுடைய ஆச்சரியமான சரித்திரமானது எனக்கு ஸந்தோஷத்தைக்கொடுக்கிறது. பின்னும் ஓரிடத்தில் பொறுமையையே பொருளாகக்கொண்ட வஸிஷ்டர் முதலான மஹரிஷிகளும் மற்றோரிடத்தில் ஸப்தரிஷிக்கூட்டங்களும் வேறிடத்தில் துவாதசார்க்கர்களும் அஷ்ட வஸுக்கள் ஒருபக்கத்திலும் ஒருமூலையில் இந்திரனும் மற்றொரு பாகத்தில் எட்டு ஸர்ப்பசிரேஷ்டங்களும் இருந்துகொண்டு மிகவும் போற்றக்கூடிய சிறந்த தபஸைச் செய்கிறார்கள். அன்றியும் இனி, கோகிலபக்ஷி முதலான பரவைகள்கூட பேசும் தன்மையையடைந்து வியாகரண சாஸ்திரத்தைப் போதிக்கின்றன. சில மான்கள் இதைக்கவனித்துக் கேட்கவேண்டுமென்று காதுகளை மேலே தூக்கிக்கொண்டு அசையாமல் நின்றுகொண்டிருக்கின்றன. சிலயானைகள் காவேரி ஜலத்தில் ஸ்நாநம் பானம் முதலியகாரியங்களைச் செய்துகொண்டு மிகவும் சாந்த ஸ்வபாவத்துடனிருக்கின்றன.

இரண்டு பாகமாகப் பிரிந்திருக்கிற காவேரிப்பிரவாகத்தின் மத்தியிலிருக்கும் இந்தக்ஷேத்திரத்தை நாகை, வேம்பு, கதம்பம், மா, வாழை, புன்னை, பாக்கு, பிலா, அர்ஜுனம்

முதலான புண்ய விருக்ஷங்கள் தங்களுக்கிருக்கும் ஜடத் தன்மையைப் போக்கவேண்டி இங்குவந்து தவம்செய்து கொண்டு இந்த க்ஷேத்திரத்தைப் பரிசுத்தமாகச் செய்கின் றன. நன்ருய் மலர்ந்த மல்லிகை, முல்லே, ஜாதி முதலிய புஷ்பங்களுடைய வாஸனையையபகரித்துக் கொண்டுவரும் இளங்காற்றினுடைய வியாபாரத்தால் கீழே விழுந்ததாயும் நன்கு பழுத்துக்கீழே விழுந்தபடியால் சிதறுண்டு வெளியில் பெருகும் கண்ஜலம்போல் மலினமாயும் இங்கு வஸிப்ப வர்களுடைய புண்ய விசேஷத்தால் வெளியில்வந்து கிடக் கும் பாபங்கள்போல் கருப்பாயும் ரஸத்துடனுமிருக்கும் நாகப்பழங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. நான் பதியான பசுபதியைவிட்டுப் பிரிந்திருந்தாலும் அதிகமான புண்யங்களால் அந்தப்பிரபுவினுடைய பாதபத்மங்களேயடை ந்திருக்கிற இந்த க்ஷேத்திரமானது கூடிய சீக்கிரம் பர்த்தா வினுடைய பாதாரவிந்தஸேவையை எனக்குண்டுபண் ணு மென்கிற நம்பிக்கையைக் கொடுக்கிறதாயுமிருப்பதால் இந்த ஞானக்ஷேத்திரமானது எனக்கு அளவில்லாத ஆனந்தத் தைக்கொடுக்கின்றது. இவ்விதம் பலவாருகத்துதித்து புள காங்கிதசரீரத்தோடுகூடிய தேவியும் ஸுநந்தை என்கிற ஸகியுடன் தானுமோரிடத்தில் வஸித்தாள். அந்தஸ்தலமா னது உக்ரமானதபஸ் செய்யவேண்டி பிர்ம்மாவால் வஸித் துக்கொண்டிருக்கப்பட்ட ஆச்ரமத்திற்கு ஸமீபத்திலிருந்த து. இவ்விதம் தனது ஆச்ரமத்திற்கு சமீபத்தில் ஸ்ரீபார் வதிதேவி வந்திருக்கிருள் என்பதை பிர்ம்மா அறிந்து உட னே அவளேயடைந்து பூஜாத்திரவியங்களால் விதிப்படி அர்ச் சித்தார். பிறகு ஸந்தோஷத்தினுல் தளதளத்துவரும் வசன ங்களால் அம்பிகையை சதுர்முகன் போற்றத்துடங்கினுர்.

नमोऽस्तु सौवर्गमहीरुहोत्करप्रसूनसौरभ्यनिरन्तरालके ।
नमोऽस्तु सम्राष्टकलात्मशीतरुग्विडम्बनाचुंचुरफालपट्टिके ॥ १ ॥

नमोऽस्तु कारुण्यसुधातरङ्गिणीचरिष्णुमीनायितचारुवीक्षणे ।
नमोऽस्तु ताटङ्कलसन्मणिप्रभानिकायनीराजितगण्डफालिके ॥२॥

नमोऽस्तु बन्धूकलतान्तविद्रुमप्रवालबिम्बीफलपाटलाधरे ।
नमोऽस्तु मन्दस्मितमाधुरीसुधारीपरीक्षाळमुखेन्दुमण्डले ॥ ३ ॥

नमोऽस्तु पुष्पायुधवीरविक्रमप्रथासमुद्घोषणशङ्खकन्धरे ।
नमोऽस्तु हारावळिजन्हुकन्यकापरिष्कृताभोगकुचक्षमाधरे ॥

नमोऽस्तु कन्दर्पहरोपगूहनप्रमोदरोमाञ्चितबाहुवाल्लिके ।
नमोऽस्तु वैभातिकशोणवारिजप्रभासदृक्षच्छविपाणिपल्लवे ॥५॥

नमोऽस्तु तुङ्गस्तनभारतुर्यतासमुन्मिषत्कार्श्यमनोज्ञमध्यमे ।
नमोऽस्तु भूतेशजयार्थसभ्रमस्मराग्निकुण्डायितनाभिमण्डले ॥६॥

नमोऽस्तु विस्तीर्णनितम्बमण्डलीरथाङ्गचक्रभ्रमितेशमानसे ।
नमोऽस्तु लक्ष्मीरमणादिदेवतासमुत्करोत्तंसितपादपङ्कजे ॥ ७ ॥

नमोऽस्तु निर्णिद्रासितेतराम्बुजप्रभोपमेयाङ्गमरीचिमञ्जरि ।
नमोऽस्तु नम्राभिमतप्रदायके नमो नमस्ते त्वखिलाण्डनायके ॥८॥

ஸ்வர்க்கலோகத்தில் விளங்கும் உத்தமமான கற்பகத் தருவினுடைய சிறந்தமலர்களுடைய வாஸனையால் நிரம்பிய கேசங்களையுடைய ஹே தேவி! உன்பொருட்டு நமஸ்காரம். அஷ்டமீசந்திரகலையைப் பரிஹஸிக்கும் திறமைவாய்ந்த அழகான நெற்றியையுடையவளே! உனக்கு வந்தனம். எப்பொழுதும் பெருகிக்கொண்டிருக்கும் கருணையாகிற அமிருதப்பிரவாகத்தில் ஸஞ்சாரம்செய்யும் மீன்போல் விளங்குகிற சிரேஷ்டமான நேத்திரங்களையுடைய உனக்குப் பிரணாமம் செய்கிறேன். காதுஓலைகளிலிழைக்கப்பட்ட ரத்னங்களுடைய காந்திஸமூகங்களால் ஹார்த்தி சுத்தப்பட்டிருக்

கும் கன்னப்பிரதேசத்தையுடைய உனக்கு நமஸ்காரம். செம்பாத்தை மலர், தளிர், பவழம், கோவைக்கனி இவைகள் போல் சிவந்த உதட்டையுடைய உனக்குவந்தனம். மந்தஸ்மிதமாகிற அமிருதப்பிரவாகத்தால் சுத்தம்பண்ணப்பட்ட முகமாகிற சந்திரமண்டலத்தையுடையவளுக்கு நமஸ்காரம். மன்மதனுடைய அதிகமான பராக்கிரமத்தை எங்கும் பிரஸித்தி செய்கிறதில் ஸாமர்த்தியமுள்ள சங்கம்போல் பிரகாசிக்கிற கண்டத்தையுடையவளுக்குப் பிரணாமம். கங்காப்பிரவாகம்போலிருக்கும் முக்தாஹாரங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்தனங்களையுடைய உனக்கு நமஸ்காரம். விடியற்காலத்தில் விளங்கும் செந்தாமரைமலருடைய காந்திக்குச் சமானமான தளிர்போன்ற பாணிகளையுடையவளுக்கு நமஸ்காரம். பெரிதான ஸ்தனங்களுடைய பாரத்தால் பீடிக்கப்பட்டதும் குறுகியதாயுமிருக்கும் இடையால் பிரகாசிக்கிறவளும் ரமாபதி முதலான தேவசிரேஷ்டர்களால் அலங்கரிக்கப்பட்ட சரணகமலங்களையுடையவளாயும் நன்றாய்மலர்ந்த கறுத்த தாமரைப்பூவின் காந்திக்குச்சமமான சரீரத்தினுடைய பிரபையையுடையவளும் தம் பாதங்களில் வந்தனம் செய்வோர்களுக்கு இஷ்டத்தைக் கொடுக்கிறவளும் அகிலாண்டங்களுக்கும் நாயகியாயுமிருக்கும் உன்பொருட்டு நமஸ்காரம். தேவதேவரான ஸ்ரீமஹாதேவருடைய பத்நியான உன்னை புண்யவசத்தால் இப்பொழுது தரிசிக்கும்படி நேர்ந்தது. இதுவரையில் என்னால் செய்யப்பட்ட தவத்துக்குப் பலரூபமாக ஆகிறாய். ஹரருக்குப் பிரியையான ஹே பார்வதி! இந்தக்ஷேத்திரத்திற்கு நீ வந்ததற்கு யாது காரணம். உன்னுடைய தர்சனத்தால் நாங்கள் அனைவர்களும் பரிசுத்தர்களாக ஆய்விட்டோம். உன் தர்சனம் இப்பொழுது எனக்குக்கிடைத்தபடியால் என்னால் அநுஷ்டிக்கப்பட்ட யாகமும் என்னுடைய வித்யையும் என் தவமும் ஸபலமாக ஆகின்றது. ஹே சர்வாணி! உபநிடதங்களாலும்

சாஸ்திரங்களாலும் ஆகமங்களாலும்கூட அறியமுடியாத தான உன்னுடைய தர்சனம் என்னால் அடையப்பட்டது. பல புண்யதீர்த்தங்களுக்கிருப்பிடமாயும் தவம் செய்வோர்களுக்குச் சீக்கிரம் பலத்தைக்கொடுக்கின்றதாயும் தேவரிஷிகளுடைய மனதிற்கு உல்லாஸத்தைக் கொடுக்கின்றதுமான கைலாஸத்தைக் காட்டிலும் சிறந்தஸ்தானம் வேறுகிடையாது. அவ்வித கைலாஸத்தில் வஸிப்பவரும் பக்தர்களிடம் அதிகக்கருணையுடையவரும் உன்னைவிட்டுப்பிரியாமல் இருப்பவருமான சந்திரசேகரரை விட்டுப்பிரிந்து நீ மாத்திரம் எப்படிவந்தாய்? என்று இவ்விதம் பிரச்னம் செய்து நமஸ்கரித்து நிற்கும் பிர்ம்மாவை நோக்கி ஸகிகளுடைய மத்தியில் இருக்கும் உமாதேவியானவள் கூறத்தொடங்கினாள்.

ஹே ஹிரண்யகர்ப்ப! காரணத்துடன் கூடியதும் விசேஷமான கருத்துடன் கூடியதும் நான் இங்கு வருவதற்குக் காரணமுமான ஸ்ரீசங்கரரால் சொல்லப்பட்ட வசனத்தைக் கூறுகின்றேன். ஒருஸமயம் நான் கிரிசரைப்பார்த்து ஹே பகவன்! உம்மோடுகூட நானும் லயத்தையடையும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தேன். இவ்விதம் பிரார்த்தித்த என்னிடம் பகவான் கூறுகின்றார்.

முந்தி ஒருஸமயம் பிர்ம்மா முதலான தேவர்கள் மஹரிஷிகள் மற்றுமுள்ளசிலர் இவர்களெல்லாரும் அதிகமுயற்சியுடன் ஞானத்தைப்பெறவேண்டுமெனக்கருதி தபஸ்செய்தார்கள். இவர்களுடைய சிறந்ததவத்தால் நான் ஸந்தோஷமடைந்து அங்குசென்றேன். சிரேஷ்டமான ஆனந்தத்தை கொடுக்கக்கூடிய சிறந்தஞானத்தை அவர்களுக்குபதேசித்தேன். அந்த இடத்திற்கே நீயும்சென்று தபஸ் செய்து கொண்டு என்னையும் பூஜைசெய் என்று சங்கரரானவர் கம்பீரமான தம்வாக்கால் எனக்கு அறிவித்தார். பகவானால்

கூறப்பட்ட உத்தமமான அந்த உபதேசத்தை என்சிரஸால் தரித்துக்கொண்டு உம்முடைய ஸமீபத்தையடைந்தேன். ஆகையால் சிவனால் கூறப்பட்ட க்ஷேத்திரத்தை சீக்கிரமாக எனக்கு அறிவிக்கவேண்டுமென்று கூறினாள். இதைக்கேட்ட பிர்ம்மா ஸகல தேவதைகளுக்கும் ஈசுவரியாயும் மிகவும் பரிசுத்தமான ஹிருதயத்தையுடையவளாயுமிருக்கும் ஹே அகிலாண்டேசுவரி! சிவனால் உனக்குச்சொல்லப்பட்ட உத்தமமான அந்தக்ஷேத்திரம் இதுதான். அனேகதேசங்களிலிருக்கிறவைகளும் பலபர்வதங்களிலிருக்கின்றவைகளும் மற்றுமுள்ள புண்யதீர்த்தங்களும் இந்தக்ஷேத்திரத்தில் ஸாந்நித்யத்தையடைந்திருக்கின்றன. இந்தபூமியானது ஐம்பது கோடி விஸ்தீர்ணமுள்ளதாகக் கூறப்படுகின்றது. அதின் மத்தியில் ஞானபூமி என்றுமிகவும் பிரஸித்தமாய் இதுதான் பிரகாசிக்கின்றது. தபஸ்விற்கு விருத்தியைக்கொடுப்பதாலும் சீக்கிரமாக பலனையளிப்பதாலும் நியமிகளுக்கு ஞானத்தைக் கொடுப்பதாலும் இதற்கு ஞானபூமி என்று பெயர் ஏற்பட்டிருக்கின்றது. ஹே பகவதி! சங்கரப்பிரியவல்லபே! உன்மனதிற்குத் திருப்தியாயிருந்தால் ஸகலஜகத்திற்கும் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்கிற காரியங்களைச்செய்கின்றவரான ஸ்ரீபரமேசுவாருடைய ஆக்ஞானுஸாரமாக இந்தக்ஷேத்திரத்தில் நீ தவம்செய்யலாம் என்று சொல்லிவிட்டு பிர்ம்மாவானவர் தியானகர்மாவை அனுஷ்டிக்கச்சென்றுவிட்டார். பார்வதிதேவியும் அந்த இடத்தில் தவம் செய்யவேண்டுமென்று தீர்மானித்தாள். உடனே காவேரியின் மத்தியிலிருந்துகொண்டு சந்திரனை சிரோபூஷணமாகக்கொண்டவரும் சித்தத்திற்கு ஆனந்தத்தைக் கொடுப்பவருமான ஸ்ரீ பரமேசுவரனை அற்பகாலம் தியானம்செய்து பிறகு காவேரியினுடைய ஜலத்திலிருந்தும் கிரிபுத்திரியான தேவியானவள் கரையேறி சிவார்ச்சனத்தில் பிரியமுள்ளவளாய்க் கொண்டு உடனே ஸகலஜகத்திற்கும் சிருஷ்டிகர்த்தாவான சதுர்முக

னிடம் இவ்விதம் மொழிந்தாள். மிகவும் சிறந்ததாயும் பிர்ம்
மஞானத்தை சீக்கிரமுண்டுபண்ணுகிறதாயுமிருக்கிற இந்த
க்ஷேத்திரத்தில் எனக்குபூஜை செய்வதற்காக நீர் ஒருலிங்க
ம் கொடுக்கவேண்டுமென்று ஆக்ஞாபித்தாள். அந்த ஆக்
ஞையைக்கேட்ட பிர்ம்மாவானவர் அகிலாண்டேசுவரியை ந
மஸ்கரித்து அஞ்சலிபந்தம் செய்துகொண்டு எல்லாவற்றையு
ம் நன்கறிந்த ஹே லோகமாதாவே! மூவுலகங்களிலும் உன்
னால் அறியப்படாததொன்றுமில்லை. ஆனாலும் எனக்குத்
தெரிவிக்கவேண்டியது அற்பமிருக்கின்றது. இந்தஜகத்தான
து பஞ்சபூதஸ்வரூபமாயிருக்கின்றது. இவைகளில் எந்த
ரூபம் உனக்குப் பூஜிக்கவேண்டுமென்று தோன்றுகிறதோ
அஃது எனக்குத்தெரியவில்லை என்றார். பார்வதி ஹே பங்க
ஜாத்பவ! நீர் கூறிய வசனம் மிகவும் சிறந்தது என்று கம்
பீரமான வசனத்தால்கூறி பிர்ம்மாவைப்பார்த்து நான் இவ்வி
டம்வரும் ஸமயத்தில் ஸ்ரீசங்கரரானவர் பிர்ம்மா அந்தவிடத்
தில் தவம்செய்கிறார். நீயும் அவருடைய வார்த்தையைக்
கேட்டு அந்த இடத்தில் தபஸ்செய் என்று செப்பினார் என்
றுகூறும் சிவையினுடைய வசனத்தைச்செவியுற்ற வாக்
யார்த்தங்களுடைய ஸாரத்தை நன்கறிந்தவரான பிர்ம்மா தே
வியின் ஆக்ஞைக்கு ஸ்வாதீனமாயிருந்துகொண்டு தேவியை
நோக்கி ஹே அம்ப! ஸமஸ்த அண்டங்களுக்கும் நீதான்
அதிபதியாயிருக்கிறாய். ஆகையால் எவ்விதம் ஆக்ஞைசெய்
கின்றாயோ அவ்விதம் லிங்கம் உண்டாகிவிடும் என்றுகூறி
மௌனமாக முன் நின்றுகொண்டிருந்தார். கிரிபுத்திரியும்
அவ்விதமே செய்கிறேனென்று ஸகலபாபங்களையும் நாசம்
செய்கிறதாயும் ஸர்வதீர்த்தங்களிலும் சிறந்ததாயும் எவ்வித
ஸித்திகளையும் அளிக்கும் சக்திபெற்றதும் புண்யரூபமுமான
பிர்ம்மபுஷ்கரிணீயென்கிற தீர்த்தத்திலிருந்தும் அகிலாண்
டேசுவரியான பகவதியானவள் சுத்தமாயும் சிகப்பாயுமிருக்
கும் தீர்த்தத்தையெடுத்து கைகளால் உருண்டையாகச்செய்

து அதைலிங்கரூபமாகச் செய்துவிட்டாள். உடனே அதைப் பிரதிஷ்டை செய்து ஜம்புவென்று பிரஸித்தி பெற்ற மஹரிஷியைப்பார்த்து நீ விருக்ஷரூபமாயிருந்துகொண்டு நம்மிருவர்களுடைய ஆத்மச்சாயையில் (அதாவது நம்முடைய நிழலில்) இந்தலிங்கத்தை ஸ்திரமாக இருக்கும்படிசெய் என்று உத்திரவிட்டாள். தேவியின் கட்டளைப்படியே செய்கிறேன் என்று அம்முனியும் அம்பிகையை வந்தனம் செய்து அவள் ஆக்ஞையை சிரமேற்கொண்டு தானும் விருக்ஷரூபமாயிருந்துகொண்டு தன்னுடைய சாயையால் அந்தலிங்கத்தை ஸேவித்துக்கொண்டிருந்தார். அந்த முனிவரானவர் விருக்ஷரூபமாயிருந்தாலும் பஞ்சாக்ஷாஜபத்தையே ஜபித்துக்கொண்டு ஸ்ரீபரமேசுவரருடைய பிரத்தியக்ஷத்தையடைய விரும்பி உக்கிரமான தபஸ்செய்துகொண்டிருந்தார். அந்த விருக்ஷத்தினுடைய அடிவேர் பாதாளலோகத்தையும் அதின் மத்தியப்பிரதேசம் ஆகாயத்தையும் கிளைகள் பத்துதிக்குகளையும் புஷ்பங்கள் பல நக்ஷத்திரங்களாகவும் ஆகாயத்தை அளாவிய சரீரத்தையுடையதும் ஸகலமான தேவதைகளாலும் ஸேவிக்கத்தகுந்ததாயும் வேதங்களைப்போல் அநேக சாகைகளுடன் கூடியதாகவும் விளங்கிக்கொண்டிருந்தது. இவ்விதம் ஜம்புமுனியானவர் மிகவும் பக்தியுடன் தன்சக்தியைப்பிரகாசப்படுத்தும்பொழுது அந்தலிங்கத்தை நன்றாய்ப் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகவறிந்து மிகவும் ஸந்தோஷப்பட்டு தான் பரிசுத்தையாயிருந்துகொண்டு அந்தலிங்கத்திற்குப் பஞ்சசுத்தியைச்செய்து அதை மந்திரஸ்வரூபமாக்கி ஷோடசோபசாரங்களைச்செய்து சிரத்தையுடன் பூஜிக்கத் தொடங்கினாள். கிரிஜையானவள் அந்தலிங்கத்திற்கு ரேசக பூரக கும்பகங்களால் அபிஷேகம் செய்தாள். தைலம் பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் முதலியவைகளாலும் அபிஷேகம்பண்ணி பக்தர்களுக்கு சுகத்தைக் கொடுக்கிறவரான அந்த சங்கரருக்கு பீதாம்பரம் முதலானவஸ்திரங்

களாலும் சிறந்த சந்தனத்தாலும் திவ்யாபரணங்களாலும் அகிலாண்டேசுவரி தன்னிஷ்டப்படி அலங்காரம் பண்ணி ஸகிகளால் வனங்களிலிருந்து கொண்டுவரப்பட்டவைகளா யும் சிறந்த வாஸனையையுடையவைகளுமான தாமரை, கல்ஹாரம், ஆம்பல், வெண்தாமரை, அரளி, ஜாதி, சம்ப கம், மொகுழம்பூ, கொன்னை, புந்நாகம், அசோகம், தும்பை, ஊமத்தை, நந்தியாவர்த்தம், பில்வம், மல்லிகை, மாதுளை, மந்தாரம் முதலிய புஷ்பங்களாலும் மா முதலான பல பத் திரங்களாலும் வண்டுகளால்கூட தொடப்படாத வேறான பல புஷ்பங்களாலும் மஹேசுவரனை அர்ச்சனம்செய்து தன் சக்தியால் வரவழைக்கப்பட்ட தூபங்களாலும் தீபங்களாலு ம் சந்தனம், குங்குமம் இவைகளாலும் நன்கு ஆராதித்து அ நேகவ்யஞ்சனங்களுடன் கூடிய நைவேத்தியங்களையும் உப ர்ந்த தீர்த்தங்களையும் ஸ்ரீசங்கரருக்கு நிவேதனம் செய்கிற வளான அந்தப்பரமேசுவரியானவள் அநேக விசித்திரங்க ளான தீபங்களால் ஹார்த்தியும் எடுத்தாள். பிறகு கண்ணா டி கொடை இவைகளாலும் திங்கள்போல் வெண்ணிறமான சாமரங்களாலும் மிகவும் சிறந்ததான விசிரியாலும் ஸகல வாத்யங்களுடன் கூடியகானங்களாலும் மற்றுமுள்ள ஸகல உபசாரங்களாலும் இந்துசேகரரை ஆராதனம் செய்தாள். இந்தப்பிரகாரம் அந்த ஹிமாத்ரிகன்னிகையானவள் வெகு காலம் மிகவும் பக்தியுடன் கிரிசரை தன்சித்தத்தில் தியான ம்செய்துகொண்டு பூஜித்துவந்தாள். இவ்விதம் பூஜித்த தேவியானவள் அதிக ஸந்தோஷப்பட்டு ஆனந்தஸாகரத்தி ல் முழுகினள்.

வெகுகாலம் பகவானை ஸ்தோத்திரம்செய்து புளகாங் கிதசரீரத்தையுடையவளாய் சிரஸ்ஸில் அஞ்சலிபந்தம் செ ய்துகொண்டு ஆனந்தபாஷ்பத்துடன் ஸ்மராரியைப்போ ற்றத்தொடங்கினள். ஹே ஸ்வாமி! மிகவும் பூஜ்யரான

தங்களைப்பற்றித்துதிக்க நான் எப்படி சக்தியுள்ளவளாக ஆவேன். ஸகல வாக்குகளுக்கும் அதிதேவதையான ஸரஸ்வதியும் தங்களைத் துதிக்க யோக்யதையில்லாதவள். பிருஹஸ்பதியும் அவ்விதமே. உம்முடைய ஒருஆத்மாவானது ஜகத்தை ஸிருஷ்டிக்கவேண்டி பிர்ம்மாவாக ஆயிருக்கிறது; ரக்ஷிக்கவேண்டி நாராயணர்ஸ்வரூபமாகயிருக்கிறது. அறிவிற்சிறந்த முனிவர்கள் உம்மை ஸகலப்பிராணிகளுடைய சித்தத்தையடைந்தவராகவும் ஞானஸ்வரூபியாயும் உபாதியற்றவராயும் தோஷமில்லாத சுத்தரூபமாகவும் பரமார்த்தஸத்யஸ்வரூபமாகவும் பரப்பிர்ம்மமாகவும் கூறுகிறார்கள். ஸகலவேதங்களுடைய தத்வார்த்தங்களை யறிந்த மற்றும் சிலபெரியோர்களால் நீர் பரமாணுவிற்கும்கீழான அணுவாயும் மஹத்தாயும் சொல்லப்படுகின்றீர். சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்கிற மூன்றுகர்மாக்களையும் நீரேசெய்கிறீர். ஆகையால் ஸகலப்பிராணிகளுக்கும் நீர்தான் ஆதாரமாயிருக்கின்றீர். எட்டுதிக்பதிகளும் பிர்ம்மா, விஷ்ணு, ருத்திராள் முதலானவர்களும் உமக்கு வேலைக்காரர்கள். அமிருதமயமாய் விளங்கும் லிங்கஸ்வரூபமான உமக்குவந்தனம். ஹே கிரிச! வித்வான்கள் சர்மரூபமான தங்களுடைய நேத்திரங்களால் எப்பொழுதும் மிகவும் உத்தமமான உம்முடைய தேஜஸ்ஸைப்பார்க்கிறார்கள். ஜலரூபமாயும் லோகரூபமாயும் லோகங்களுக்கு ஜீவகர்த்தாவாயுமிருக்கும் உம்மையும்பொருட்டு நமஸ்காரம். கங்கையினுடைய சலிக்கிறதான அலைகளால் அடிக்கப்பட்டிருக்கிற சந்திரகலையையுடையவரும் தத்வஞானஸ்வரூபியாயுமிருக்கிற உமக்குவந்தனம். ஸமஸ்தஜகத்தும் ஜலஸ்வரூபம் ஸகல தேவதைகளும் ஜலரூபம் என்றுகூறும் சுருதியின் கருத்திற்கிணங்க ஜலஸ்வரூபமாயும் மஹானாயும் விளங்கும் ஹே பிரபோ! உமக்கு நமஸ்காரம். ஹே சங்கர! பூதேச! நீர் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிரும். ஸகலஜகத்தையும் ரக்ஷிக்கிறவராயும் சந்திரனைசிரஸ்ஸில் அலங்க

ரமாகவுடையவரும் பக்தர்களைப்பாதுகாப்பதில் பிரியமுள்ள வராயும் நெற்றிக்கண்ணால் தஹிக்கப்பட்ட காமனுடைய சரீரபஸ்மாவைதரிப்பவரும் ஜடையில் சுத்துகிறதான கங்காப்பிரவாகத்தையுடைவரும் கர்ணங்களில் கடுக்கனுகவிள ங்கும் ஸர்ப்பசிரேஷ்டங்களையுடையவரும் முகத்தில் விளங்கும் மந்தஸ்மிதத்தால் பிரகாசிக்கும் தளிர்போன்ற உதட்டையுடையவரும் காளகூட விஷத்தின் சேரபையால் கருப்பாயிருக்கும் கண்டத்தைத்தரிபபவரும் சாபம், சூலம், டமரு, மான் இவைகளால் அழகான கைகளையுடையவரும் பிர்ம்மாக்களுடைய அனுகியான சிரஸ்ஸுகளுடைய மாலைகளால் அலங்கிருதரும் புலித்தோலையணிந்தவரும் விஸ்தாரமான மார்புடன் கூடியவரும் விஷ்ணு, பிர்ம்மா, இந்திரன் இவர்களுடைய கிரீடரத்னங்களால் ஹார்த்தி சுத்தப்பட்ட பாதகமலங்களையுடையவரும் வேதாந்தமென்கிற உபநிடதங்களுக்கு அலங்காரபூதராயும் ரஜதாசலவாஸியாயுமிருக்கும் ஹே சந்திரசூட! இங்குவாரும். என்னைப்பாதுகாரும் தர்சனத்தைக்கொடுத்து என்விரஹத்தைத்தீரும். என்று இவ்விதம் தனக்குத்தோன்றியபடி எல்லாம் சொல்லிக்கொண்டு துக்கத்தால் தளதளத்தவாக்குகளால் அழுதுகொண்டும் கண்ணீரால் கலங்கிய நேத்திரங்களையுடையவளாயும் தபஸ்செய்துகொண்டிருக்கும் தேவியைப்பார்த்து அந்த விடத்தில் வெகுகாலமாகத் தவம்செய்யும் ஜம்புமுனியானவர் கூறுகின்றார். லோகமாதாவான ஹே தேவி! உன்னுடையஹிருதயம் ஏன் சிரமப்படுகின்றது. சிவனுக்குப்பிரியையான பத்நியே! மிகவும் மிருதுவாயும் அழகாயிமிருக்கும் இந்தச்சரீரத்தை சிரமத்தையடையும்படி செய்யாதே. ஸகல தேவதைகளுக்கும் தேவதையான மஹேசுவரனுடைய பார்யையான ஹே சிவே! எதற்காக இவ்வித கோரமானதபஸ் உன்னால் செய்யப்படுகின்றதோ அதை நான் அறிவேன். அதற்காகவே என்னாலும் தவம்செய்யப்படுகின்றது. சீக்கிரமாக நம்

மிருவர்களுடைய நிமித்தமாகக்கருணையால் ஸ்ரீசங்கார் நம க்குப் பிரத்தியக்ஷமாகப் போகிறார். ஆகையால் சோகத்தை விட்டு விட்டு நன்கு தபஸ்செய். என்று பிர்ம்மா சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது அவர்களுடைய சிறந்த தவத்தால் ஸந்தோஷத்தையடைந்த நீலகண்டரானவர் அங்கு பிரதிஷ் டை பண்ணப்பட்ட ஜலமயமான லிங்கத்திலிருந்தும் அவர் களுக்கு முன் தோன்றினர். உடனே கிரிஜையைப்பார்த்து தத்வார்த்தத்தை வெளியிடுகிறதான உன்னுடைய ஸ்தோத் திரத்தால் நான் மிகவும் ஸந்தோஷத்தையடைந்தேன் என் று மொழிந்தார். அவரைக்கண்ணுற்ற அவ்விருவர்களும் ம னம் மகிழ்ந்து பக்தியால் வந்தனம்செய்து உம்முடைய தர்சனத்தால் நாங்கள் தன்யர்களாகிறோமென்று மொழிந் தார்கள். முக்கண்ணனும் தேவியைப்பார்த்து ஹே அகிலா ண்டேசுவரி! முன் என்னால் எவ்விதம் சொல்லப்பட்டதோ அவ்விதம் தபஸ்ஸும் என்னுடைய அர்ச்சனமும் உன்னால் அனுஷ்டிக்கப்பட்டன என்றுகூறி பகவானான சம்பு பார்வ தியின்பொருட்டு எப்பொழுதும் விளங்கும் தன் சரீரத் தோடு ஐக்யத்தைக்கொடுத்து சிறந்த ஞானோபதேசத்தை யும் செய்தார். இந்தப்பிரகாரம் ஈசனால் உபதேசிக்கப்பட்ட ஞானத்தைப்பெற்று ஹிமாசலத்தின் புத்திரியான அந்த பவாநியானவள் ஸச்சிதாநந்தஸ்வரூபியாயிருந்துகொண்டு தவம்செய்ததாலேற்பட்ட சிரமத்தைப் போக்கடித்து மிக வும் ஸந்தோஷத்துடன் ஈசுவரபாவத்தை யடைந்தாள்.

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் 9.

नवमे ब्रह्मणे दत्तमीशेन वर उत्तमः ।
अनन्तरं शिवायै च देवोऽदाद्बहुलान्वरान् ॥

இந்த ஒன்பதாவது அத்தியாயத்தின் துவக்கத்தில் ஈசனால் சதுர்முகனின்பொருட்டு வரம்கொடுக்கப்பட்டதென்றும் பிறகு பார்வதியின்பொருட்டும் அநேகம் வரன்கள் அளிக்கப்பட்டனவென்றும் கூறப்படுகின்றது.

லோகத்திற்குப் பிதாமஹரான பிர்ம்மாவானவர் பிரத்தியக்ஷமாக வந்திருக்கும் ஸ்ரீமகாதேவரைப்பார்த்து பக்தியுடன் நமஸ்கரித்துப்போற்றினார். அவருடைய ஸ்தோத்திரத்தால் பிரஸன்னரான அமிருதேசுவரரான பகவான் பிர்ம்மாவைப்பார்த்து ஹே சதுர்முக! வேண்டியவரன்களைக் கேட்டுக்கொள்ளும், கொடுக்கிறேன்; என்று பகர்ந்தார். இதைக்கேட்ட விரிஞ்சியும் ஹே சம்போ! எதிலிருந்தும் நீர் உண்டானீரோ, எதில் என்னால் தபஸ்செய்யப்பட்டதோ இந்தத்தீர்த்தமானது பிர்ம்மபுஷ்கரிணீ என்று பிரஸித்தியடையட்டும். இதில் எந்தமனிதர்கள் ஸ்நானம்செய்கிறார்களோ அவர்கள் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு உம்முடைய ஸாயுஜ்யத்தையடையவேண்டும். இப்பொழுது நான் துவஜாரோகணம் முதற்கொண்டு கிரமமாக உம்முடைய உத்ஸவத்தை நடத்துகிறேன். ஹே தேவ! கல்பம் முடிகிறவரையில் ஒவ்வொரு ஆண்டும் இந்த உத்ஸவம் நடக்க வேண்டும். என்னுடைய நக்ஷத்திரமான ரோகிணியில் இதற்கு அவபிருதக்கிரியை (அதாவது உத்ஸவஸமாப்தி) நடக்கவேண்டும். ஹே மஹேசுவர! அந்த ஸமயத்தில் எந்த மனுஷ்யாள் இதில்ஸ்நானம் செய்கிறார்களோ அவர்கள் முக்தர்களாக ஆகவேண்டும் என்று பிரார்த்தித்தார். கருணைக்கட

லான ஸ்ரீஅமிருதேச்வசர் பிர்ம்மாவின் பிரார்த்தனைக்கிணங்கி மேகத்வனிபோல் கம்பீரமான வசனத்தால் அஞ்சலிபத்தம் செய்துகொண்டு பக்தி சிரத்தையாய் நிற்கும் கமலாஸனரின் பொருட்டு உன்னுடைய பெயரால் இந்தபுஷ்கரிணீ மூன்றுலகங்களிலும் விளங்கட்டும். அதில் ஸ்நாநம்செய்கிற ஜனங்கள் ஸம்ஸாரஸம்பந்தமான பாபங்களிலிருந்தும் விடுபடட்டும். இந்த உத்ஸவமானது மாகமாஸத்தில் சந்திரன் மிருகசீர்ஷத்திலிருக்கும்பொழுது ஆரம்பிக்கப்பட்டு பால்குனமாஸத்தில் ரோகிணி நக்ஷத்திரத்தில் அவபிருதத்தையடையட்டும். நீர் இந்தமஹோத்ஸவத்தை இருபத்தேழு நாள்களில் நடத்தும். சைவாசாரத்தை யனுஸரித்து ஆகமத்தில் கூறியவாறு நடக்கட்டும். ஒன்பது த்வஜங்களை ஆரோபணம் செய்து ஸ்வஸ்திவாசனபூர்வகமாக விஷ்ணுவையும் தேவதைகளையும் ஆவாஹனம்செய்து மஹோத்ஸவத்தை நடத்து என்று சங்கரரால் சொல்லப்பட்ட பிர்ம்மா மாகமாஸத்தில் ஸோமநக்ஷத்திரத்தில் த்வஜாரோபணம்செய்து நான்குபக்கங்களிலும் தேவதைகளை ஆவாகனம் செய்து வேதவாத்திய சப்தங்களாலும் அனேகவிதமான நைவேத்தியங்களாலும் பல வாஹனங்களாலும் கணேசர், ஸ்ரீஜம்புநாதர், ஸ்ரீஅகிலாண்டேசுவரி இவர்களுக்கு விதிபிரதக்ஷிணபூர்வகமாக ரதோத்ஸவத்தை நடத்திவைத்து பால்குனமாஸத்தில் ரோகிணீ நக்ஷத்திரத்தில் உத்ஸவஸமாப்தியையும் முடித்துவைத்தார். இவ்விதம் ஆதியில் பிர்ம்மாவால் துவக்கி நடத்தப்பட்ட இந்த உத்ஸவமானது அதுமுதல் ஒவ்வொரு வருஷமும் நடைபெறுகின்றது என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள். பிறகு ஸமீபத்தில் பிரத்தியக்ஷமாயிருக்கும் கௌரீநாதரைப்பார்த்து ஜம்புமுனிவர் பிரார்த்திக்கின்றார். ஹே ஸ்வாமி! தங்களுடைய பிரஸாதத்தால் ஸகலஸித்தியும் எனக்கேற்பட்டுவிட்டது. ஆனாலும் வேறொரு வரம்வேண்டும். நீர் மூவுலகங்களுக்கும் நாதராயி

ருக்தாலும் ஜம்புநாதர் என்று என்பெயரால் பிரஸித்தியடை யவேண்டும். இந்தத்வீபத்திற்கும் இந்த ஜம்பூவிருக்ஷத்தின் பெயரால் ஜம்பூத்வீபமென்று பெயர் ஏற்படவேண்டும் என்று பிரார்த்தித்தார். பரமேசுவரனும் அவர்கேட்டபடியே வரமளித்தார். அதுமுதல் இந்தத்வீபத்திற்கு ஜம்பூத்வீபமென்று பெயர் பிரஸித்தியாய்விட்டது. பின்னும் மஹேசன்னாலும் இந்தலிங்கத்தில் எப்பொழுதும் வஸித்துக்கொண்டிருக்கிறேன் என்றும்கூறினார். அதுமுதற்கொண்டு மேற்குமுகமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிற அந்த லிங்கம் மிகச்சிறந்ததென்று ஆகமசாஸ்திரத்தை நன்கறிந்த அறிஞர்களால் போற்றப்படுகின்றது. அதேஸமயத்தில் சைலராஜன் புத்திரியானவள் சந்திரசேகரரிடம் இவ்விதம் அறிவிக்கின்றாள். உலகங்களுக்கெல்லாம் ஒரே காரணவஸ்துவாயும் தேவதேவராயும் விளங்கும் ஹே மஹாதேவ! வேதாந்த விஷயமாய் அற்பம் அறிவிக்கவேண்டியிருக்கின்றது. என்று சொல்லியதைக்கேட்டு பகவானும் ஸந்தோஷத்துடன் தேவியைப்பார்த்து உன்மனதில் தோன்றுகிறதைத் தெரிவிக்கலாமென்று உத்தரவு கொடுத்தார். உடனே தேவி அடியில் வருமாறு கூறுகின்றாள். இங்கு விளங்கும் காவேரிநதியானது நதிகளுக்குள் சிறந்தது. தாயாரைப்போல் சுத்தமான தன் தீர்த்தத்தால் ஸகலப்பிராணிகளையும் ரக்ஷிக்கிறாள். எழு நாள் யமுனாநதியிலும் மூன்றுதினம் கங்கையிலும் ஸ்நானம் செய்வதால் எந்த பலன்கிடைக்குமோ அந்த பலத்தை இந்தக்காவேரி தர்சனமாத்திரத்தில் கொடுத்து ஸகல பாபங்களையும் போக்கிப் பரிசுத்தம்பண்ணுகிறாள். இந்தக்காவேரியின் கரையில் ஞானபூமியென்று பிரஸித்தமான இந்த புண்ய க்ஷேத்திரமிருக்கின்றது. இந்த க்ஷேத்திரத்தில் பிர்ம்மா தவம்செய்து சங்கரனைப்பூஜித்துக் கொண்டிருக்கிறார். உத்தமமான இந்த க்ஷேத்திரத்தில் தபஸ்செய்துகொண்டிருந்த தேவதைகளுக்கு பகவானுனை நீர் சிறந்த

ஞானத்தைக்கொடுத்திருக்கிறீர். நானும் அதிலேயே விசே
ஷமான தபஸ்ஸை செய்துகொண்டு வெகுகாலமாக உம்மை
பூஜித்துக்கொண்டு இருக்கிறேன். மிகவும் சிரேஷ்டமான
என்னுடைய பூஜையால் பிரஸன்னரான நீர் எனக்குப் பிரத்
யக்ஷமாகி உம்முடன் ஏகீபாவத்தையும் கொடுத்தீர். உம்மு
டைய ஸாந்நித்தியத்தை விசேஷமாய் பெற்ற இந்த புண்ய
க்ஷேத்திரத்தில் தங்களுக்கியற்கையிலிருக்கும் கருணையால்
மூன்று நான்கு வரன்களை எனக்குக் கொடுக்கவேண்டுமென்
று பிரார்த்தித்துப் பார்வதீ விக்ஞாபனம் செய்கிறாள். ஸகல
ப்பிராணிஸ்வரூபமாய் விளங்கும் ஹே பரமாத்ம! பூஜ்ய
மான இந்தக்ஷேத்திரத்தில் பிரகாசிக்கும் அமிருதமயமான
லிங்கத்தில் எப்பொழுதும் தாங்கள் ஸாந்நித்யத்தையடை
யவேண்டும். இந்தக்ஷேத்திரத்தில் விளங்கும் அமிருதமய
லிங்கத்தை எவர்கள் தூரதேசத்திலிருந்து சிரவணம் செய்கி
றார்களோ அவர்கள் பாபங்களிலிருந்து விடுபட்டு ஸாலோ
க்யமென்கிற முக்தியைப்பெற்று உமது ஸமீபத்தில் ஸந்
தோஷமாய் வஸிக்கட்டும். ஜலமயமான இந்த லிங்கத்தை
பக்தியுடன் எவர்கள் தர்சிக்கிறார்களோ நமஸ்காரமும் செய்
கிறார்களோ அவர்கள் ஸாமீப்யம் என்கிறபதத்தையடை
யட்டும். எவர்கள் ஸகலமான புண்ய தீர்த்தஸ்வரூபமான
உம்முடைய இந்தலிங்கத்தைத் தியானம்செய்கிறார்களோ
அந்தமஹான்கள் உம்முடைய ஸாரூப்யமென்கிற முக்தி
யைப்பெறவேண்டும். உம்முடைய அம்மயமான இந்தலிங்க
த்தை எவர்கள் அர்ச்சிக்கிறார்களோ அந்த பாக்யசாலிகள் எ
ன்றழிவில்லாத உம்முடைய ஸாயுஜ்யமென்கிற உத்தம
மான பதத்தையடையவேண்டும். அமிருதரூபியானலிங்க
த்தினுடைய மூலத்தில் (அடிப்பிரதேசத்தில்) புண்யஸ்வரூப
மாய் யாதொரு தீர்த்தமுண்டோ அதை தர்சிப்பவர்கள் ஜீவ
ன்முக்தர்களாக ஆகிறார்கள். இந்த தீர்த்தத்தில் ஸ்நானம்
செய்கிறவர்கள் பிர்ம்மஹத்திமுதலான மஹாபாதகங்களிலி

ருந்தும் விடுபடவேண்டும். அமிருதலிங்கத்தினுடைய மூல தேசத்தில் விளங்கும் இந்தத்தீர்த்தத்தை அருந்தும் பிராணி களுக்கு தேவபாவம் வரவேண்டும். இந்த ஞானக்ஷேத்திர த்தில் தவம்செய்யும் தபஸ்விகளுக்கு தபஸ் விருத்தியாய் சீக்கிரத்தில் ஸித்தி ஏற்படவேண்டும். இந்தப்புண்ய பூமியில் கோதானம் செய்கிறவர்களுக்கு வாஜபேயமென்கிற யாகத்தை யனுஷ்டித்த பலம் உண்டாகவேணும். இங்கு எவர்கள் ஸந்தோஷத்துடன் பூமிதானம் செய்கிறார்களோ அவர்கள் ஸ்வாராஜ்யஸித்தியை யடையவேண்டும். உதகரூபமாய் விளங்கும் இந்தலிங்கத்திற்கு முன்னால் எள்ளுதானம் கொடுக்கிறவர்களுக்கு ஸகல பாபங்களும் விலகிவிடுகின்றன. தானங்களுக்குள் மிகச்சிறந்ததான ஸ்வர்ணதானத்தை ஞான க்ஷேத்திரத்தில் செய்கிறவர்கள் ஸூர்யனுடைய ஸ்தானத்தையடைகிறார்கள். இந்தவிடத்தில் நெய்யை தானம்கொடுப்பவர் அக்னிஷ்டோமம் என்கிற யக்ஞானுஷ்டான பலத்தைப்பெறுகிறார்கள். இந்தவிடத்தில் வஸ்திரதானம் கொடுக்கிறவர்கள் வருணனுடைய ஸ்தானத்தைப்பெற்று சரீரங்களில் அதிகமான காந்தியையும் அடைவார்கள். ஸர்வ புண்யதீர்த்தஸ்வரூபமான இந்த புண்யக்ஷேத்திரத்தில் தான்யதானம் செய்கிறவர்களுக்கு அதிகமான பொருள்லாபமும் அமிருதத்தைப் புசிக்கும்தன்மையுமேற்படும். வெல்லத்தைக்கொடுப்பவர்களுக்கு ஹே அமிருதேச்வரா! ஸகல சுகங்களும் கிடைக்கும். இந்தஇடத்தில் வெள்ளியைதானம் கொடுக்கிறவர்களுக்கு பூர்ணமான கருணை ஏற்பட்டு சந்திரலோகப்பிராப்தியும் கிடைக்கின்றது. தேவதைகள், மஹரிஷிகள் இவர்களால் ஸேவிக்கப்பட்ட இந்தக்ஷேத்திரத்தில் உப்பை தானம் பண்ணினால் ஸகல துக்கங்களும் விலகிவிடுகின்றன. அமிருதமயமாய் விளங்கும் இந்தலிங்கத்திற்கு முன் எவர்கள் கன்யாதானம் செய்கிறார்களோ அவர்கள் வைகுண்டத்தையடைகிறார்கள். அமிருதலிங்கமான இந்த பகவானுக்கு

முன் கஜதானத்தைச் செய்கிறவர்கள் இந்திரபதத்தையடை
ந்து ஸந்தோஷப்படுகிறார்கள். ஞானத்திற்கு விருத்தியைச்
செய்கிறதான இந்த க்ஷேத்திரத்தில் அன்னதானம் செய்
தால் அதை அமிருதேச்வரரான ஸாக்ஷாத் பரமசிவனே
போஜனம் செய்கிறார். ஆகையால் இங்கு அன்னதானத்தை
ஆதரவுடன் செய்கிறவர்கள் தானம் செய்யப்பட்ட அன்னங்
களுடைய எண்ணிக்கை எவ்வளவிருக்கின்றதோ (அதாவது
அன்னங்களின் பருக்கை எவ்வளவு இருக்கின்றதோ) அவ்
வளவு வருஷகாலம் சிவலோகத்தில் வஸிக்கிறார்கள். அன்
னத்திலிருந்தும் பிராணிகளுண்டாகின்றனவென்று அறிந்து
எவன் அன்னதானம் செய்கிறானோ அவன் பிர்ம்மா, விஷ்
ணு, சிவன் என்கிற திரிமூர்த்திகளுடைய ஸ்தானத்தைய
டைகிறான், பின்னும் இந்த ஈசுவரஸன்னிதியில் அன்னதான
ம் பண்ணுகிறவர்கள் இந்த லோகத்தில் வஸிக்கிற வரையில்
சுகமாகவஸித்து முடிவில் கைலாஸத்தையடைகிறார்கள். இ
ந்த பகவானுக்கு அன்னாபிஷேகத்தைச் செய்துவைக்கிறவர்
களும் விசேஷமான ஞானத்தையடைந்து எப்பொழுதும்
கைலாஸத்தில் வாஸம் பண்ணுகிறார்கள். த்ரிமூர்த்திஸ்வரூ
பமாயும் ஜலம், ஆத்மா, பீஜம் இவைகளால் உண்டானது
மான அன்னத்தை ஈசுவரஸ்வரூபமாகவறிந்து எவன் தான
ம்செய்கிறானோ அவன் பூலோகத்தில் அரசனாகவும் ஸ்வர்க்
கலோகத்திலும் ராஜாவாகவும் ஆகிறான். வேதசாஸ்திரங்
களையறிந்த வித்வானின்பொருட்டு எவன் இந்தக்ஷேத்திர
த்தில் தானங்களுக்குள் உத்தமமான சிவலிங்கத்தை தானம்
செய்கிறானோ அவனுக்கு ஈசுவரஸ்தானம் ஏற்படுகின்றது.
இந்தலிங்கத்தை கிரகித்துக்கொண்டவன் ஒருதினம் அதை
ப்பூஜித்தானாகில் அதினால் தானம்செய்தவனுக்கு நூறுவரு
ஷம் கைலாஸத்தில் வாஸம்கிடைக்கும். ஒவ்வொருநாளும்
பூஜைசெய்தால் இவ்விடத்திலேயே தானம்கொடுத்தவன்
முக்தனாகிறான். இந்தப்புண்ய க்ஷேத்திரத்தில் எவன்லிங்க

த்தை தானம் செய்தாலும் அவன் முக்தனாகிறான் என்பதில் ஸந்தேகமேயில்லை. ஸகலமான தேவதைகளாலும் சூழப்பட்ட மத்தியப்பிரதேசத்தையுடையதாயும் ஸர்வபுண்ய தீர்த்தங்களாலும் அலங்கரிக்கப்பட்டதாயும் மானிடர்களுக்கு ஸகலமான ஸித்திகளையுமளிக்கிறதாயும் ஞானபூமியென்று பிரஸித்திபெற்றதாயும் அதிகமான ஐசுவர்யங்களுக்கிருப்பிடமாயும் மஹாபுண்யமயமாயுமிருக்கும் இந்தக்ஷேத்திரத்தில் விளங்கும் ஞானோபதேசகான ஸ்ரீஅமிருதேச்வாருடைய ஸந்நிதியில் சாஸ்திரம், வேதம், ஆகமம் இவைகளை நன்குணர்ந்த வித்வானின் பொருட்டு சிவராத்திரி புண்யகாலத்தில் எவன் சிவலிங்கத்தை தானம்பண்ணுகிறானோ அவன் நிச்சயமாய் ஜீவன்முக்தனாகிறான்.

எவ்வித சிரேயஸ்ஸையும் கொடுக்கக்கூடிய இந்தக்ஷேத்திரத்தில் சிவலிங்கத்திற்குமுன் ருத்ராக்ஷதானத்தை எவன் செய்கிறானோ அவன் ருத்திரலோகத்தையடைகிறான். அந்த ருத்ராக்ஷத்தை ஈசுவரஸ்வரூபமாகத் தியானம் செய்தால் கொடுத்தவன் வாங்கினவன் இவ்விருவர்களும் கைலாஸத்தில் வாஸம் பண்ணுகிறார்கள். சிவஸந்நிதியில் ஒருருத்ராக்ஷத்தை எவன் தானம்செய்கிறானோ அவன் ருத்திரலோகத்தில் பத்துவருஷம் வஸிக்கிறான். ஜம்புவிருக்ஷத்திற்கு நான்குபக்கங்களிலும் ஸலிலேச்வரரால் ஸேவிக்கப்பட்டிருக்கும் ஐந்துகுரோசம் வரையிலுள்ள இந்த க்ஷேத்திரத்திற்கு முக்திக்ஷேத்திரமென்று சொல்லப்படுகின்றது. நான் தபஸ் செய்து பூஜிப்பதற்கு முந்தி பலயுகங்களாகப் பெரியோர்களுக்கு ஞானத்தைக்கொடுத்ததால் ஞானபூமியென்று இந்த க்ஷேத்திரம் பிரஸித்தியடைந்திருக்கிறது. இந்தக்ஷேத்திரத்தில் ஹே மஹேச்வர! அமிருதரூபமான உம்முடைய மூர்த்தியை அர்ச்சித்ததால் முக்தியைக்கொடுக்கக்கூடிய அமிருதேசுவரம் என்கிறபெயர் என்னால் ஏற்படுத்தப்பட்டிக்கின்

றது. இந்த க்ஷேத்திரத்திற்கு ஐந்துகுரோசம் வரையிலு
ள்ள நான்குபக்கங்களிலும் பிர்ம்மப்பிரதிஷ்டையையோ அல்
லது விஷ்ணுப்பிரதிஷ்டையையோ எவன் செய்கிறானோ அ
வன் கிரமமாக பிர்ம்மலோகத்தையும் விஷ்ணுலோகத்தையு
மடைகிறான். சிவபக்தர்களான வேதியர்களின்பொருட்டு
எவன் பூமிதானம் செய்கிறானோ அவன் முக்தனாகஆகி ருத்ரா
ருடன் ஸாரூப்யத்தையடைகிறான். இந்தவிடத்தில் மிகவு
ம் உத்தமமான லிங்கப்பிரதிஷ்டையை எவன் செய்கிறானோ
அவன் இப்புவியில் ஸாம்ராஜ்யத்தைப் பெற்று முடிவில்
முக்திபெறுகிறான். இந்த க்ஷேத்திரத்தில் வஸிப்பவர்களா
ல் காலால் நடக்கப்படும் நடைகளெல்லாம் பிரதக்ஷிணங்கள்.
எந்தெந்த ஸாமான்களை அவர்கள் கொண்டுவந்தாலும் அவை
யாவும் புஷ்பங்களாகின்றன. எந்த வார்த்தைகளைப் பேசினா
லும் அவைகள் பூராவும் மந்திரஜபங்களாகின்றன. பூமியில்
தான் சயனம்செய்துகொண்டிருந்தால் அது நமஸ்காரமாகி
ன்றது. இங்கிருப்பவர்கள் எந்தமாதிரி ஸ்நானம்செய்தாலும்
அதெல்லாம் புண்யதீர்த்த ஸ்நானமாகின்றது. இந்தக்ஷேத்தி
ரத்தில் வஸிக்கும் ஸகலமான பேர்களும் புண்யாத்மாக்களா
யும் அதிகபலமுள்ளவர்களாயும் ஞானிகளாயும் பக்திமான்
களாயும் ஸ்திரமான புத்தியையுடையவர்களாயும் சிறந்த கீர்
த்திபெற்றவர்களாயும் அறுபத்துநான்குகலைகளிலும் பயிற்சி
பெற்றவர்களாயும் தபஸ்விகளாயும் யாகானுஷ்டானம் செய்
கிறவர்களாயும் தங்களுடைய ஆக்ஞையால் ஆகவேண்டும்.
என்று பார்வதியால் கேட்கப்பட்ட ஸ்ரீசங்கரர் தேவியை
ப்பார்த்து எந்தெந்த வரன்கள் உன்னால் அபேக்ஷிக்கப்பட்ட
னவோ அவை யாவும் அப்படியே ஸித்திக்கட்டும் என்று
அனுக்கிரகம் செய்தார். இவ்விதம் வேதங்களாலுமறியப்
படாத தத்வார்த்தங்களையறிந்த புராரியினுடைய முகாரவிந்
தத்திலிருந்தும் வந்த அனுக்கிரகத்தைப் பெற்ற உமையான
வள் ஸந்தோஷத்துடன்கூடிய தன்னுடைய முகமாகிற சந்

திரயிம்பத்தையுடையவளாய்க் கொண்டு சந்திரசூடரை நம ஸ்காரம் செய்தாள்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 10.

कुम्भकर्णवधाज्जातदोषशान्त्यै रघूद्वहः ।
दशमे शिवलिङ्गस्य प्रतिष्ठामकरोदिति ॥

ரகுவம்சத்திலுண்டான அரசர்களுக்குட் சிறந்தவரான ஸ்ரீராமமூர்த்தியானவர் கும்பகர்ணனை வதம்செய்ததால் தனக்கேற்பட்டபாபத்தைப் போக்கவேண்டி இந்த க்ஷேத்திரத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தார் என்கிற விஷயம் இந்தப்பத்தாவது அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

மஹர்ஷிகள் ஸூதமுனிவரைப் பார்த்து தாங்கள் ஸ்ரீ நாராயணன் தசரதருக்குப் புத்திரராக ராமர் என்கிற பெயருடன் அவதரித்து ஞானபூமியில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தார் என்று முன் சொன்னீர்கள். ஜகத்பதியான ஸ்ரீமுகுந்தரானவர் எதற்காக இங்கு சிவலிங்கப்பிரதிஷ்டை செய்தார் அதற்குப்பலம் என்ன என்பதை எங்களுக்கு தயவுசெய்து கூறவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

ஸூதர் ஹே முனிகளே! கஜாரண்யத்திலுடைய வைபவத்தைக்கேளுங்கள். பிர்ம்மாவாலும் நூறுவருஷங்கள் சொன்னாலும் விஸ்தாரமாக சொல்லமுடியாது. மூன்றுலகமும் ராவணனால் அதிக கஷ்டத்தை அநுபவிக்கின்றது என்று கேட்ட பிரபுவான ஸ்ரீகேசவர் லோகக்ஷேமத்தின் பொருட்டு

துஷ்டனுக ராவணனை வதம்செய்து அவனுலேற்பட்ட கஷ்டத்தைப் போக்கவேண்டி தசரதமஹாராஜாவுக்குப் புத்திரராகத்தோன்றினர். பிதாவினுடைய ஆக்ஞையைப் பாதுகாக்கவேண்டி வனத்தில்வஸிக்கும் ஸ்ரீராமருடைய தர்மபத்நியை அவரையும் அவர்தம்பியான லெக்ஷ்மணரையும் வஞ்சித்துத்துராத்மாவான ராவணன் அபகரித்துக்கொண்டு போய்விட்டான். உடனே இதையறிந்த ராமபத்திரர் தூதர்களைக்கொண்டு தேடச்சொல்லி லங்காநகரத்தில் ஸீதை இருப்பதாகக் கேள்வியுற்றூர். உடனே ராமரால் தன் கையிலிருந்த மோதிரத்தை அடையாளமாகக்கொடுத்து அனுப்பப்பட்ட ஹனுமார் லங்கைபோய் சேர்ந்து ஜானகியைப்பார்த்து அடையாளத்தைக்கொடுத்து ஆசுவாஸப்படுத்தி அவளால் கொடுக்கப்பட்ட சூடாமணியையும் ஸ்ரீராமரிடம் ஸமர்ப்பித்து இவரையும் ஸந்தோஷப்படுத்தி வைத்தார். ஹனுமார்மூகமாக லங்கையில் தன் பிரியையிருக்கும் நிலைமையையறிந்ததாசரதிக்கு லங்கையை ஜயிக்கவேண்டுமென்கிற எண்ணமுண்டாயிற்று. உடனே 66 கோடி புண்யதீர்த்தங்களால் ஸேவிக்கப்பட்டதும் ஸகல பாபங்களையும் போக்குகிறதாயும் முக்தியையளிக்கக்கூடியதுமான ஸேதுவை வானரங்களைக்கொண்டு ஸமுத்திரத்தில் போடும்படிசெய்தார். அந்த ஸேதுமார்க்கமாக ஸ்ரீராமச்சந்திரர் சத்துருவினுடைய புரியான இலங்கைக்குச்சென்று அங்குள்ள துஷ்டர்களால் ராக்ஷஸஸைன்யங்களை வதம்செய்து லங்கையையும் தகித்து பிறகு கும்பகர்ணனையும் நாசம்செய்து ராவணனையும் கொன்றூர். அப்பால் பக்தனுன விபீஷணரை லங்கையில் அபிஷேகம்செய்து மித்திரவர்க்கங்களுடன் புஷ்பகவிமானத்திலேறிக்கொண்டு அதைவிட்டுக்கிளம்பிவிட்டார். அந்த ஸமயத்தில் ஸ்ரீபகவானுல் ராவணன் கும்பகர்ணன் இவ்விருவர்களும் அடிக்கப்பட்டார்கள்.

அந்த இரண்டு ராக்ஷஸர்களுடைய சரீரமும் மிகவும் பயங்கரமாயும் ஆகாயத்தையளாவியும் கத்தி, தண்டம் இவைகளுடன்கூடியதும் சிவந்தகண்களையுடையதாகவும் மிகவும் பெரிதாயும் இருந்துகொண்டு புஷ்பகவிமானத்தைப் பின்பற்றிச்சென்று கோபத்தால் அதிலிருப்பவர்களைத் தன்சப்தத்தால் பயத்தையடையும்படி செய்தது. இவர்களைக் கண்ணுற்ற ஸ்ரீராகவனும் பயத்தால் அற்பம்சலிக்கும் மனதையுடையவராய்க்கொண்டு ஸமுத்திரத்தினுடைய வடகரையையடைந்து இவ்விதமாலோசித்தார். விச்ரவஸ்ஸனுடைய புத்திரர்களாயும் பிராமணர்களாயுமிருக்கும் இவர்கள் என்னால் அடிக்கப்பட்டார்கள். மிகவும் பலசாலிகளாயும் பிர்ம்மாவினிடமிருந்துண்டான இவர்கள் என்னை வதம் செய்யவேண்டுமென்று வருகிறார்கள். பார்ப்பதற்கு பயங்கரமாயிருக்கும் இந்த ராக்ஷஸர்களை எப்படி சமனம் பண்ணுவேன். மந்திரங்களால் நிவர்த்தி செய்யலாமா அல்லது ஹோமம், தேவதாசாதனம் முதலான காரியங்களால் விலக்கலாமா என்று பலவாறாய் சிந்திக்கும் ஸ்ரீரகுநாதருக்கு அக்தலமயம் இவ்விதம் தோன்றிற்று. சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து இந்த ஸங்கடத்திலிருந்தும் விடுபடுவோம் என்று கருதி ஆஞ்சனேயரையழைத்து ஹே வாயுபுத்திர! இந்த ஸேதுமூலத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்யவேண்டும். ஆகையால் இங்கிருந்து வேகமாக ஹிமாசலம்சென்று சிறந்ததான சிவலிங்கத்தைக்கொண்டுவாவென்று பிரபு அனுப்பினார். இந்த வார்த்தையைச் செவியுற்ற நிசியில் ஸஞ்சரிக்கும் அந்த ராக்ஷஸர்கள் யோசனை செய்துகொண்டு சலிக்காமல் நின்றார்கள். உடனே ஹனுமானும் உயரக்கிளம்பி வடக்குமுகமாகச்சென்று அனேக யோஜனதூரம் மார்க்கத்தில் சென்று ஹிமாசலத்தையடைந்து தேடிப்பார்த்து உத்தமமான ஒருலிங்கத்தைப் பார்த்தார். இதற்குள் பிரதிஷ்டைக்காக எதிர்பார்த்திருந்த உத்தமமான முகூர்த்தம் வந்துவிட்டபடியால் ஸ்ரீரகுநாதன்

சிறந்த முகூர்த்தத்தில் லிங்கப்பிரதிஷ்டை செய்வதுதான்
உசிதம். காலம்போன பிறகு பிரதிஷ்டைசெய்தால் தோஷ
த்தின்பொருட்டு ஆகும். என்ன செய்கிறது என்று ஆலோ
சித்துக்கொண்டு இப்பொழுதே பிரதிஷ்டை செய்துவிட
வேண்டுமென்று தீர்மானித்தார். உடனே கழுத்தளவு ஆழ
மாகப் பெரிதான ஒரு பள்ளம் தோன்றி அதில் ரத்னங்க
ளாலும் ஸுவர்ணங்களாலும் பூர்த்திசெய்து வேதங்களில்
கூறப்பட்ட மஹா மந்திரங்களாலும் புண்யதீர்த்தங்களா
லும் அபிமந்த்ரணம்செய்து ஹவிஸ்ஸுகளாலும் எள்ளுக
ளாலும் நெய்களாலும் ஆகுதிபண்ணி ஸைகதலிங்கத்தைப்
பிரதிஷ்டை செய்தார். உடனே சதருத்திரம், சமகம், புரு
ஷஸூக்தம் முதலான மந்திரங்களைஜபித்து, நெய், பால், தே
ன், எண்ணெய், கரும்புச்சார் பஞ்சகவ்யம், சந்தனம் முதலி
யதிரவியங்களால் அந்த லிங்கத்திற்கு அபிஷேகம்செய்து பு
ஷ்பமாலைகளாலும் சிறந்த ஆபரணங்களாலும் அலங்கரித்து
திவ்யமான அன்னம், பலம், க்ஷீரம் இவைகளை நிவேதனம்
செய்து ராமநாதர் என்று பெயரிட்டு அந்த பரமேசுவரரைப்
பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்துப்போற்றி ஸ்ரீராகவன்
தன்னை தன்யனாகக்கருதினார். இதினால் ராவணன் மாத்திர
ம் சமனத்தையடைந்து திரும்பிவிட்டான். இந்தஸமயத்தில்
லிங்கத்தை எடுத்துக்கொண்டு ஹநுமான் வந்துவிட்டார்.
உடனே அவருக்குத் திருப்தியுண்டாகவேண்டி பூஜ்யமான
அந்தலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்தார். பிறகு ஸ்ரீராமர்
தன் விமானத்திலேறிக்கொண்டு வடக்குதிக்கை நோக்கி
வேகமாகச் செல்லும்போது பயங்கரமான வேஷத்துடனும்
கத்தி, கதை இவ்விரண்டு ஆயுதங்களையும் தரித்துக்கொண்டு
ம் பிர்ம்மராக்ஷஸ்ரூபமாக விருந்துகொண்டு பகவானைத்துரத்
தினான். இதையறிந்து ராமரும் மனவருத்தங்கொண்டு வி
மானத்தை வேகமாகவிட்டுச் சிவாலயங்களால் விளங்குகின்
ற இருகரைகளையுமுடையதாயும் ஸகலபாபங்களையும் ரோக

ங்களையும் நாசம்பண்ணுகிறதுமான காவேரி நதியின் பாவ னமான தீரத்தையடைந்தார். அந்தக்காவேரியினுடைய அந் தரீபத்தில் (அதாவது மத்தியிலுள்ள திட்டில்) தளிர்களால் சிகப்பாகச் செய்யப்பட்டதாயும் அழகாயும் விளங்கும் ஆகா யம் திக்கு இவைகளையுடையதான மிகவும் சிறந்ததான ஜம் பூவனம் என்கிற க்ஷேத்திரத்தைப் பார்த்தார். உடனே அ திவேகமாக அந்தக்ஷேத்திரம் சென்று விமானத்தைவிட்டிற ங்கி காணை நாசம்செய்தவரான சுகுநாதன் கால்நடையாக உட்சென்று அந்த இடத்தில் ஜ்யோதிர்மயமாய் விளங்கும் அமிருதேச்வரரான பரமசிவத்தைத்தரிசித்து விபூதியாலும் ருத்ராக்ஷங்களாலும் பிரகாசிக்கும் சரீரத்துடன் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச்செய்து ஸ்ரீராகவன் ஹா ஹா ஓம் நம: சி வாய என்று சொன்னர். பின்துடர்ந்துவந்த கும்பகர்ணன் பயந்து ஞானபூமிக்கு வெளியில் நின்றுவிட்டான். க்ஷேத் திரத்தினுடைய வைபவத்தையும் அமிருதேச்வரலிங்கத்தை யும் சிவபக்தர்களையும் புண்யதீர்த்தங்களையும் வேதபாராய ணத்தைச் செய்யும் வித்வான்களையும் பார்த்து நாசாதி ஸந் தோஷப்பட்டார். பிறகு மற்றொரு பக்கத்தில் சாஸ்திரவிசா ரம் செய்கிறவர்களாயும் ச்ரௌதஸ்மார்த்தமென்கிற வைதிக கர்மாக்களை அனுஷ்டிக்கிறவர்களாயும் புராணம், வேதம் இவைகளுடைய உண்மையான பொருளை விசாரிப்பவர்க ளாயும் பஸ்மத்திரிபுண்டரங்களால் விளங்கும் நெற்றியை யுடையவர்களும் ருத்ராக்ஷமாலைகளால் அலங்கிருதர்களாயும் வஸிக்கின்ற மஹர்ஷிகளை மிகவும் வணக்கத்துடன் வந்தனம் செய்து அடியில்வருமாறு வினவினர். மஹான்களான ஹே சிவபக்தர்களே! இங்கிருக்கும் சிவலிங்கத்தைத் தரிசித்தவுட ன் என்மனம் மிகவும் பிரஸாதத்தையடைந்திருக்கிறது. எ ன்னை துரத்திக்கொண்டு வந்தராக்ஷஸனும் பயந்து இந்த க்ஷேத்திரத்திற்குக் கொஞ்சதூரம் வெளியிலேயே நின்றுவி ட்டான். இங்கு தீர்த்தங்களெல்லாம் சுத்தமாயிருக்கின்ற

ன. பரிசுத்தமான இந்த சோளதேசமும் புண்யமான இந்தக் காவேரிநதியும பாவனமான இந்த க்ஷேத்திரமும் என்மனதிற்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிறது. ஆகையால் இதின்மகிமையை எனக்குக்கூறவேண்டுமென்று பிரச்னம் செய்தார். இவ்விதம் வினவிய ஸ்ரீராமபத்திரனைப்பார்த்து சிவபக்தர்கள் கூறுகின்றதாவது: இந்த பாரததேசமானது ஸகல தேசங்களைக்காட்டிலும் சிறந்தது. அதிலும் சோளதேசம் சிலாக்யமானது. அதிலும் ஜந்துக்களுக்கு ஞானபிவிருத்தியைச் செய்கிறதான இந்த ஞானபூமியானது மிகவும் சிறந்தது. இந்தவிடத்தில் சதுர்முகன் தவஞ்செய்து ஞானத்தைப்பெற்று முக்தியடைந்தார். ஸகலலோகங்களுக்கும் மாதாவான அகிலாண்டேசுவரியானவள் அமிருதாத்மகமான லிங்கத்தை இங்கு பிரதிஷ்டை செய்திருக்கிறாள். அந்த லிங்கத்தின் பிரபாவத்தால் இந்த தேசமானது ஸ்வர்க்கத்திற்குச் சமானமாகும. ரக்ஷஸ், பூதம், பிசாசங்கள் இவைகள் யாவும் சிவனுடைய பெயரைக் கேட்டவுடனேயே அதிக பயத்தையடைந்ததாய்க் கொண்டு ஸர்வமந்திரஸ்வரூபமான இந்த க்ஷேத்திரத்திற்கு வெகுதூரத்தில் ஓடிவிடுகின்றன. இங்கு வஸிக்கும் புமான்களுக்கு பூர்ணமான ஆயுளும் ரோகநிவிருத்தியும் நான்கு புருஷார்த்தங்களும் ஸித்திக்கின்றன. கைலாஸபர்வதத்தில் வஸிப்பதில் திருப்தியில்லாதவர்களாய்க்கொண்டு தீர்த்தம், நதி, க்ஷேத்திரம் இவைகளுடைய வைபவத்தைக்கண்டு சைலபுத்திரியான பார்வதியும் ஸ்ரீசங்கரரும் இந்தவிடத்திலேயே வாஸம் செய்கிறார்கள். ஹே ராகவ! நீர் ஜகத்திற்கு அதிபதி. லோகங்களுடைய ஸகலவிஷயங்களையும் நன்கறிந்தவர். துஷ்டர்களான ராவணகும்பகர்ணர்களை அடித்து லோகத்திற்கு க்ஷேமத்தையுண்டுபண்ணியிருக்கிறீர். அதனாலேற்பட்ட பிர்ம்மஹத்திதோஷத்தைப் போக்கவேண்டி பரிசுத்தமான இந்த கஜாரண்யக்ஷேத்திரத்தில் ஸ்ரீ அமிருதேச்வரரான சங்கருடைய ஸந்நிதியில்

சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யும். அவ்விதம் செய்தால் இந்த ராக்ஷஸனால் விடப்பட்டவராய்க்கொண்டு சிறந்தஞானத்தையும் அடைவீர். 11 தடவை சிவலிங்கத்தைப் பூஜிக்கவேண்டி ஒருலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யும். அவ்விதம் செய்தால் பதினொராயிரம் வருஷம் ராஜ்யத்தை நீரே ரக்ஷிப்பீர். ஹே ரகுபதே! சிவலிங்கத்திற்கு இப்பொழுது நீர் அபிஷேகம் செய்யும். நாளைய தினம் உமது தம்பிகளோடு கூட ராஜ்யாபிஷேகம் உமக்குக்கிடைக்கும். லோகமாதாவான ஸ்ரீ அகிலாண்டேசுவரியையும் நீர் பூஜைபண்ணும். வெகு காலமாகப் பிரிந்து தனியாயிருக்கும் உம்முடைய தாயாரான கௌஸல்யையை நாளை தினம் தர்சனம்செய்வீர். சந்திரபுஷ்கரிணீதீரத்திற்கு ஆக்னேயதிக்கில் காவேரிக்கு வடக்குக்கரையில் சங்கருடைய லிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யும், என்று அங்கிருந்த சிவபக்தர்களால் கூறப்பட்ட ஸ்ரீராமர் பரமேசுவரமூர்த்தியை வெகுநேரம் தியானம்செய்து ஸமர்த்தனும் வியாபகனும் வாஸிபுத்திரனுமிருக்கும் அங்கதனிடம் ஹே அங்கத! ஸாளக்கிராமபர்வதத்தையடைந்து சிறந்த குணங்களுடன் கூடியதும் உத்தமலக்ஷணம் பொருந்தியதுமான லிங்கத்தை சீக்கிரம் நீ கொண்டுவரவேண்டுமென்று ஆக்ஞாபனம்செய்தார். அங்கதனும் அந்த ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு ஓரேகிளம்பலாய் கிளம்பி ஆகாயத்தைத் தாண்டி ஸாளக்கிராமகிரியையடைந்து சிறந்தலக்ஷணம் வாய்ந்த லிங்கத்தைத்தேடினான். தேடிப்பார்க்குங்கால் ஓரிடத்தில் இந்திரநீலரத்தினம்போல் விளங்குகிறதாயும் மனஸையும் கண்களையும் அபகரிக்கின்றதாயுமிருக்கும ஒருலிங்கத்தை கபிநாயகனான அங்கதன் கண்ணுற்றான். உடனே அந்தலிங்கத்தை எடுத்துக்கொண்டு நதிகளையும் வனங்களையும் தாண்டி ஆகாயத்தைத்தாண்டுவதில் மிகவும் ஸமர்த்தராயும் பலவானுமிருக்கும் அந்த அங்கதன் இந்த க்ஷேத்திரம் வரவேண்டி உயரக்கிளம்பினான். இவன் வருவதற்குள் ஸ்ரீ

ராகவன் பிராதாவான லக்ஷ்மணன், ஹநுமார், விபீஷணன், சுக்ரீவன் முதலானவர்களுடன் தேவதாலயத்திலிருந்தும் வெளியில் வந்துவிட்டார். உடனே கஜாரண்யத்திற்கு மேற்குதிக்கில் புண்யதீர்த்தத்தின் கரையில் விளங்கும் மதுவைப்புசிக்கவேண்டுமென்கிற ஆசைக்கொண்ட வண்டுகளால்சூழப்பட்ட ஒரு இலுப்பைமாத்தைக்கண்டு நமஸ்காரம் செய்தார். பிறகு பத்னியான ஸீதை, ஸஹோதரர்கள், மந்திரிகள், இவர்களுடன்கூட விதிப்பிரகாரம் ஸங்கல்பம் செய்துகொண்டு அந்தப்புண்ய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தேவதைகள், ரிஷிகள், பிதுருக்கள் இவர்களுக்குத் தர்ப்பணம்செய்து சிவபக்தர்களையும் பூஜித்து, பூமி, ஸுவர்ணம், எள்ளு முதலானதானங்களையும் அவர்களுக்குக் கொடுத்தார். இந்த ஸமயத்தில் நன்கு பிரகாசிக்கும் உத்தமமான லிங்கத்துடன் அங்கதன் காணப்பட்டான். அவ்விடம்வந்த அங்கதன் ஸ்ரீராமமூர்த்தியை நமஸ்கரித்து பெரிதான அந்தலிங்கத்தை அவரிடம் அர்ப்பணம் செய்தான். அவரும் பிரியத்துடன் அதைப்பெற்றுக்கொண்டு அந்த தீர்த்தத்திற்கு மேல்கரையில் சிவபக்தர்களால் கூறப்பட்ட விதிப்படி லிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்ய ஆரம்பித்தார். இரண்டாள் புருஷம் ஆழமாகக் குழியைவெட்டி அதில் ரத்னம், ஸுவர்ணம், வெள்ளி இவைகளைப்போட்டு நிரப்பி பிராமண சிரேஷ்டர்களோடுகூட வேதமந்திரங்களால் அந்த விடத்தில் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, கந்தம், பஞ்சாமிருதம், கருப்பஞ்சார், பலாஸம், தயிர், பால், நெய் முதலானவைகளால் அபிஷேகம்செய்து, ஸ்ரீஜாநகீநாதன் தூபதீபம்காட்டி சிறந்த அன்னங்களை நிவேதனம்செய்து நன்குபூஜைசெய்தார். பிறகு புஷ்பமாலைகள் நல்லசந்தனம் ஆபரணங்கள் சிறந்தவஸ்திரங்கள் இவைகளால் பரமேசுவரரையலங்கரித்து அவரை ஸீதை, லக்ஷ்மணன் ஸைன்யங்கள் முதலானவர்களுடன் பிரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்து மிகவும் பக்தியுடன் அடிக்கடி வந்தனம்செய்து

போற்றி நீலஹரீசர் என்று அந்தலிங்கத்திற்குப் பெயர் ஏற்படுத்தி அஞ்சலிபந்தத்தோடுகூட ஸந்நிதியில் நின்றுகொண்டு ஸீதாபதியானவர் ஸ்ரீசங்கரரை வேதாந்த ஸ்தோத்திரங்களால் அதிக ஸந்தோஷத்துடன் துதிக்கத்தொடங்கினர். எவ்விதம் ஸ்தோத்திரம் செய்தாரென்று அடுத்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 11.

एकादशे रघुश्रेष्ठः शिवं वेदान्तगोचरम् ।
तुष्टाव वेदसंमिश्रैः श्लोकैरत्यद्भुतैरिति ॥

இந்தப் பதினொராவது அத்தியாயத்தில் ரகுவம்சத்தாசர்களுக்குள் மிகச்சிறந்தவரான ஸ்ரீராமர் வேதஸம்பந்தங்களான சிறந்த சுலோகங்களால் வேதாந்தத்திற்கு விஷயரான சந்திரசேகரரைத் துதிக்கின்றார் என்று கூறப்படுகின்றது.

ஸ்ரீராமர் கணங்களுக்கு அதிபதியாயும் பராக்கிரமசாலிகளான தேவதைகளுக்குள் அதிபலமுள்ளவராயும் கஜமுகத்தையுடையவரும் கவிகளுக்குள் சிறந்தவராயும் விளங்கும் விக்னேசுவரரென்கிற தேவரை நான் ஸேவிக்கிறேன் என்று முந்தி கணபதிக்கு வந்தனம்செய்தார்.

யாதொரு பிரபுவினுடைய ஸ்வரூபத்தையறிய வியலாமல் மனத்தோடுகூட வாக்கும் மௌனமாயிருக்கின்றதோ ஸகலவித்யைகளுக்கும் ஈச்வரனை அந்தச்சங்கரரை நான் எங்ஙனம் போற்றுவேன்.

அதிகமகிமை பெற்றவராயிருப்பினும் பக்தர்களுக்கதீனராயும் மூன்றுகண்களுடன் கூடியவரும் சந்திரனை ஜடையில்தரிப்பவரும் கருணாநிதியாயும் தேவர்களுக்கெல்லாம் அதிபதியாயும் கிருஷ்ணபிங்களவர்ணமாயும் விளங்கும் புராணபுருஷரை ஸ்தோத்திரம் செய்கின்றேன். எந்தபிரபுவானவர் பிர்ம்மரூபமாகவிருந்து ஜகத்தை உண்டுபண்ணி அதைரக்ஷிப்பதற்காக தன்னுடைய அம்சங்களால் பலபிராணிரூபங்களாக அவதரித்திருக்கிறாரோ ஸகலப்பிராணிகளுக்கும் பதியான அந்த ஈசுவரனை நான் துதிக்கிறேன். பஞ்சமஹாபாதகங்களையும் நாசம்செய்கின்றதான பிரஸித்தமான ஸ்ரீபரமேசுவரனுடைய பஞ்சாக்ஷரமந்திரத்தை ஜபிக்கிறேன். கிரிசருடைய ஐந்துமுகங்களிலிருந்தும் முன் யாதொரு ஐந்துவர்ணங்கள் உண்டாயினவோ அவைகளையே வியாவஹாரிகஸத்யமாயும் பரமார்த்தஸத்யமாயும் வித்வான்களுக்குப் பரபிர்ம்மஸ்வரூபமாகவும் சொல்லுகிறார்கள். யாதொரு வஸ்துவானது ஒன்றாயும் சாந்தமாயும் அவ்யக்தமாயும் மனதாற்கூட நினைக்கமுடியாத தன்னுடைய ரூபத்தையுடையவராயும் மேருபர்வதத்தை தனுஸ்ஸாகவுடையவரும் யமனை ஜயித்தவரும் திரிபுரர்கள் என்கிற அஸுரர்களுக்குச் சத்துருவாயும் விஷ்ணுவை பாணமாகவும் ஆதிசேஷனை நாண்கயிறாகவும் தரிப்பவரும் ஆகாயத்தைக் கேசமாகவுடையவரும் சூரியன், சந்திரன் இவர்களை ரதத்தின் சக்ரங்களாகவுடையவருமான சிவனென்று பெயர்கொண்ட தேவதையைச் சரணமாகவடைகிறேன். ஸர்வஜனங்களாலும் பூஜிக்கத்தகுந்தவரும் ஸகலப்பிராணிகளிடமும் வஸிப்பவரும் ஆதியற்றவராயும் ஒரேமூர்த்தியாய் விளங்கும் சிவஸ்வரூபத்தை நமஸ்கரிக்கின்றேன். தேவதைகளுக்குள் சிறந்தவராயும் சூரியன் முதலான தேஜஸ்களுக்குள் உத்தமமாயுமிருக்கும் ஹே மஹேச! பீமம், உக்ரம் என்றுகூறப்பட்ட உம்முடைய பயங்கரமான ரூபத்தைவிட்டு ஹே ருத்திர! மங்களகரமாயும் ஸகல

ஸௌக்யத்தையும் கொடுக்கக்கூடியதுமான உம்முடையசரீரம் எங்களுக்கு க்ஷேமத்தையுண்டுபண்ணட்டும். ஹே கிரீச! பக்தியினால் உம்முடைய திருப்தியின்பொருட்டு யக்ஞம் பண்ணுகிறேன். கங்கை சந்திரன் இவர்களை தரிப்பவரும் பிநாகமென்கிற தனுஸ்ஸுடன் கூடியவருமான நீர் பார்வதீதேவியுடன்பிரஸன்னராயிருந்துகொண்டு எனக்கு வேண்டிய போகங்களையளிக்கவேண்டும். இந்தக்ஷேத்திரத்தில் என்னால் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பூஜிக்கப்பட்டதாயும் உடனே ஸகலாபீஷ்டங்களையும் கொடுக்கக்கூடியதும் ஸத்யோஜாதரூபமாய் விளங்கும் உமக்குவந்தனம். என்னுடைய ஸகல பாபங்களையும் கஷ்டங்களையும் போக்கடித்து மங்களஸ்வரூபியாயும் வியாபகராயுமிருக்கும் ஹே தேவ! பிரஸன்னமான மனதுடன் கூடியவராய்க்கொண்டு எனக்கு ஸுகத்தைக் கொடுக்கவேண்டும். உமையோடு கூடியவரும் பராக்கிரமசாலியாயும் கவசம்பூண்டவராயுமிருக்கும் உம் பொருட்டு நமஸ்காரம். பிரஸித்தராயும் வியாபகராயும் இருக்கும் உமக்கு வந்தனம். ஹிருதயாம்புஜத்தில் வஸிப்பவரும் சிரஸில் விளங்கும் சந்திரனுடைய அமிருதப்பிரவாகத்தால் அபிஷேகம் செய்யப்பட்டவரும் அக்ஞான ஸம்பந்தமில்லாதவராயும் அம்பிகாபதியாயும் சூர்யனைப்போல் பிரகாசிப்பவருமான சிவனை மனதில் தியானம்செய்யத்தகுந்தவரும் போற்றத்தகுந்தவராயும் வந்தனம்செய்யத்தகுந்தவராயும் உலகங்களுக்குப் பிதாவாயும் பிரம்மா, விஷ்ணு, இந்திரன் இவர்களுக்கு மேலானவரும் வனத்திலிருக்கும் ஸகலப் பிராணிகளுக்கும் அவைகளுக்கு வேண்டிய அன்னங்களுக்கும் அதிபதியாயுமிருக்கும் மஹேச்வரரின் பொருட்டு நமஸ்காரம். நன்கு விளங்கிருக்கும் க்ஷேத்திரங்களுக்கும் திக்குகளுக்கும் பதியாயிருப்பவருக்கு வந்தனம். ஹே சம்போ! உமது கருணையானது இந்த ஜனத்தை எப்பொழுதும் உமது சரணாரவிந்தங்களில் பக்தியுள்ளவனாகச் செய்யட்டும். ஹே தேவ! பின்

னும் அந்தக்கருணையானது தாயானவள் புதல்வனைப்போல்
என்னைப்பாதுகாக்கட்டும். ஆறு ரஸங்களுடன்கூடிய நை
வேத்யத்தை விதிப்பிரகாரம் உமக்கு நிவேதனம் செய்கி
றேன். கௌரி, ஸ்கந்தர், விருஷபம் முதலானவர்களுடன்
வந்து என்னால் கொடுக்கப்பட்ட பலியைக்கிரகித்துக்கொண்
டுபோம். நீர் ஜகத்திற்கு க்ஷேமத்தையுண்டுபண்ணுகிறவர்.
மங்களமூர்த்தி, அணிமாதிகளான எட்டு ஐசுவர்யங்களால்
ஸேவிக்கப்பட்டவர். உலகங்களுக்கெல்லாம் நீர் ஈசுவரர்.
ஆகையால் எனக்கு ஐசுவர்யத்தையுண்டுபண்ணும். ஜம்பு
வென்று பெயர் பூண்டவராயும் சந்திரனை சிரஸில்தரிப்பவ
ரும் பாணியில் பாசஎன்கிற ஆயுதத்தையுடையவரும் ஸகல
லோகங்களுக்கும் சுகத்தையுண்டுபண்ணுகிறவருமான ஈசு
வரரின்பொருட்டுவந்தனம். சங்கரருக்கு நமஸ்காரம். சிவனு
க்கு வந்தனம். மோக்ஷத்தைப் பெறவேண்டுமென்று விருப்
பங்கொண்ட ஸந்நியாஸிகள் யாதொரு பிரபுவினிடமிருந்து
அதையடைகிறார்களோ, சிலமஹரிஷிகள் புத்திரர்களாலும்
பொருளாலும் தானங்கொடுப்பதாலும் உபயோகமில்லை
யெனக்கருதி புத்திரன் பத்னீ முதலான ஈஷணைகளை அறவே
விலக்கி எவரிடமிருந்து அமிருதமென்கிற உத்தமமான பத
வியைப்பெறுகிறார்களோ, அவ்வித மஹிமைபெற்ற கிரி
சனை நான் நமஸ்கரிக்கின்றேன். சிலவித்வான்கள் வெளுப்
புக்கறுப்பு முதலான குணங்களற்றவராகவும் அளவிலடங்
காதவராகவும் உம்மைக்கருதி எங்கும் பிரகாசிக்கின்ற உமது
ரூபத்தை புத்தியால் நன்கறிந்து ஹிருதயத்தில் தியானம்
செய்கிறார்கள். ஹே சங்கர! எனக்கு உம்மை தர்சிக்கும்படி
யான கண்ணைக்கொடும். குணங்களை சிரவணம் செய்யக்கூ
டிய காதுகளையும் கொடும். வேதத்தில் கூறப்பட்டபடி ஆயு
ளையும் பலத்தையும் கொடும். உம்முடைய சரணாரவிந்தங்க
ளில் பக்தியையும கொடும். என்னுடைய சத்ருவையும் அகா
லமிருத்யுவையும் பயத்தையும் நாசம்பண்ணும். ஹே சிவ!

பயங்கரமான இந்த ஸம்ஸாரத்திலிருந்தும் என்னைப்பாது காரும். ஹே ஈச! சாபங்களிலிருந்தும் ராக்ஷஸர்களிடமிரு ந்தும் ஸகலபாபங்களிலிருந்தும் எங்களை அடிக்கடி ரக்ஷியும். எங்களின்பொருட்டு பூர்ணமான ஆயுளையும் ஐசுவர்யத்தை யும் கொடும். பக்தர்களாயும் உம்மை ஸ்தோத்திரம் செய் கிறவர்களுமான எங்களுக்கு பலத்தையும் இஷ்டத்தையும் அதிகம் விருத்திசெய்யும். எவரானவர் சிருஷ்டியின் துவக்க த்தில் ரஜோகுணத்தால் ஹிரண்யகர்ப்பராக ஆனரோ, ஆதி யந்தமில்லாதவராயும் குணமில்லாதவராயும் ரூபசூன்யரா யும் ஜகத்திற்கு ஈச்வரராயுமிருக்கும் அந்த தேவரை நமஸ் கரிக்கின்றேன். எந்த கிரீசர் ஒவ்வொருயுகத்திலும் ஹரியாக அவதரித்து மீன் முதலான பிராணிகளுடைய ரூபத்தைத் தரித்து தம் பலத்தால் ராக்ஷஸர்கள் அஸுரர்கள் இவர்களை நாசம் செய்கிருரோ, அக்னிஸ்வரூபமாய் விளங்குகிருரோ, அந்த நீர் ஜனங்களைப் பரிபாலிக்கவேணும். உக்ரராயும் பீம ராயும் கோபமுள்ளவராயும் சூலாயுதம் தரிப்பவராயுமிருக் கிற உம் பொருட்டு வந்தனம். திருடமான சாபத்தையு டையவரும் பிரளயகாலத்தில் ருத்திரராக இருந்துகொண்டு ஜகத்திற்கு நாசத்தைச் செய்கிறவரான உம் பொருட்டு வந்தனம். நீலஹரீந்திரர் என்று பெயர் பெற்றவரும் பார்வதீபதியாயும் புண்யதீர்த்தஸ்வரூபியாயும் ஜகத்திற்கு நியந்தாவாயும் வனங்களுக்குப் பதியாயுமிருக்கும் உமக்கு வந்தனம். ஹே பூதேச! உம்மிடத்திலிருந்தும் பயந்து வாயு ஸரியாய் வீசுகிருன். சூர்யன் நன்ருய்ப் பிரகாசிக்கிருன். அக் னியும் நன்கு பிரகாசிக்கிருன். இந்திரன் தன் ராஜ்யத்தைக் கவனித்துப் பாதுகாக்கிருன். யமன் ஓடுகிருன். உம்மு டைய ஆக்ஞையால் ஸமுத்திரமும் கட்டுபட்டிருக்கின்றது. சிரேஷ்டராயும் ஸமுத்திரங்களுக்குப் பதியாயும் ஆதியாயு மிருக்கும் உமக்கு நமஸ்காரம். ஸகலலோகங்களுக்கும் பூஜ் யராயும் காலஸ்வரூபியாயும் வாமதேவரென்று பெயர்பெற்

றவராயுமிருக்கும் உமக்குவந்தனம். ருத்ரரின் பொருட்டு வந்தனம். பிரசேதஸ்ஸுக்கு வந்தனம். ஹே ருத்ர! உம்முடைய கோபத்தின் பொருட்டு நமஸ்காரம். பாணத்தின் பொருட்டு வந்தனம். உம்முடைய தனுஸ், கைகள் இவைகளுக்கு நமஸ்காரம். உம்முடைய தேஜஸ்ஸுகளால் இந்த ஜகத் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. ராவணன் என்றுசொல்லப்பட்ட ராக்ஷஸனை யுத்தத்தில் நாசம்செய்த ஹே சிவ! என்னால் சத்துருக்களான ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டார்கள். ஹே பூதநாத! உம்முடைய நேத்திராக்கினியால் ஸகல சத்துருக்களும் ராக்ஷஸர்களும் தஹிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸகலமான பூதங்களுக்கும் ஆத்மாவாயும் நாசமில்லாதவராயும் ஸத்யரூபியாயும் ஞானஸ்வரூபியாயும் நித்யராயும் சவிக்காதவராயும் மங்களரூபியாயும் விளங்கும் உமக்கு வந்தனம். ஹே ஜம்புநாத! எவன் உம்மை ஸ்தோத்திரம் பண்ணுகிறானோ நமஸ்காரம் செய்கிறானோ தியானம் செய்கிறானோ உம்ஸந்நிதியில் ஸ்வர்ணதானம் அன்னதானம் இவைகளைச் செய்கிறானோ அவன் ஸகலமான இஷ்டஸித்திகளையும் பூர்ணமாயடைகிறான். ஸகலஜகத்திற்கும் ஔஷதம்போல் சுகத்தையுண்டுபண்ணுகிறதான உம்முடைய உத்தமமான மூர்த்தியை எனக்குக்காண்பியும். ஹே கௌரீபதே! எங்களுக்கும் இரண்டு காலுள்ள பிராணிகளுக்கும் நான்கு காலுள்ள பிராணிகளுக்கும் சுகத்தைக்கொடும். எனக்கு பிரஜை ஆயுள் தனம் முதலியவைகளைக் கொடுத்துப்பாதுகாரும். எனக்கு தேஜஸ்ஸைக்கொடும். பராக்ரமசாலியான புருஷர்கள் மூலமாக எனக்கு ஹிம்ஸைசெய்யக்கூடாது. உமக்கு பூஜை, ஸ்தோத்திரம் முதலியவைகளைச் செய்வதாலும் உம்முடைய நாமாவை உச்சரிப்பதாலும் குணங்களைக்கேட்பதாலும் தர்சனத்தாலும் அநேக வர்ஷங்கள் சுகமாய் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். ஹே உமாபதே! உம்மைப்பூஜித்து நமஸ்கரித்து யக்ஞத்தாலும் உமக்குத் திருப்திபண்ணுகிறோம். யம

னையும் மன்மதனையும் ஜயித்தவரும் கறுத்தகழுத்தையுடைய வரும் பார்வதிக்கு பர்த்தாவாயும் லோகங்களுக்குப் பதியா யும் நித்யயுவாவாயும் கவியாயும்விளங்கும் உமக்கு நமஸ்கா ரம். பரமபுருஷராயும் மஹாதேவராயுமிருக்கிற உம்மை தியா னம் செய்கிறேன். ருத்ரரானவர் பரம ரஹஸ்யமான தத்வங் களை எனக்குபதேசிக்கவேண்டும். வித்யை, ஐசுவர்யம், புத் திரன், பெண்டிர், ஸுகம் இவைகளை கிருத்திவாஸர் எனக்கு அளிக்கட்டும். பீமர் என்று பெயர்வாய்ந்த ஹே சங்கரா! பிதாவானவன் தன்புத்திரனைப்போல் உம்முடைய பிள்ளை களான எங்களை ரக்ஷியும். சத்துருக்களை சீக்கிரமாக நாசம் பண்ணுகிறவரும் வேகமாய்ச்செல்லும் ரதத்தையுடையவ ரும் ஜடைதரிப்பவரும் ஆயிரம் கண்களையுடையவருமான உம்மை துதிக்கின்றேன். நான்கு பக்கங்களிலும் முகம், கண், கைகள், பாதங்கள் இவைகளையுடையவரும் நமக்குப் பிதாவாயுமிருக்கும் ஸ்ரீ சங்கரர் ரக்ஷிக்கட்டும். ஸுவர்ணம யமான வஸ்திரம், ஆபரணம் இவைகளையுடையவளும் சந்த னத்தால் தரிக்கப்பட்ட புண்டரத்தையுடையவளும் பத் மம் அபயம் முதலானவைகளால் விளங்கும் நான்கு கைக ளையுடையவளும் மூன்று லோகங்களுக்கும் மங்களஸ்வரூப மாயும் நித்யஸுமங்கலியாயும் பிரகாசிக்கும் அகிலாண்ட நாயகி என்கிற பராசக்தியைப்போய் அடையுங்கள். தர்ச னமும் செய்யுங்கள். லோகங்களுக்குப் பிதாவாயும் மாதா வாயுமிருக்கிறவர்களும் நாயகனும் நாயகியாயுமிருக்கிறவர் களும் தேவதைகளால் நமஸ்காரம் பண்ணத்தகுந்தவர்களு மாகிய சிவனின் பொருட்டும் பார்வதியின் பொருட்டும் நமஸ்காரம். இந்தப்பிரகாரம் ரகுபதியினால் துதிக்கப்பட்ட வரும் ஸந்தோஷத்தையடைந்தவருமான அம்பிகாபதியான பரமேசுவரன் ராகவனைப்பார்த்து வேதபாதத்தை வைத்து உன்னால் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தை எவன் படிக்கிறா னோ அவன் ஸகல புருஷார்த்தங்களையுமடைகிறான். ஹே

ராம! நீயும் என்னுடைய பிரஸாதத்தால் ராக்ஷஸனால் விடப்பட்டவனைக்கொண்டு சிறந்த ஞானத்தைப்பெற்று பரிசுத்தனயிருந்துகொண்டு ஸுகமாக வெகுகாலம் ராஜ்யபரிபாலனம்செய்து ஸகலஜனங்களாலும் உபாஸிக்கப்பட்டவனாகவும் விரும்பிய வரன்களைக் கொடுக்கிறவனாகவும் இருப்பாய் என்று சிவனால் கூறப்பட்ட ஆசீர்மொழியைச் செவியுற்ற நரசிரேஷ்டனான ரகுவீரன் ஸந்தோஷமடைந்து ஸீதை, லக்ஷ்மணன், வானரஸைன்யங்கள் இவர்களுடன்கூட புஷ்பகவிமானத்திலேறிக்கொண்டு அயோத்திமாநகரத்தையடைந்தார்.

பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 12.

द्वादशे शक्तितनयो रक्षोघ्नमकरोन्मखम् ।
याचितस्तत्र देवेन यातुवाहनमत्यजत् ॥

ஸ்ரீராமருடைய ராக்ஷஸர்களிடமிருந்து விடுபட்டதான புண்யமான சரித்திரமும் ஸ்ரீநீலவிஷ்ணுநாதருடைய பிரதிஷ்டையும் ஸர்வவேதாந்தஸாரபூதமாயும் மிகவும் பாவநமாயும் ஸகலபுருஷார்த்தங்களையும் கொடுக்கிறதுமான சிவஸ்தோத்திரமும் கேட்கப்பட்டது. ஹே ஸூத! கருணாஸ்வரூபியான கஜவநேசுவரருடைய பவித்ரமான வேறு சரித்திரத்தைக் கூறவேண்டுமென்று வேண்டுங்கால் ஸூதமஹர்ஷி கூறத்தொடங்கினார். ஹே முனிகளே! எதைக் கேட்டால் மிகவும் கடோரசித்தனான மனிதனும் தயையுள்ளவனாக ஆவானோ, அவ்வித ஜம்புநாதருடைய

மஹிமையைக் கேளுங்கள். முன்னொரு ஸமயத்தில் தேவேந்திரனுடைய ஸபையில் விசுவாமித்திரருக்கும் வஸிஷ்டருக்கும் ஹரிச்சந்திர மஹாராஜா பொய் சொல்லுவனா சொல்லமாட்டானா என்கிற விஷயத்தில் பந்தயபூர்வமான விவாதமேற்பட்டது. அந்த ஸமயத்தில் ஹரிச்சந்திரன் அஸத்யவாதியாக ஆனால் நான் ஒரே வஸ்திரத்துடன் ஸுரையைப் பானம்செய்து தெற்குமுகமாகப் போகிறேன் என்று வஸிஷ்டர் பிரதிக்ஞை செய்தார். இதைக்கேட்டவிசுவாமித்திரரும் நான் ஹரிச்சந்திரனை ஸத்யத்திலிருந்தும் தவறினவனாகச் செய்யாவிட்டால் வஸிஷ்டர் சொல்லிய பிரதிக்ஞையை நான் அனுஷ்டிக்கிறேன் என்று கூறினார். இவ்விதம் இவ்விருவர்களுக்கும் விரோதமேற்படுங்கால் விசுவாமித்திரரால் ஹரிச்சந்திரன் பலவிதமாய் ஹிம்ஸிக்கப்பட்டபோதிலும் மிகவும் தைர்யசாலியான அவன் ஸத்யத்தைவிடவில்லை. காட்டுத்தீயால் அவனைச் சூழ்ந்துகொள்ளும்படி செய்தாலும் புத்திரன், பத்நீ, மந்திரி இவர்களை விற்கும்படி செய்தாலும் சண்டாளனுக்கு வேலைக்காரனாக ஆனபோதிலும் அந்தராஜா ஸத்யத்தை விடவில்லை. அவனால் அனுஷ்டிக்கப்பட்ட ஸத்யமென்னும் யாகத்தால் திருப்தியடைந்த தேவர்கள் புஷ்பவர்ஷத்தை வருஷித்தார்கள். சூரியன், சந்திரன் இவர்களுள்ளவரையில் அவனை ஸத்யலோகத்தில் வஸிக்கும்படி அனுக்கிரகம் செய்தார்கள். உடனே அந்த ஹரிச்சந்திரனும் தேவர்களைப்பார்த்து விசுவாமித்திரர் முன்செய்த பிரதிக்ஞையை யனுஷ்டிக்காமலிருக்கும்படி எனக்கு வரம் கொடுக்கவேண்டுமென்று கேட்டு அவ்விதமே ஸரி என்று தேவர்களால் கொடுக்கப்பட்ட வரத்தால் விசுவாமித்திரரை ரக்ஷித்தான். இவ்விதம் ஹரிச்சந்திரராஜனால் விசுவாமித்திரர் ரக்ஷிக்கப்பட்டபோதிலும் அவர் வஸிஷ்டரிடம் அஸூயைகொண்டு அவரை வதம் செய்யவேண்டுமென்ற கெட்டெண்ணங்கொண்டு ஆபிசாரப் பிரயோகம்செய்ய

ஆரம்பித்தார். ருத்விக்குகள் சிகப்பு முண்டாசை வைத்துக் கொண்டு இலும்பால் செய்யப்பட்ட யக்ஞ பாத்திரங்களா லும் குசங்களாலும் மற்றுமுள்ள ஸாதனங்களையுங்கொண்டு ஹோமத்தை ஆரம்பித்து ஹவிஸ்ஸுகளால் ஹோமம் செய்து பசுவினுடைய ஆஹூதியும் ஆனபிறகு, தக்ஷிணாக்கினியி லிருந்தும லோகங்களுக்கெல்லாம் பயத்தைக் கொடுக்கக் கூடிய பயங்காமான கிருத்தியை என்று பெயர்கொண்ட ஒரு துர்தேவதையானது வெளியில் வந்தது. அதைப்பார்த்து காதிபுத்திரரான விசுவாமித்திரர் நீ ராக்ஷஸனாக ஆகி சீக்கிரம் வஸிஷ்டருடைய ஆச்ரமத்தையடைந்து அவரை சீக்கிரமாக வதம்செய்து எனக்குப் பிரியத்தையுண்டுபண்ண வேணுமென்று அம்முனிவரால் கூறப்பட்ட அந்தக்கிருத்தி யையானது பயங்காமான ராக்ஷஸனாக ஆகி நன்குஜ்வலிக்கும் அக்னிபோன்ற கேசங்களையுடையதாகவும் ரக்தத்திவலைகளை ப்பெருகவிருக்கின்றதான ஜாம்புகளையுடையதாயும் பயங்காமான கத்தியையுடையதும் மண்டையோட்டிலிருக்கும் ரக்தத்தை ஸாப்பிடுகிறதாயும ரம்பம்போல் தீக்ஷ்ணமான பற்களையுடையதாயும் இருந்துகொண்டு வஸிஷ்டருடைய ஆசிரமத்தையடைந்தது. அந்த இடமானது தபஸ்செய்யும் மஹரிஷிகளால் சூழப்பட்டதும் மான்களால் அலங்கரிக்கப் பட்ட விருக்ஷங்களுடைய மூலஸ்தானத்தையுடையதாயும் ஸிம்ஹத்தோடு சேர்ந்து விளையாடும யானைகளையுடையதும் மலர்ந்த பத்மங்களையுடையதாயும் மிகவும் சீதலமான புண்ய தீர்த்தங்களுடன் கூடியதும் ஹவிஸ்களால் திருப்தி செய்து வைக்கப்பட்ட அக்னியையுடையதாயுமிருந்தது. இந்தராக்ஷஸன் அங்கு உட்புகுந்து வஸிஷ்டர் இருக்குமிடத்தைத் தேடினான். தேடிப்பார்த்ததில் வஸிஷ்டரைப்பார்க்கமுடியாமல் அவர் புத்திரரான சக்தியைப்பார்த்தான். பார்த்தவுடன் அடையாளங்களாலும சாஸ்திரக்ஞானத்தாலும் சரீரத்தாலும் குணங்களாலும் அந்தசக்தியையே அந்தராக்ஷ

லன் வஸிஷ்டரென்று நினைத்தான். கண்களை மூடிக்கொண்டு நித்திரைசெய்யும் அவரை அங்குள்ள முனிகணங்களெல்லாம் ஹா ஹா வென்று வாய்விட்டலரும்போது கழுத்தைப் பிடித்து யக்ஞத்தில் பசுவை வதம்செய்வதுபோல் வதம் செய்துவிட்டான். சக்தியை வதம்பண்ணி அவர் ரக்தத்தை ப்பானம் பண்ணிக்கொண்டுவரும் ராக்ஷஸனைப்பார்த்து விசுவாமித்திரர் ஸந்தோஷத்தையடைந்தார். ஆச்ரமத்திலிருந்து ஸமித்குசங்களுக்காக வெளியில் போயிருந்த வஸிஷ்டரும் அவைகளைக்கிரகித்துக்கொண்டு ஆச்ரமத்திற்குவந்து சேர்ந்தார். உடனே சோகஸமுத்திரத்தில் முழுகியிருக்கும் தம பத்நியையும் ஸ்நுஷையையும் அழுதுகொண்டிருக்கும் சிஷ்யர்களான முனிகளையும் பார்த்து அந்த துக்கத்தால் வஸிஷ்டரும் மோகத்தையடைந்தார். எவ்வளவு வித்வானாயிருந்தாலும் புத்திரசோகம் ஒருவரையும் பாதிக்காமல் விடாதல்லவா? அற்பம், மோகம் விலகியவுடன் வஸிஷ்டர் ஹே புத்ர! என்னிடம் சொல்லிக்கொள்ளாமல் நீ எங்கே போய்விட்டாய் உன்தாயாரும் உன்பத்நியும் உன்னைக்காணுமல் மிகவும் வருத்தப்படுகிறார்கள். நீ உன்ஸ்திரீக்குச் செய்யவேண்டிய அபேக்ஷையுள்ள வஸ்துக்களைக் கொடுக்காமல் வித்வானுயிருப்பவன் எப்படிப்போனுய் என்று இவ்விதம் துக்கத்தால் மிகவும் பீடிக்கப்பட்ட வஸிஷ்டர் தன்னுடைய சரீரத்தையும் தியாகம்செய்ய வேண்டுமென்று இச்சிக்கும்கால் அந்தஸமயத்தில் கருணையால் பிர்மா வந்து கூறுகின்றார். அடே வஸிஷ்ட! காலத்ரயங்களையும் நன்கறிந்த நீ மிகவும் அற்பமான இந்த விஷயத்தில் அதிகதுக்கப்படாதே. இந்த சோகதைப்போக்க உபாயம் கூறுகின்றேன் கேள், அதாவது இந்தஸமயம் நீ நான்கு வேதங்களையும் பாராயணம செய். அவ்விதம் செய்தால் அவைகள் முக்தியைக்கொடுக்கும், கர்ப்பவதியாயிருக்கும் உன்னுடைய நாட்டுப்பெண்ணும் யோக்யமான புத்திரனை யுண்டுபண்ணுவள். அந்தப்

புத்திரனும் மிகவும் சிரேஷ்டனாகவிருந்துகொண்டு யக்ஞத்தில் ஸகல ஆசுரர்களையும் (அதாவது எல்லா ராக்ஷஸர்களையும்) கொல்லப்போகின்றான். ஆகையால் அவனுக்கு பராசரன் என்று பெயரிட்டழை என்று பிர்ம்மாவினால் ஸமாதானம் பண்ணப்பட்ட வஸிஷ்டர் சோகத்தைவிட்டுவிட்டு நதியில் போய் ஸ்நானம்செய்து சுத்தமாயிருந்துகொண்டு ஸ்நுஷையின்பொருட்டு ஸகல வேதங்களையும் அத்யயனம்செய்தார். இவரால் சொல்லப்பட்ட வேதங்களைப் பூரணமாயும் கர்ப்பத்திலிருக்கும் சிசுவானது நன்றாய் கவனித்துக்கேட்டு தாரணம்செய்துகொண்டு சிறந்தகுணங்களுடன் கூடியதாயும் அநேகம் சூர்யன் ஒளிக்கு ஒப்பான காந்தியையுடையதாகவும் உண்டாயிற்று. உடனே வஸிஷ்டரும் அந்தக்குழந்தைக்கு ஜாதகர்மம் முதலானகர்மாக்களை நடத்தி 12ம்நாளில் பராசரர் என்று நாமகரணமும் செய்தார். அந்தப்பராசரர் வேதாத்யயனம் செய்வதற்கு முன் ஸகல சாஸ்திரார்த்தங்களையும் நன்கு அறிந்துகொண்டார். பாலசந்திரன்போல் விளங்கும் அந்தப்பராசருக்கு வஸிஷ்டர் எட்டாவது வயதில் உபநயனம் என்கிற ஸம்ஸ்காரத்தை நடத்திவைத்தார். அவர் பால்ய வயதிலிருந்தபடியால் வஸிஷ்டரைப் பிதாவாகவும் தன்மாதாவை விதவையாகவும் வித்யாஸமாக நினைத்து ஸந்தேகங்கொண்டு வினவினார். என்னுடைய தகப்பனார் யார்? அவர் எங்கேயிருக்கிறார்? பந்துக்களுக்குள் வஸிஷ்டர் எவ்விதமாக வேண்டும்? நீ எனக்குப்பால்கொடுத்து வளர்த்தபடியால் தாயாகிறாய். விதவையாகவிருக்கிறாயே. இந்த சங்கையை எனக்குப்போக்கவேண்டுமென்று அன்னையிடம் வேண்டினார். இவ்விதம் புத்திரனால் பிரச்னம் செய்யப்பட்ட அவர் மாதாவானவள் பதியினுடைய துக்கத்தை ஞாபகப்படுத்தப்பட்டவளாய்க்கொண்டு பெருமூச்சுவிட்டு திணறிக்கொண்டு அடியில்வருமாறு மொழிகின்றாள். வஸிஷ்டர் உனக்குப் பிதாமஹர் (அதாவது உன் பிதாவிற்குப்பிதா). உன் தகப்பனார்

ராக்ஷஸனால் அடிக்கப்பட்டார். நீ என்னுடைய குக்ஷியி
லிருக்கும்பொழுது அவர் ஒருவிதமான தவறும் செய்யாமல்
நித்திரைசெய்துகொண்டிருக்கும் காலத்தில் இவ்விதம் நேர்ந்
தது. என்று கூறி மிகவும் துக்கப்பட்டுக்கொண்டு கதியற்ற
வள்போல் அழுதாள். உடனே ஸகல வேதங்களையுமறிந்த
வரான பராசரர் ஹே மாதாவே! ராக்ஷஸர்களை வதம்பண்ண
க்கூடிய யக்ஞத்தை உபக்கிரமித்து ராக்ஷஸர்களை நாசம்செய்
துவிடுகிறேன். நீ வியஸனப்படாதே. கர்ப்பத்திலிருக்கிற
காலத்தில் ஸமீபத்தில் அத்யயனம் செய்துகொண்டிருந்த
பிதாமஹரிடமிருந்து ஸகலவேதங்களும் அவைகளுடைய
அர்த்தங்களும் நன்கறியப்பட்டிருக்கின்றன. ஆகையால்
விதிப்படி ராக்ஷஸர்களைக் கொல்லக்கூடிய யாகத்தை அனுஷ்
டிக்க எனக்குத்தெரியும். என்று மாதாவை ஸமாதானப்படு
த்திவிட்டு பராசரர் பாலனாகவிருந்தாலும் மரியாதையுடன்
தாயாரிடம் விடைபெற்றுக்கொண்டு பிதாமஹரையும் நமஸ்
கரித்து அவருடைய அனுக்கிரகத்தையுமடைந்து அருகி
லிருந்த வஸிஷ்டசிஷ்யர்களுடன் புண்யகர்மாக்களாகிற
விதைகளை விதைக்கிற பூமியான கஜாரண்ய க்ஷேத்திரத்தை
யடைந்தார். உடனே உலகிலுள்ள பாபங்களை நாசம்செய்கி
ன்றதான ஜம்புதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து பிதாவின்பொரு
ட்டு தர்ப்பணாஞ்ஜலிகளைக் கொடுத்து கரையில்வந்து பிராம
ண சிரேஷ்டர்களையழைத்து அவர்களுக்கு விதிப்படிபோஜ
னம் தக்ஷிணை இவைகளைக்கொடுத்து பிதுர்சிராத்தத்தை நட
த்தினார். பிராமணர்கள் திருப்தியடைந்தவுடன் இவருடைய
பிதாவான சக்தியானவர் விமானத்திலேறிக்கொண்டு ராக்ஷ
ஸனாலடிக்கப்பட்ட நான் புத்திரன்செய்த சிராத்தத்தால்
நல்ல லோகத்தையடையும்படி செய்தவனுக்கொண்டு
சைவசின்னத்துடன் சிவலோகத்திற்குச் செல்லுகிறேன்.
என்றுசொல்லி பிதா கைலாஸத்தையடைந்தவுடன் முனி
கணங்களோடுகூட பராசரர் ஸந்தோஷத்தையடைந்து ஸ்ரீ

ஜம்புநாதருடைய ஸந்நிதிக்குச்சென்று பக்தியுடன் வந்தனம்செய்து எழுந்திருந்து அடியில்வருமாறு போற்றத் தொடங்கினார்.

## पराशरस्तुतिः ॥

सह्यात्मजापरिवहज्जलमज्जनाय
सर्वेश्वराय सरसीरुहलोचनाय ।
कैलासभासुरकरीन्द्रवनालयाय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ १ ॥

गौरीकरात्तविधिपुष्करणीपवित्र
पानीयपूरकबलीकृतविग्रहाय ।
दूरीकृताश्रितजनामयकल्मषाय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ २ ॥

ब्रह्मेन्द्रजम्बुमुनिरामशिवाग्न्यगस्त्य
सूर्येन्दुमुख्यसुरतापसपूजिताय ।
कैवल्यदाय करिणः कमलार्चिताय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ३ ॥

शोणाक्षचोळकृतगोपुरसौधसाल
सम्मण्टपोज्वलगजेन्द्रवनास्थिताय ।
ऊर्णायतन्तुमयमन्दिरवासिने प्राक्
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ४ ॥

चोळाङ्गनागळपरिच्युतसिन्धुनीत
मुक्ताविभूषणभृते ह्यमृतेश्वराय ।

श्रेयस्कराय नवतीर्थगवाक्षरन्ध्रैः
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ५ ॥

स्नानेषु गव्यदळमृद्व्रणदेयदूर्वा
संख्यां प्रकाश्य निजसव्यगवाक्षरन्ध्रैः ।
तन्मण्डलं च भुवनावनदीक्षिताय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ६ ॥

इन्द्रस्य वृत्रवधदोषमपोह्य तस्मै
स्वाराज्यदाय निजपादसमर्चकाय ।
भक्तार्त्तिभञ्जनकृते परमेश्वराय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ७ ॥

श्रुत्यन्तवेद्यमहसे किटिहंसरूप
गोविन्दपद्मभवमृग्यपदाब्जमूर्ध्ने ।
भूयोखिलाण्डरमणीसततार्चिताय
श्रीजम्बुमूलनिलयाय नमश्शिवाय ॥ ८ ॥

जम्बूनाथ प्रसीद प्रमथवरदयामेयकारुण्यमूर्ते
कामारे कामवैरिन्कबलितगरळाशेषलोकैकनाथ ।
वेधो देवेन्द्रजम्बूमुनिरघुतिलकोमागस्त्येन्दुलृता
मातङ्गार्काभिपूज्यप्रशमयदुरितं भो नमस्ते नमस्ते ॥

ஸ்ரீகாவேரிநதியினுடைய பாவனமான பிரவாகத்தில் செய்யப்பட்ட ஸ்நாநத்தையுடையவரும ஸகலஜகத்திற்கு மீசனும் மலர்ந்த கமலத்திற்கொப்பான கண்களையுடையவரும கைலாஸம்போல் விளங்கும் கஜாரண்யத்தை தமக்கு வாஸஸ்தலமாகவுடையவரும் ஸ்ரீஜம்புநாதரின் அடியில்

வீற்றிருப்பவருமான சிவனின்பொருட்டு நமஸ்காரம். பிர்ம்மபுஷ்கரிணீ என்கிற புண்யதீர்த்தத்திலிருந்து எடுக்கப்பட்ட தீர்த்தத்தால் ஸ்ரீபார்வதி தேவியின் கைகளால் நிர்மாணம் செய்யப்பட்ட அழகான சரீரத்தையுடையவரும் வெகுதூரத்தில் விலக்கப்பட்ட பக்தர்களுடைய பாபம், ரோகம் இவைகளையுடையவரும் ஸ்ரீநாகமரத்தின் அடியில் வீற்றிருப்பவருமான சிவனின்பொருட்டு நமஸ்காரம். பிர்ம்மா இந்திரன், ஜம்புமுனிவர், ராமன், சிவன், அக்னி, அகஸ்தியர், சூர்யன், சந்திரன் முதலான தேவதைகள் மஹர்ஷிகள் இவர்களால் பூஜிக்கப்பட்டவரும் யானைக்கு முக்தியைக்கொடுத்தவரும் லக்ஷ்மியால் பூஜிக்கப்பட்டவரும் ஸ்ரீநாகமா சிவனின் பொருட்டு நமஸ்காரம். சிவபக்தர்களையுடைய சோளமன்னனால் நிர்மாணம் செய்யப்பட்ட கோபுரம், பிராகாரம் மண்டபம் இவைகளால் விளங்கும் கஜாரண்யத்தை அலங்காரம் செய்கிறவராயும் ஆதியில் எட்டுக்கால் பூச்சியினுடைய நூலால் ஏற்பட்ட கிரகத்தில் வஸித்தவரும் ஸ்ரீநாகமா சிவனின்பொருட்டு நமஸ்காரம். சோளதேசத்து ஸ்திரீகளுடைய கழுத்திலிருந்து நழுவினதாயும் நதியால் கொண்டுவரப்பட்ட முத்தாஹாரத்தை பூஷணமாகவுடையவரும் ஒன்பது தீர்த்தஸ்வரூபமான ஒன்பது த்வாரமுள்ள ஜன்னல்வழியாக தர்சிப்பவர்களுக்கு சிரேயஸ்ஸை யுண்டுபண்ணுகிறவராயும் அமிருதேசுவரர் என்று பெயர் கொண்ட ஸ்ரீநாகமா சிவனின்பொருட்டு நமஸ்காரம். விருத்ராஸுரனை வதம் செய்ததால் இந்திரனுக்கேற்பட்ட தோஷத்தைப் போக்கி தன்னுடைய பாதகமலங்களைப் பூஜித்தவனான அவனுக்கு ஸ்வர்க்கராஜ்யத்தைக்கொடுத்தவராயும் பக்தர்களுடைய கஷ்டத்தை நிவர்த்திசெய்யும் விஷயத்தில் எப்பொழுதும் ஜாகருகராயும் இருக்கிற ஜம்புமாத்தினடி சிவனின் பொருட்டு நமஸ்காரம். சுருதிகளுடைய முடிவுகளான உபநிடதங்களால் அறியக்கூடிய தன்னுடைய ஸ்வரூபத்தையுடையவராயும் பன்றியாயும் ஹம்ஸமாயுப்

ரூபம்கொண்ட விஷ்ணு, பிர்ம்மா இவர்களால் தேடியும் பார்க்கமுடியாத பாதம், சிரஸ் இவைகளையுடையவரும் அகிலாண்டநாயிகையால் அடிக்கடி பூஜிக்கப்பட்டவருமான ஸ்ரீஜம்புமூல * சிவனின்பொருட்டு நமஸ்காரம். ஹே ஜம்பூபதே! ப்ரமதகணங்களிடம் அதிகமான தயையையுடையவரே! ஹே காருண்யமூர்த்தே! யமன், மன்மதன் இவர்களைஜயித்தவரே! பிரியமாய் புஜிக்கப்பட்ட காளகூட விஷத்தையுடையவரே! ஸகல லோகங்களுக்கும் நாதனே! பிர்ம்மா, இந்திரன், ஜம்புமுனி, ராகவன், பார்வதி, அக்னி, அகஸ்தியர், சந்திரன், எட்டுக்கால்பூச்சி, யானை, சூர்யன் இவர்களால் அர்ச்சிக்கப்பட்டவரே! ஹே சங்கரா! அனுக்கிரகம்பண்ணும். பாபங்களை நாசம்பண்ணும் ஹே சம்போ! நமஸ்காரம். நமஸ்காரம். சுத்தமானபஸ்மாவால் பிரகாசிக்கும் சரீரத்தையுடையவரும் ஜபமாலையை தரிப்பவருமான பராசரர் பகவானை இவ்விதம் துதித்து அமிருதமயமான ஸ்ரீசங்காருடைய ஸந்நிதியில் ரித்விக்குகளோடுகூட ஆபிசாரம் செய்ய ஆரம்பித்தார். அவ்விதம் நடக்கும் ஆபிசாரயக்ஞத்தில் ராக்ஷஸர்களை ஹோமம் செய்தார்கள். கிரமமாக ஸகல ராக்ஷஸர்களும் குறுக்காகவும் தலைகீழாகவும் ஹா ஹா சப்தத்துடனும் அக்னியில் விழுந்து தஹிக்கப்பட்டார்கள். அக்னிபகவான் புஜித்ததுபோக பாக்கியாயுள்ள எலும்புகள் ஹிமாசலம்போல்பெரியமுட்டாகக்குவிந்துவிட்டன. பிறகு இவருடைய மந்திரமானது நிருருதிதிக்குக்கு அதிபதியான ராக்ஷஸனுடைய வாகனத்தை பலாத்காரமாக இழுக்கும் பொழுது அந்த ராக்ஷஸன் தன்னை இழுக்கும் மந்திரத்தைக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டு ஜம்பூபதியைச் சரணமாகவடைந்து நமஸ்கரித்து பராசரமுனிவர் மந்திரங்கள், அக்னியில் ஹோமம் செய்யவேண்டி என்னை இழுக்கின்றன. ஆகையால் ஹே ஜம்புநாத! என்னைப்பாதுகாரும் பாதுகாருமென்று கதறினன். இவ்விதம் கதறிக்கொண்டு அடிக்கடி ஜம்

பூபதியை நமஸ்கரித்துத் தன்னிடம் கருணையுண்டாகவே ண்டிப் போற்றுகின்றேன்.

## नैर्ऋतिस्तुतिः ॥

अम्बाकुचाचलयुगादवतार्य यत्ना-
दम्बालजातदळदीर्घमदीर्घकालम् ।
कम्बूपमानगळसान्द्रसुधारसार्द्रं
जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ १ ॥

इन्द्रादिदिक्पतिनिरंकुशभाग्यहेतुं
चन्द्रातिरम्यभवदास्य मृगायमाणम् ।
इन्दीवरोदरमनोहरमीशदासे
जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ २ ॥

काळावलेपदवपावककालमेघं
बिभ्यन्मृकण्डुसुतकैरवशीतभानुम् ।
गौरीमुखाब्जसुषुमामधुपानभृङ्गं
जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ३ ॥

ऊर्णायवं ददतमुज्वलचोळराज्यं
पूर्णायुरर्थचतुरङ्गबलाधिपत्यम् ।
मोक्षं च नव्यनळिनार्चकवारणाय
जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ४ ॥

माराङ्गदाहपरिवादमिवापनेतुं
गौर्यामनेकतनयान जनयन्तमाशु ।

श्रृङ्गारजं रसमिवोदितदेहबन्धं

जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ५ ॥

स्वर्णार्पणेषु गुळिकायितमष्टसिद्धि

सूतौघरिष्टममृतस्य च बीजवापम् ।

ब्रह्मेन्द्रविष्णुपददार्ढ्यनिदानभूतं

जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ६ ॥

ईशामृतेश्वर गजेन्द्रवनेश गौरी-

हस्तेन पद्मजसरोजलपिण्डिताङ्ग ।

रक्षोविमोचक हरेरमृतान्तरङ्ग

जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ७ ॥

विद्याविवेकमदशान्त्यरिमित्रसाम्य

सन्तोषवस्तुभजनामृतदानहेतुम् ।

शर्वाखिलाण्डरमणीश विभो दयाब्धे

जम्बूपते मयि निधेहि कृपाकटाक्षम् ॥ ८ ॥

ஹே ஜம்பூபதே! சங்கத்திற்கொப்பான கண்டத்திலிருக்கும் அமிருதப்பிரவாகத்தால் நிரம்பியதும் தாமரையிதழ்போல் நீண்டும் அகலமாயும் விளங்கும் உம்முடைய கிருபாகடாக்ஷத்தைப் பார்வதி தேவியினிடத்திலிருக்கும் சிரமப்பட்டாவது திருப்பி என்னிடத்தில் வையும். இந்திரன் முதலான திக்பதிகளுடைய அதிகமான ஸாமிருதத்திற்குக் காரணமாயும் சந்திரன்போல் மிகவும் அழகாயுமுள்ள உமதுமுகத்திற்கு மான்போலவும் நீலோத்பலத்தினுடைய மத்யம்போல் மனோஹரமாயும் விளங்கும் உமது கிருபாகடாக்ஷத்தை ஹே ஜம்புநாத! என்பேரில்படும்படி செய்யவேண்டும். யமனுடைய கர்வமாகிற காட்டுத்தீக்குப் பிரளயகால

த்து மேகம்போன்றதும் மிகவும் பயந்தவரான மார்க்கண்டர் என்கிற ஆம்பல்மலருக்குப் பூர்ணசந்திரனும் கௌரியினுடைய முகமாகிற தாமரைப் புஷ்பத்தினுடைய மதுவை அருந்தும் வண்டாயிருக்கும் உம்முடைய கிருபாகடாக்ஷத்தால் என்னைப்பாரும். ஊர்ணாயு என்கிற அரசனின்பொருட்டு சோளராஜ்யத்தையும் பூர்ணமான ஆயுளையும் ரதம், கஜம், குதிரை முதலான பலங்களையும் புதிதான தாமரைமலர்களால் பூஜித்தயானைக்கு மோக்ஷத்தையும் கொடுத்தவராயுமிருக்கிற ஹே ஜம்புநாத! உம்முடைய கருணைக்கு என்னைப்பாத்திரனாகச் செய்யும். மன்மதனுடைய சரீரத்தைத் தஹித்ததாலேற்பட்ட அபவாதத்தைப் போக்கவேண்டிப் போல் பார்வதியினிடத்தில் சீக்கிரம் குமாரனையுண்டுபண்ணினவரும சிருங்காரஸமே சரீரரூபமாய் உருவெடுத்து வந்ததுபோலவும் விளங்கும் ஹே ஜம்பூபதே! உம்முடைய கடாக்ஷத்தை என்னிடம் விழும்படிசெய்யும். அணிமாதிகளான எட்டு ஐசுவர்யங்களையும் உண்டுபண்ணுகிறவராயும் அமிருதரூபமாய் பிரகாசிப்பவரும் பிர்ம்மா, இந்திரன், விஷ்ணு முதலானவர்களுடைய நிவாஸஸ்தானம் அசையாமல் ஸ்திரமாயிருப்பதற்குக் காரணபூதராயுமிருக்கும் ஹே ஜம்பூபதே! உம்முடைய கடாக்ஷத்தை என்னிடம் விழும்படி செய்யும். ஹே லோகநாத! ஹே அமிருதேச்வர! ஹே கஜேந்திரவரநாயக! கௌரீகையால் பிர்ம்ம தீர்த்தத்தினுடைய ஜலத்தால் உருட்டி வைக்கப்பட்ட சரீரத்தையுடையவரே? ஸ்ரீராமருக்கு ராக்ஷஸவதத்தாலேற்பட்ட பாபத்தைவிலக்கியவரே! அமிருதத்தால் நிறைந்த உமதுகடாக்ஷத்தால் என்னைப்பாரும். ஹே அகிலாண்டநாயகியின் நாயகனான பரமேசுவர! வித்யை, அறிவு, பொறுமை, சத்ரு, மித்திரர்களிடம் ஸமனாயிருக்கும் தன்மை, ஸந்தோஷம், பக்தர்களுக்கு மோக்ஷம் முதலியவைகளைக் கொடுப்பதான உமது கிருபாகடாக்ஷத்தால் என்னைப்பாரும். இவ்விதம் ஜம்புநாத

ரையுத்தேசித்துச் செய்யப்பட்டிருக்கிற இந்த அஷ்டகத்தை எவன்சங்கரருடைய ஸந்நிதியில் பக்தியுடன் படிக்கிருனே அவனுக்கு ஸ்ரீ அமிருதேசருடைய கருணையானது எப்பொழுதும் உண்டாகும். இவ்விதம் கூறப்பட்ட நிருருதியினுடைய மிகவும் தைன்யமான வசனத்தைச் செவியுற்ற கிரிசர் என்னுலும், விஷ்ணுவாலும், பிர்ம்மாவினுலும் அந்த மந்திரமானது விலக்கமுடியாது. ஹே ராக்ஷஸ! இந்த மந்திரமானது உன்னுடைய வாகனத்தைக் கொண்டுபோகட்டும். நான் உன்னைப்பாதுகாக்கிறேன் என்னுடன்கூட வாவென்று சொன்னூர். அந்த மந்திரமும் பலாத்காரத்தால் நைருருதவாஹனத்தை இழுத்துக் கொண்டுபோய் யாகசாலையில் சேர்த்துவிட்டது. அதைப்பார்த்த பராசரர் யக்ஞகுண்டத்தில் அதையும் ஹோமம்செய்ய உபக்கிரமித்தார். அதற்குள் கருணமூர்த்தியான பரமேசுவரர் அசரீரியாக ஆகாயத்திலிருந்து கொண்டு நைருருதவாஹனத்தை எனக்குக் கொடுக்கவேண்டுமென்று யாசித்தார். இவ்விதம் யாசிக்கப்பட்ட அம்முனிவர் க்ஷணகாலம் யோஜித்தார்.

யாதொரு ராக்ஷஸனுடைய வாஹனமானது என்னுல் ஹோமம் செய்யப்பட்டதோ அதைவேண்டுமென்று ஆகாசவாணி பிரார்த்திக்கின்றது. இதற்கு எதைக்கொடுப்பேன் என்று ஒன்றும் புரியாமல் எனதுமனம் சங்கைப்படுகின்றது. யாகத்தில் யாராகிலும் எதையாகிலும் யாசித்தால் அந்த யக்ஞகர்த்தா ஒருஸமயமும் இல்லை என்று சொல்லக்கூடாது. இது முக்யமானதர்மம் என்றுகருதி பராசரமுனியானவர் கொடுத்துவிட்டேன் என்று தன்வாக்கால் கம்பீரமாக ஆகாயவாணிக்குச் சொன்னூர். இதைக்கேட்ட விருஷப வாஹனத்திலிருப்பவரும் கஜாரண்யத்திற்குப் பதியாயுமிருக்கும் பிரபுவானவர் உமையுடன்கூட ஸந்தோஷப்பட்டு பராசரரைப்பார்த்து ஹோமம் பண்ணப்பட்ட சவத்

தால் நான் திருப்தியடைந்துவிட்டேன் என்றுசொல்லிய பரமேசுவரருடைய அமிருதமயமான வாக்கைக்கேட்டு பராசரர் ஆனந்தத்துடன் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு மஹேசுவரரைப் பார்த்து யக்ஞத்தை நிறுத்திவிட்டு பகவானுடைய அதிகமான கருணையையும் பக்தனுடைய ராக்ஷஸனையும் பார்த்து ஹே ஈச! நீர் பச்சாத்தாபத்தினால் யாசித்து இந்தப்பிசாசத்தைப் பாதுகாத்தபடியால் மூவுலகங்களிலும் உமக்குப் பச்சாத்தாபேச்வரர் என்று பிரஸித்தியுண்டாகட்டும் என்று பிரார்த்தித்தார். ஈசனும் அவ்விதமே உண்டாகட்டுமென்று அம்முனிவரிடம்கூறி ராக்ஷஸனுக்கும் வாஹனத்தைக் கொடுத்து ஸந்தோஷப்படுத்தி வைத்துப்பிறகு கருணைக்கடலான சங்கரர் பார்வதியுடன் கூட ஞானபூமியையடைந்தார்.

பனிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 13.

त्रयोदशे शिवे भक्तिं रङ्गनाथो विभीषणम् ।
स्वस्य स्वप्नेऽवदच्छ्रीमद्गजारण्यस्य वैभवम् ॥

இந்தப்பதிமூன்றுவது அத்தியாயத்தில் ஸ்ரீரங்கநாதரானவர் தனக்குப்பரமேசுவரரிடமிருக்கும் பக்தியையும் ஸ்ரீகஜாரண்யத்தினுடைய மாஹாத்மியத்தையும் விபீஷணரின் பொருட்டு ஸ்வப்னத்தில் அறிவிக்கிறார்.

ஸூதர் இந்த கஜாரண்யக்ஷேத்திரத்தினுடைய பிராசீனமானவைபவத்தை மறுபடியும்

கூறுகின்றேன். ஹே! மஹரிஷிகளே! கவனமாய்க்கேளுங்கள் என்று சொல்லத்தொடங்கினர்.

ஒரு ஸமயம் ராக்ஷஸர்களுக்கு அதிபதியாயும் சிவபக்தனுயுமிருக்கும் விபீஷணரானவர் ஸ்ரீராகவனிடத்திலிருந்தும் உத்திரவுபெற்றுக்கொண்டு ஸந்தோஷமாக அயோத்தியிலிருந்து தன்னுடைய பட்டணத்திற்குப்போகவேண்டிவரும் ஸமயத்தில் வழிநடுவில் நதிகளுக்குள் சிறந்ததான காவேரியைப்பார்த்து சிரமத்தையடைந்த ஸைந்யங்கள் வாஹனங்கள் இவைகளையுடையவராய்க்கொண்டு மிகவும் அழகான காவேரியின் மணல்முட்டில், நிறுத்தி ரதத்திலிருந்தும் இறங்கி தான்கொண்டுவந்த விமானத்தையுமவ்விடத்தில் நிறுத்திவிட்டு கிழக்குதிக்கில் மிகவும் உத்தமமான ஜம்பூவனத்தைப்பார்த்தார். அநேகவாத்யகோஷங்களுடன் கூடியதும் பற்பலவிநோதங்களுடன் கூடியதுமான அந்த ஜம்புகேச்வா க்ஷேத்திரத்தைப்பார்த்து மிகவும் ஆச்சர்யத்துடன் கூடியவராய்க்கொண்டு இதின் விசேஷங்களை உட்சென்றுபார்க்கவேண்டுமென்கிற ஆவலுடன் சீக்கிரமாக அதற்குள்புகுந்து மிகவும்அழகான சிவாலயத்தைக்கண்ணுற்றார். உடனே அங்குவிளங்கும் சிவபக்தர்கள்மூலம் ஜம்புநாதருடையவைபவத்தையும் சக்தியையும் நன்கறிந்து அதிகமான பக்திசிரத்தையுடன் கூடின விபீஷணர் ஸர்வலோகங்களுக்கும் ஈசனான ஸ்ரீஜம்பூபதியை சந்தனம் புஷ்பம் இவைகளால் பூஜித்து அடிக்கடி நமஸ்காரம்செய்து பிரதக்ஷிணபூர்வகமாக அந்த பரமேசுவராலயத்திலிருந்தும் வெளிக்கிளம்பி எந்த இடத்தில விமானம் வைக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் காவேரியின் மணல்களால் நிறைந்த திட்டையடைந்தார். அங்கு போயும் லக்ஷ்மீபதியான ஸ்ரீரங்கநாதரை அர்ச்சித்து பூஜையின் முடிவில் தன் பட்டணத்திற்குப் போகவேண்டி விமானத்தை உயரக்கிளப்புங்கால் அது மணலைவிட்டு அசை

யாமல் அவிடத்திலேயே ஸ்திரமாயிருக்கின்றது. இதைப் பார்த்து விபீஷணரும் இவ்விதம் நேர்ந்துவிட்டதே என் செய்வோமென்று மிகக்கவலைகொண்டு ஒன்றும் புரியாமல் துக்கப்பட்டுக்கொண்டு காவேரியில் ஸ்நாநம் செய்து பகல் முழுமையும் ஆகாரம் பண்ணாமல் கலங்கிக்கொண்டு காலம் கழித்தார். இரவுவந்தவுடன் துக்கத்துடன் கூடிய அந்தவிபீ ஷணர் அவசாமாய் நித்திரையடைந்தார். நித்திரைசெய்யும் அந்த விபீஷணரை ஸ்ரீபகவானான ரங்கநாதர் எழுப்பி பின் வருமாறுகூறுகின்றார். ரங்கநாதர்: ஹே ராக்ஷஸராஜ! உன் னுடைய பக்தியால் நான்ஸந்தோஷப்படுகிறேன். இங்கு விளங்கும் கஜாரண்யக்ஷேத்திரமானது மிகவும் பரிசுத்த மான ஸ்தலம், இந்த உத்தமக்ஷேத்திரத்தில் கைலாஸவாஸி யான ஸாக்ஷாத்பரமேசுவரன் வஸிக்கிறார். ஹே! விபீஷண! நான் இந்தப்பிரபுவை ஆராதிக்கவேண்டியே இங்கு இருக் கிறேன். இந்த ஞானபூமியானது ஸ்வர்க்கத்தைக்காட்டி லும் அழகு பொருந்தியது. நன்கு கவனித்துப்பார். இங்கு ஸ்ரீநீலகண்டருக்குப் பிரீதியை யுண்டுபண்ணுகிறவளாயும் ஹரியினால் ஸேவிக்கப்பட்டவளுமான கௌரியானவள் வஸி க்கிறாள். கஜாடவீ என்று பெயர் பெற்றதும் பரிசுத்தமான கீர்த்தியையுடையதுமான இந்த க்ஷேத்ரமானது சோளதேச ங்களிலுள்ள க்ஷேத்திரங்களுக்குள் மிகவும் விசித்திரமானது. இது ஆகாசகங்கையினுடைய ஜலத்தைப்பானம் செய்கி ன்ற மிகவும் உயரமான சிகரங்களையுடைய கோபுரக்கூட்ட ங்களால் விளங்குகின்றது. அதிகஉயரமான மதிள்களோ கூடியிருப்பதால் ஆபரணங்களாலலங்கரிக்கப்பட்ட ஸ்திரீ போல் பிரகாசின்றது அகலமான ஸுவர்ணக்கதவுகளால் பிரகாசிக்கும் வாயற்படிகளையுடையதும் பலபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட ராஜவீதிகளுடன் கூடியதும் பலரத்னங் களால் செய்யப்பட்ட தூண்களில் கட்டப்பட்ட முத்துமா லைகளால் விளங்கும் தோரணங்களால் மிகவும் அழகாய் எப்



திருவானைக்காவல் ஸ்வாமி கோவில் விமானமும் ஜம்பு விருக்ஷமும்.

பொழுதும் சாஸ்திரங்களிற்கூறியபடி கர்மானுஷ்டானங்களைச் செய்கிறவர்களும் பொறுமையுடன் கூடியவர்களும் சிவாகமமென்றுபெயர் பூண்டகடலைக்கரை கடந்தவர்களும், கருணையுடையவர்களும், தானம் செய்கிறவர்களுமான அந்தணசிரேஷ்டர்களால் அலங்கரிக்கப்பட்டதும் மேலும் பஞ்சாக்ஷரத்தை எக்காலமும் ஜபிப்பவர்களும், பரிசுத்தர்களாயும் தங்களால் ஓதப்படும் வேதங்களுடைய சப்தங்களால் தடுக்கப்பட்டவேறான சப்தங்களையுடையவர்களும், விபூதி ஜபமாலை இவைகளின் ஸமூகங்களால் பிரகாசிக்கும் சரீரங்களையுடையவர்களுமான சிறந்த பிராமணர்களால், கஜாடவி விளங்குகின்றது. யாகசாலை அத்யயனசாலை கஜசாலை அச்வசாலை சித்திரசாலை தண்ணீர்பந்தல் ஆயுதசாலை சாஸ்திரவித்யாசாலை முதலான சாலைகளுக்குமத்தியில் ஜம்புநாதக்ஷேத்திரம் விளங்குகின்றது. இங்குள்ள சிவபக்தர்கள் ஒவ்வொரு தினமும் காலையில் ஸ்ரீஜம்புபதிக்கு அபிஷேகம் செய்வதற்காகத் தங்கம் வெள்ளி தாம்பரம் இவைகளாலுண்டு பண்ணப்பட்டகுடங்களில் தீர்த்தங்களை எடுத்துச் சிரஸால் வகித்துக்கொண்டுவருகிறார்கள். அதைப்பார்த்தால் இவர்கள் இந்தச்சரீரத்தை விட்டபிறகு பரமேசுவரஸ்வரூபத்தையடையப்போகிறபடியால் அந்தஸமயத்தில் தம்சிரஸால் கங்கா ஜலத்தைவகிக்கவேண்டியதற்காக முந்தியே இங்கு தீர்த்தத்தை வகித்துப்பழக்கம் பண்ணுகிறார்களோவென்று தோன்றுகிறதாயும் பூர்ணமாய்நிரம்பியிருக்கும் அநேக விதங்களான ரத்னக்குவியல்களால் ஸித்தமாயிருக்கும் அணிமாதிகளான எட்டுஐசுவர்யங்களையுடையதாயும் பிரபுக்களாலும் செல்வங்களாலும் பீதாம்பரங்களாலும் ஆபரணங்களாலும் விளங்கும் இந்த கஜாரண்யமானது தேவலோகம்போல்பிரகாசிக்கின்றது. மிகவும் பிரஸித்திபெற்றவைகளான அளகை காளஹஸ்தி காஞ்சீபுரீ அயோத்தியை மதுராபுரீ திருவாரூர் இவைகள் இந்தக்ஷேத்திரத்திற்கு நூறில் ஒரு

பாகத்திற்குக்கூட ஸமானமாகமாட்டா. அப்ஸரஸ் முதலான தேவஸ்திரீகள் தங்களுடைய பிராசீனபுண்யவசத்தால் இந்தக்ஷேத்திரத்தையடைந்து சரீரத்தில் அதிகமான காந்திவிருத்திராகவேண்டியதற்காக நர்த்தனங்களாலும் கானங்களாலும் அகிலாண்டேசுவரியையும் ஸ்ரீ ஜம்புநாதரையும் ஆராதிக்கிறார்கள். இந்தப்புண்யஸ்தலத்தில் சிலர் சாஸ்திரங்களுக்கு வியாக்யானம் செய்கிறார்கள். மற்றுசிலர் ஸ்மிருதிகளுக்கும் வேறு சிலர் சுருதிகளுக்கும் பின்னும் சிலர் புராணம் சிவாகமம் யோகசாஸ்திரம் முதலானவைகளுக்கும் வியாக்யானம் செய்கிறார்கள்.

ஸூர்ய சந்திரவம்சங்களில் உண்டானவர்களும் பிரஜைகளைப்பாதுகாற்பதில் ஜாக்கிரதையுடனும் தநுர்வேதத்தில் பயிற்சி பெற்றவர்களும் கருணையுடன் கூடியவர்களாயும், தைர்யசாலிகளாயும், பலவான்களாயும், தானம்செய்கின்றவர்களுமான அரசர்கள் இங்கு வஸிக்கிறார்கள். இந்தக்ஷேத்திரத்திலேயே சிலவைசியர்கள் கோக்களை ரக்ஷித்துக்கொண்டு பலஸாமானகளையும் வாங்கி நியாயமாக வியாபாரம் செய்துகொண்டும் கிரமமானவட்டிக்கி ஜனங்களுக்கு ரூபாய்களையும் கொடுத்துதவிபுரிந்தும் வருகிறார்கள். சூத்திரர்களும் வணக்கமுள்ளவர்களாகவும் சாஸ்திரீயமான மார்க்கத்தை விட்டு மாறாதவர்களும் கலப்பைமுதலான ஆயுதங்களைக்கொண்டு தான்யங்களை விருத்தி செய்கிறவர்களாகவும் ஸ்ரீஜம்புநாதருக்குத் தாஸர்களாகவிருந்து வேலைசெய்கிறவர்களாகவும் இங்கு வஸிக்கிறார்கள். பின்னும் சிலமஹான்கள் ஜடைகளைத்தரித்துக்கொண்டு சரீரம்பூராவும் விபூதியையணிந்து ஜபஸரங்களையும் போட்டுக்கொண்டு காஷாயவஸ்திரம்தரித்து எப்பொழுதும் பரமேசுவரரிடத்தில் லயத்தையடைந்த சித்தத்தையுடையவர்களும் சிவகைங்கர்யங்களையே நடத்துகிறவர்களாயும் இருந்துகொண்டு பார்ப்போர்களுக்கு வேறான

ஈசுவரமூர்த்திகளாகத் தோன்றுகிறார்கள். மதுரமானவாக்கையுடையவர்களும் தாஸிகளுக்கு ஆசார்யாளாயிருக்கும் சிலநடர்கள் தங்களுடைய நிருத்தங்களாலும் மதுரமான கானங்களாலும் வாத்தியங்களாலும் கஜாரண்யேசருக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிறவர்களாய்க்கொண்டு வஸிக்கிறார்கள். இந்தக்ஷேத்திரத்தில் சோணக்ஷனென்கிற சோளதேசத்தரசனால் மஹரிஷிகளுக்காக ஏற்படுத்தப்பட்ட மிகவும் விஸ்தாரங்களான பதினெட்டுமடங்கள் சிவார்சகர்களான ஞானிகளுக்கு எப்பொழுதும் அன்னதானம் செய்கின்றவைகளாகவும் நித்யோத்ஸவங்களுடன் கூடியவைகளாகவும் விளங்குகின்றன. வேகமாய் செல்லக்கூடியவைகளும் அழகான மேனியுடன்கூடியவைகளுமான குதிரைகளாலும் பெரிதான மேகங்கள்போல் கறுத்த வர்ணங்களுடையவைகளும் அறுபது வயதுடையவைகளும் உயரங்களாயுமுள்ள யானைகளாலும் சிகரங்களால் ஆகாயத்தைத் தொடுகின்ற ரதங்களாலும் அலங்கரிக்கப்பட்டதாக ஒவ்வொருவீதியும் பிரகாசிக்கின்றது. விவாஹம், உபநயநம் ருதுஸ்நாநம் சாந்தி சௌளம் ஸீமந்தம் முதலான கல்யாணோத்ஸவங்களாலும் சிவோத்ஸவங்களாலும் எப்பொழுதும் நிறைந்த இந்த கஜாரண்யமானது மேன்மேலும் விருத்தியடைந்த ஐசுவர்யங்களையுடையதாக விளங்குகின்றது. ஆகையால் இவ்விதம் பெருமைவாய்ந்த இந்த ஜம்புநாதருடைய மகிமையை கலியுகத்தில் இருக்கும் மூடஜனங்கள் எங்ஙனம் அறியப்போகிறார்கள். அந்த ஸகலஜகத்திற்கும் பதியான சங்கருடைய பிரபாவத்தை நானறிவேன். பிர்ம்மா அறிவர் பின்னொருவருமறியமாட்டார் ஆகையால் அந்தப் பிரபுவைஸேவிக்கவேண்டியே இங்கு வஸிக்கிறேன்.

இப்பவும் லக்ஷ்மியானவள் தனக்கு விசேஷமான சக்தி ஏற்படவேண்டி இங்கு தவம்புரிகிறாள். பிர்ம்மாவும் இங்கு

தவம்செய்து நித்யமாயிருக்கும் தன்மையை யடைந்தார். நாளும் இந்திரனும் இந்த இடத்திற்கு வந்துதான் ராக்ஷஸ வதத்தாலேற்பட்ட தோஷத்திலிருந்தும் விடுபட்டோம். ஜம்புதீர்த்தத்திற்குச் சமானமான வேறு தீர்த்தம்கிடையாது. ஞானபூமிக்கொப்பான க்ஷேத்திரமுமில்லை. ஜம்பூபதிக்குஸரியான வேறுதெய்வமுமில்லை. ஆகையால் அவரைஸேவிக்கவேண்டி இங்குவஸிக்கிறேன். பஞ்சாக்ஷரமென்கிற மந்திரத்திற்குச்சரியான வேறு மந்திரம்கிடையாது. சோளதேசத்திற்கு ஸரியான வேறு தேசமும்கிடையாது. அகிலாண்டதேவியின் சக்திக்கு ஸமமான சக்திவேறு தேவதைகளுக்கில்லை. ஆகையால் அந்த ஜம்புநாதரை ஸேவிக்க வேண்டி இங்கு வாஸம் பண்ணுகிறேன். வேதமார்க்கத்திற்கு ஸதிருசமான வேறுவழியில்லை. சிவனுக்கு என்னைப் போல் பக்தன் கிடையாது. ஸஹ்யபர்வதத்திலுண்டான காவேரிநதிக்கொப்பாக வேறு நதியில்லை. ஆகையாலிந்தப் புண்யக்ஷேத்திரத்தில் நான்வஸிக்கிறேன். ஐந்துகுரோசம் சுற்றளவுள்ள இந்த கஜாரண்யமானது மிகவும் புண்யபூமி. இதானது தன்னிடத்தில் வஸிக்கும் பக்ஷிகளுக்குக்கூட முக்தியையளிக்கின்றது. இதாக்கை எதற்காக எதிர்பார்க்க வேண்டும். இங்கு ஸகலபாபங்களைப் போக்கக்கூடிய ஒன்பது புண்யதீர்த்தங்களிருக்கின்றன. காவேரியானவள் பாதாளமார்க்கமாக இந்த கஜாரண்ய க்ஷேத்திரத்திற்கு வந்து பரமேசுவாருடைய பாதாரவிந்தங்களையடைந்து எப்பொழுதும் அந்தப்பிரபுவை ஸேவிக்கிருள். எவன் இந்த ஜம்புதீர்த்தத்தில் ஸோமவாரத்தில் ஸ்நானம்செய்து பஸ்ம ருத்திராக்ஷங்களை தரித்துக்கொண்டு ராத்திரி விருதமிருந்து ஜம்புநாதரை தர்சனம்செய்கிருனே அவனுக்கு மறுபிறப்பில்லை. இந்த க்ஷேத்திரத்தில் பத்திரங்களாலும் பழங்களாலும் தீர்த்தங்களாலும் ஈசனை அர்ச்சிக்கும் பக்தர்களைப்பார்த்து நமது ஐசுவர்யத்திற்கு நாசம் வந்துவிடுமோவென்று

பயங்கொண்ட இந்திரன் அப்ஸரஸ்களை அனுப்பி அவர்களை மோஹிக்கும்படி செய்கிறான். மேற்குமுகமாக விளங்கும் ஈசானருடைய கடாக்ஷமானது ஸூத்திரதாரராகவிருந்து கொண்டு இந்தமணல் மேட்டில் லக்ஷ்மியை நர்த்தனம்பண்ணச்சொல்லி எனக்குத் திருப்தியையுண்டுபண்ணவேண்டி ஸ்ரீரங்கம் என்கிறபட்டணமானது இந்த இடத்திலுண்டாகப்போகின்றது. இந்த க்ஷேத்திரத்திலுள்ள புண்யமான ஜம்புதீர்த்தத்தில் ஸ்நானம் செய்யப்போகிறேன். உடனே சிவனுடைய பாதபத்மத்தை யடைந்து அர்ச்சிக்கப்போகிறேன், புண்யமான பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்துக்கொண்டு வஸிக்கப்போகிறேன். ஜம்புவினுடைய பிரஸாதத்தையும் அடையப்போகின்றேன். ஹே ராக்ஷஸ! சிரேஷ்டரான விபீஷணர் பரமேசுவாருடைய பூஜையால் நித்யோத்ஸவத்தையும் சிறந்தஞானத்தையும், ஐச்வர்யத்தையும் பெற்று வெகுகாலம் பிரணவாகாரவிமானமாயிருக்கும் இந்த ரங்க நகரத்தில் லோகங்களுக்கு க்ஷேமத்தையுண்டுபண்ணுகிறவனாய்க்கொண்டு வஸிக்கப்போகிறேன். நீ போய் லங்கா ராஜ்யத்தைப் பரிபாலனம்பண்ணு. ஒவ்வோராண்டும் வந்து என்னையும் சிவனையும் பூஜைசெய். எங்களிடத்தில் வித்தியாஸமான புத்தியை வைக்காதே. எப்பொழுதும் எங்களை ஸ்மரித்துக்கொண்டிரு. எங்களுடைய நாமாக்களையும் சொல்லிக்கொண்டிரு. உன் வேலைக்காரர்களை ரக்ஷி. பிராமணர்களைப் பிரியத்துடன் பாதுகாக்கவேணும். புண்யகர்மாக்களையும் தேவாலயங்களையும் தூஷிக்கவேண்டாம். க்ஷேமமாக இருங்கள் என்று அந்த விபீஷணரை அடிக்கடி ஆசீர்வதித்துப் பிறகு மிகவும் பரிசுத்தமான கவேரனுடைய கன்னிகையான இந்தக் காவேரியானவள் ஜலப்பிரவாஹங்களால் என் மனதிற்கு அதிகமான திருப்தியையுண்டுபண்ணுகிறாள். ஸ்ரீ ரங்கக்ஷேத்திரத்திற்கும் கஜாரண்ய க்ஷேத்திரத்திற்கும் இரண்டுபார்சுவபாகங்களிலும் இந்தக்காவேரியானவள் முக்தா

ஹாரம்போல் விளங்குகிறாள். என்று ரங்கநாதர் சொல்லி முடித்தார்.

பதிமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 14.

चतुर्दशे रङ्गनाथः कावेरी चोळदेशयोः ।
माहात्म्यं शिवविष्णवोश्च क्षेत्राणां वैभवं जगौ ॥

இந்தப்பதினான்காவது அத்தியாயத்தில் ஸ்ரீரங்கநாதரானவர் காவேரீ, சோளதேசம், சிவக்ஷேத்திரம், விஷ்ணுக்ஷேத்திரம், இவைகளுடைய வைபவங்களைப்பற்றிக் கூறுகின்றார்.

ஸ்ரீ ரங்கநாதர் ஹே விபீஷண! பயங்கரமான விருக்ஷங்களால் பிரகாசிக்கும் கரையையுடையதாயும் ஸஹ்யபர்வதம் முதற்கொண்டு ஸமுத்திரக்கரைவரையில் இருகரைகளிலுமுள்ள ஜனங்களுடைய பாபங்களைப் போக்குகிறதான வாயுவால் எடுத்துக்கொண்டு வரப்பட்ட ஜலத்தையுடைய ஸஹ்யகன்யயைப்பார். பிர்ம்மாவினுடைய மனஸால் ஸிருஷ்டிக்கப்பட்ட கன்னிகையாயும் மிகவும் பாக்கியசாலியாயுமிருக்குமிவளை மறுபடியும் கவேரன் தன்புண்ய கர்மாக்களால் புத்திரியாகவடைந்தான். அப்பால் தவத்தால் பரிசுத்தமான சரீரத்தையுடைய இந்த கவேரபுத்திரியை அகஸ்தியமுனிவர் பத்னியாக அடைந்தார். அவ்விதமடைந்த அவர் அவளுக்கு ஸஹ்யபர்வதத்திலிருந்தும் நதியாக

ஓடும்படி அனுக்கிரகித்தார். நதியாயிருக்கும் உன்னையடைந்தவர்களுக்கு ஹே காவேரி! நீ இவ்வுலகில் புக்தியையும் பரலோகத்தில் முக்தியையும் கொடுக்கிறாய்.

இந்தக் காவேரியானவள் பூமியில் செல்வவந்தர்களுக்கு புத்திர ஸௌக்கியம் இவைகளைக்கொடுப்பவளும் புமான்களுக்கு மன்மதனுடைய சரீரசோபையையுண்டுபண்ணுகிறவளும் தன்பிரவாகத்தால் கரையிலிருக்கும் ஸ்திரீ புருஷர்களுக்கு அவர்களுடைய பாபங்களைப்போக்கி மறுஜன்மா இல்லாமல் செய்கிறவளும் ஸகலபயிர்களுக்கும் அபிவிருத்தியைச் செய்கிறவளாகவும் ஆகிறாள்.

ஐப்பசிமாசத்தில் இந்தக்காவேரியில் ஸ்நாநம் செய்கிறவர்களுக்கு சூர்யனுடைய தேஜஸ் போன்ற தேஜஸ்ஸையும் பொருள் புத்திரன் ஸுகம் முதலியவைகளையும் கொடுக்கிறவளாயும் சரீரத்தினுடைய முடிவில் பரமேசுவரூபத்தையும் இவள் கொடுக்கிறாள். தன்கரைகளிலிருக்கிற கொடி, விருக்ஷம் இவைகளுடைய புஷ்பங்களிலிருந்தும் பெருகிவிழுகிற மகரந்தத்தால் அதிகமான சுவையுடன்கூடிய ஜலத்தையுடையவளும் சிறந்த பண்டிதர்களாலும் பதிவிரதா ஸ்திரீகளாலும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட புண்யமான மகிமையையுடையவளும் சிறுவாய்க்கால் வழியாகச் சென்று நன்கு திருப்தி செய்து வைக்கப்பட்ட கரைக்குளமீபத்திலிருக்கிற சம்பாப்பயிர்களின் ஸமூகங்களால் அவமானம்பண்ணப்பட்ட புஞ்சை நிலங்களையுடையதாயும் வேதவாக்குகளால் நிறைந்த யாகசாலையின் சப்தம்போன்ற சப்தத்தையுடையவளாயும் சிலவிடத்தில் மேட்டிலும், சிலவிடத்தில் பள்ளத்திலும், சிலவிடத்தில் நேராகவும், சிலவிடத்தில் கோணலாகவும், சிலவிடத்தில் அகலமாகவும், சிலவிடத்தில் குறுகலாகவும் போகிறவளாயும் ஸ்ரீமஹாவிஷ்ணு, சந்திரசேகரர் இவ

ர்களுடைய சரணங்களைப் பூஜிப்பவர்களும் ஸம்ஸாரத்தி லிருந்தும் விலகியமனதையுடையவர்களும் உபநிஷத் விசாரம்செய்துகொண்டிருப்பவர்களுமான ஸந்யாஸிக் கூட்டங்களால் ஆங்காங்கு அலங்கரிக்கப்பட்ட மணல்திட்டுகளையுடையதாயும் தயிர், கரும்பு, பசுவின்நெய், தேங்காய், தேன், மாம்பழம், நாரங்கபலம், பிலாப்பழம் இவைகளுடைய ரஸங்களோடும் பரமேசுவரனுடைய சிரஸில்விளங்கும் சந்திரனுடைய அமிருதப்பிரவாகங்களோடும் சேர்ந்திருப்பதால் சுத்தி சுவை அதிகப்பெருக்கு இவைகளையுடையதாயும் சில விடத்தில் பொடிக்கல்லையுடையதாயும் சிலவிடத்தில் சேறுடன்கூடியதும் அதிகமணலையுடையதும் கரைகளில் வெளுப்பாயும் நீலமாயும் ஸ்படிகம்போல் ஸ்வச்சமாயும் நுரையுடன் கூடியதாயும் கறுப்பான பாசிகளையுடையதும் நீர்ப்பாம்புகளையுடையதும் தாமரை, நீலோத்பலம், ஆம்பல், ரக்தோத்பலம் இவைகளால் வாஸனையுடையதாகச் செய்யப்பட்டதாயும் நண்டு, ஆமை, மீன், முதலை, திமிங்கலம் முதலியபிராணிகளால் பயங்கரமாயும் மீனைக்கொத்தி ஸாப்பிடவேண்டிவந்திருக்கின்ற கொக்கு, நாணத்தான், ஹம்ஸம் மற்றுமுள்ளபாவைகள் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட கரைகளையுடையதும் கேசம், புருவங்கள், கண்கள், முகம், கண்டம், ஸ்தனம், நாபி இவைகள்போல் விளங்கும் பாசிக்கொத்து, அலைகள், மீன்கள், தாமரைமலர், சங்கம், சக்ரவாகபக்ஷிகள், மணல்மேடுகள் இவைகளால் தான் தேவதாஸ்வரூபமென்றிறதை நன்கு வெளிபிடுகிறவளாயும் மிகவும் புண்யக்ஷேத்திரங்களால் விளங்கும் தன் ஸமீபப்பிரதேசங்களையுடையவளும் விஸ்தாரமாகவிருக்கும் பல ஸ்நாநகட்டங்களில் விதிப்பிரகாரம் ஸ்நாநம்செய்யும் அநேக துவிஜர்களையுடையதுமான இந்தக்காவேரீ யாருக்குத்தான் ஸந்தோஷத்தையுண்டு பண்ணவில்லை. பின்னும் வெண்தாமரை மலரைக்குடையாகவும் காற்றில் அசையும் நாணல்புஷ்பங்களை சாமரமாகவும்

தாயாகவந்துவிழும் நதிகளை லகிகளாகவும் சிறுவாய்க்கால் வழியாய் கொடுக்கப்பட்ட ஜலத்தால் ஜீவிக்கும் மனிதர்களை ஸேனைகளாகவும் மதுரமான சப்தங்களோடுகூடிய பக்ஷிகளை க்காவல்காரர்களாகவும் கொண்ட இந்தக்காவேரியானவள் ஸமுத்திரராஜாவினுடைய முக்கியமான பட்டமகிஷியாயிரு ந்துகொண்டு சோளதேசத்தை நன்றாய் பாலிகாக்கிறாள். நா கை, வேம்பு, கதம்பம், மா, வாழை, பாக்கு, பாடலீ நாரத் தை, அர்ஜுநம், தென்னை, பிலா, ஆலே, ஆத்தி முதலா ன பலவிருக்ஷங்களால் இந்திரநீலமயமான சிலேகளால் கட் டப்பட்ட கரைகளையுடையது போலவும் ஜலத்தைப்பானம் பண்ணவேண்டுமென்கிற உத்லாகத்துடன் வந்திருக்கும் மேகங்களால் ஆச்ரயிக்கப்பட்டது போலவும் பிரகாசிக்கின் றது. இந்நதியானது ஸ்நாநத்திற்காக இறங்கியிருக்கும் ஸ்திரீ ஸமூகங்களால் ஸ்நாநம்செய்யும் ஸமயத்தில் உண்டு பண்ணப்பட்ட பெரிய அலைக்கூட்டங்களால்பிளக்கப்பட்ட கரையையுடையதாகவிருக்கின்றது. அந்தணசிகாமணிகள் இங்குவந்து விதிப்படி ஸ்நாநம்செய்து ராக்ஷஸர்களைக்கொல் லக்கூடிய வஜ்ராயுதம்போலிருக்கும் தீர்த்தங்களால் பகவா னான சூரியனின் பொருட்டு அர்க்கியப்பிரதானம் செய்து தங்களுடைய பாபங்களைப்போக்கி காயத்திரீ முதலான ம ஹாமந்திரங்களை ஜபித்து தேவதைகள், பிதுர்க்கள், ரிஷிகள் இவர்களுக்கும் தர்ப்பணாஞ்சலிகளால் திருப்தி செய்துவைக் கிறார்கள். காவேரியினுடைய பரிசுத்தமான புண்யதீர்த்தங் களால் விருத்தியடைகின்ற சம்பாப்பயிர்கள் அதிகமான தான்யங்களைக் கொடுக்கின்றன. ஜம்புநாதருடைய சிரஸில் சங்கதீர்த்தத்தால் அபிஷேகம் செய்தால் இந்திரனுடைய ராஜ்யலக்ஷ்மியானது தானாகவந்து அடையும். ஸுதீர் காவேரியினுடைய புண்யதீர்த்தபானத்தையும் சிவார்ச்சனை யாலேற்படும் ஸௌக்கியத்தையும் இந்த சோளபூமியையும் விட்டு லங்கைக்குப்போக எனக்குத் திருப்தியில்லை என்றுகூ

றும்விபீஷணரைப்பார்த்து கோதும்பை பயிறு, எள்ளு, நெல்முதலியதான்யங்கள் உற்பத்தியாகிற ஸ்தானமாயும் சிவன் விஷ்ணு இவர்களுடைய ஆலயங்களால் சூழப்பட்டதுமான இந்த சோளதேசத்தைப்பார். அகருக்கிராமத்தில் வரலிநாதரும் ரத்நகிரியில்கட்டககர்ஷணரும் நீபதீர்த்தத்தில் டம்பேசரும் ச்யாமபர்வதத்தில ஸ்ரீஹரியும் விளங்குகிறார்கள். மக்ஷிகாத்ரியில் மக்ஷிகேசவாரும் தார்விதீர்த்தத்தில் பூஜ்யான சிவனும் வனஸதீர்த்தத்தில் ஸ்ரீசம்புவும் லக்ஷிமிஆச்ரமத்தில் சூலியும் இருக்கிறார்கள் நீலிவநத்தில் நீலிவநேச்வாரும் சுவேதாத்ரியில் கமலாக்ஷரும் கொல்லிமலையில் கர்ப்பேசுவாரும் பாதாளேசுவாரும் நிசுளேயில் நிசுளேசுவாரும் திரிசிரபர்வதத்தில்(திருச்சியில்) அநாதியான மாதுருபூதேசுவாரும் குருவிணியில் சநபத்ரபதி என்று பெயர்கொண்ட சிவனும் பூலோகவைகுண்டமான இந்த ஸ்ரீரங்கத்தில் நானும் தயாஸ்வரூபமான கஜாரண்யத்தில் ஜடபூபதியான ஸ்ரீமான் பரமேசுவரனும் ஸ்ரீதடாக தீர்த்தமென்கிற லாலுகுடி க்ஷேத்திரத்தில் ஸர்வஇஷ்டங்களையும் கொடுக்கிறவரான ஸப்தரிஷீசுவாரும் தயாபுரத்தில் மூர்த்திலௌம்யரும் வடதீர்த்த க்ஷேத்திரத்தில் ஹரரும் ஸ்ரீபுரத்தில் நாராயணரும் ஜ்வாலாரண்யத்தில் அக்னிநர்த்தகரும் சந்திரரேகையில் அக்ஷவடசுந்தரர் என்று பெயர்பூண்ட சிவனும் கண்டியூரில் புஷ்பவநேச்வரரென்கிற சம்புவும் அந்த இடத்திலேயே ஹரருக்குச் சாபவிமோசனம் செய்தவரான விஷ்ணுவும் தஞ்சாநகரத்தில் தஞ்சகேசரென்று பெயர்கொண்ட சிவனும் நீலமேகர் என்கிற ஹரியும் பஞ்சநத க்ஷேத்திரத்தில் (திருவையாற்றில்) ஸ்ரீமானான சிவனும் ஸ்ரீப்பிரயாணமென்கிற திருப்பயணத்தில் சங்கரரும் அந்த தீர்த்தம் மத்தபுரீ, ஆதிவேதிகுடி, அன்னதீர்த்தம் சக்ரபுரீ இந்த க்ஷேத்திரங்களில் வெவ்வேறாக கௌரீநாதரும் அஜாதீர்த்த (ஆடுதுறையில்) த்திலும் பாபநாசத்திலும் ஹரிவஸிக்கிறார், கபிஸ்தலத்தில் ஜம்பு இருக்கின்றார், ஸ்ரீபார்

சுவ க்ஷேத்திரத்தில் ஹரி இருக்கின்றார். ஸ்ரீநித்யநடனம் என்கிற ஸ்தலத்தில் கருணாநிதியான சங்கரர் பிரகாசிக்கின்றார். அதற்குக்கிழக்கில்சூர்யதீர்த்தமென்று பெயர்கொண்ட பரிசுத்தமான புஷ்கரிணீ க்ஷேத்திரத்திலும் உத்தரகாவேரி என்கிற ஸ்தலத்திலும் ஸ்ரீசங்கரர் விளங்குகின்றார். கும்பகோணத்தில் கும்பேசுவரர், நாகேசுவரர், ஸோமநாதர் என்கிறபெயரால் சிவனும், சக்ரபாணி, சாரங்கபாணி என்கிற பெயருடன் விஷ்ணுவும் பிரகாசிக்கிறார்கள். மத்யார்ஜுனக்ஷேத்திரத்தில் பரமேசுவரன் வஸிக்கிறார். புஷ்யத்தில் அங்கு ஸ்நானம் செய்கிறவர்களுக்கு அவர் முக்தியைக்கொடுக்கிறார். அதற்கு கிழக்கில் திருக்கோடிகாவல் என்கிற க்ஷேத்திரத்தில் நாகேசுவரரும் சுவேதாரண்யம் ஸ்ரீமுத்ரை வியாக்கிரபுரம் இவைகளில் சங்கரரும் கௌரீமாயூரபுரம் என்கிற க்ஷேத்திரத்திலும் அச்சுதமங்கலம், நாகூர், நாகப்பட்டணம், ஸ்ரீவாம்சியம், திருவாரூர், திருவீழிமழலை இந்தக்ஷேத்திரங்களில் சந்திரசேகரர் விளங்குகிறார். இந்தஇடங்களில் ஹரியும் வஸிக்கிறார். ஜம்புநாதரும் அந்தந்த இடங்களிலும் தன்னுடைய அம்சங்களால் லோகத்தை ரக்ஷிக்க வேண்டி வாஸம்பண்ணுகிறார். கிருஷ்ணபுரியில் ஹரி என்கிற பெயருடனும் கிருஷ்ணமங்களத்தில் சௌரி என்கிற நாமாவாலும் மற்றுமுள்ள விஷ்ணு ஸ்தலங்களிலும் நானே லோகபாலனத்தின் பொருட்டு வஸிக்கிறேன். ஹே ராக்ஷஸ! சோளதேசங்களில் சிவனுக்கும், விஷ்ணுவிற்கும் கோடி ஸ்தானங்களிருக்கின்றன, காவேரியினுடைய இருகரைகளிலும் விசேஷமாக நாங்கள் வஸிக்கிறோம். ஹே விபீஷண! சோளதேசங்களில் அக்கிரகாரம் அதிகமிருக்கின்றன. அதில்வஸிக்கும் த்விஜர்கள் ஒற்றுமையுடையவர்கள். கிருஹஸ்தர்கள் வேதசாஸ்திரங்களுடைய தத்வார்த்தங்களை நன்கறிந்தவர்களாய்க்கொண்டு சுகமாக வஸித்துக்கொண்டிருக்கிறார்கள். பக்தியுடன் சிவவிஷ்ணு ஆராதனம்செய்கிறவர்களா

யும் வித்வான்களாயும் அதிதிகளிடம் பிரியமுள்ளவர்களும் யாகம் செய்தவர்களாயும் சிஷ்யர்களுக்கு சாஸ்திரார்த்தங்களை போதிக்கிறவர்களாயும் இருந்துகொண்டு வேதத்தில் கூறியபடி கர்மானுஷ்டானங்களை நடத்துகிறார்கள். ஹே ராக்ஷஸேந்திர! உன்னுடைய விமானத்தை இந்தவிடத்திலிருந்து எடுப்பது ஸாத்தியமில்லை. வீணில் பிரயாஸப்படவேண்டாம் ஒவ்வொரு வருடமும் ஸேவிப்பதற்காக இங்குவர வேண்டும். இப்பொழுது லங்கைக்குப் போய்சேரு. என்று மொழிந்த ஸ்ரீரங்கநாதருடைய வாக்கியத்தைக் கேட்ட விபீஷணன் ஸந்தோஷத்தையடைந்து அந்த அமிருதேசரை நமஸ்கரித்து ஆகாயத்திலிருக்கும் ரதத்தில் ஏறிக்கொண்டு மார்க்கமத்தியில் விளங்கும் ஸ்ரீராமநாதரையும் ஸேவித்துக்கொண்டு ஸேனைகளோடுகூடத் தன் பட்டணமான லங்கா நகரத்தையடைந்தான்.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 15.

अगस्त्यः पञ्चदशके प्रेषितः परमात्मना ।
जम्बुनाथं च तत्पत्नीमुपास्य मलयं गतः ॥

ஸ்ரீஉமாபதியால் மலயபர்வதத்திற்கு அனுப்பப்பட்ட அகஸ்தியமுனிவர் கஜாரண்யத்திற்கு வந்து ஜம்புநாதரையும் அவருடைய ஸ்திரீயான அகிலாண்டேசுவரியையும் ஆராதித்துவிட்டு மலயாசலம் சென்றார் என்று இந்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

மஹரிஷிகள் ஸூதரை நோக்கி துவைபாயனருடைய சிஷ்யரான ஹே ஸூத! உம்மால் அநேகப்பிரகா

ரமாகச் சொல்லப்பட்டதை எங்களாலும் பக்தி சிரத்தை யுடன் கேட்கப்பட்டது. அதாவது காவேரியினுடைய முக் கியமான விஷயமும் அவளுடைய தீரத்திலிருக்கின்ற க்ஷேத் திரங்களுடைய வைபவமும் மிகவும் சந்தோஷத்துடன் ரங் கநாதனென்று பெயர்வாய்ந்த ஸ்ரீவிஷ்ணுவால் சொல்லப்பட் டது. மேலும் ரங்கேசசிவபக்தியும் கஜாரண்யத்தினுடைய வைபவமும் சோளதேசங்களிருக்கின்ற அற்புதமான க்ஷேத் திரங்களுடைய கிரமமும் ஞானபூமியினுடைய மஹிமையை யும் உம்முடைய கருணையால் நன்கறிந்தோம். அதிலும் மிக வும் சிறந்ததாய் விளங்கும் அமிருதஸ்வரூபமான லிங்கத்தி னுடைய வைபவமும் தீர்த்தங்களுடைய மஹிமையும் அங் கு வஸிப்பவர்களுடைய தவத்தின் பலமும் அந்த இடத்தில் ஸகலமான விண்ணவர்களுக்கும் ஞானஸித்தி ஏற்பட்டதும் பிராகியான பரமேசுவாருடைய ஆக்ஞையால் பரதேவதை யான கௌரீ இங்குவந்து சேர்ந்ததும் அங்கு தேவதைக ளாலும் கருணாநிதியான சதுர்முகனாலும் தவம்செய்ததும் சம்புபத்நியான பார்வதியாலும் அங்கு தபஸ்செய்து ஈசுவா லிங்கஸ்தாபனம் பண்ணினதும் அந்தலிங்கத்திற்கு மிகவும் அழகான கண்களையுடைய அந்ததேவிசெய்த அர்ச்சனமும் ஸ்ரீசங்காருக்கு நிழலுக்காக ஜம்பூவிருக்ஷஸ்தாபனமும் ஈசு வான் இந்தஇடத்தில் ஸாந்நித்யமானதும் அவரிடம் தேவி தெரிவித்துக்கொண்டதும் பிறகு சங்காபத்நியால் கேட்கப் பட்ட ஸகலவரன்களையும் அவ்விதமே அளிக்கிறேனென்று கிரிசர் கொடுத்ததும் மற்றும் பலவிஷயங்களும் ஹே ஸூத மஹர்ஷே! உம்மால் கூறப்பட்டதை நாங்கள் கேட்டு தன் யர்களானோம். இன்னும் இந்த க்ஷேத்திரத்திற்கிருக்கும் மஹிமையையும் சொல்லவேண்டுமென்று முனிகணங்கள் பிரார்த்திக்கும்பொழுது அதை அங்கீகரித்து இந்தக்ஷேத் திரம் லிங்கம் தீர்த்தம் இவைகளின் முக்கியமான மஹிமை யை மறுபடியும் மொழிகின்றேன் சனிக்காதமனதுடன் கே

ளுங்களென்று சூதர் கூறுகின்றதாவது. ஐம்பதுகோடி விஸ் தீர்ணமுள்ள இந்த தக்ஷிணபூமியானது ஒருஸமயம் பரமேசு வரன் தன்பரிவாரங்களுடன் வடக்குப்பக்கத்தில் வஸிக்கும் பொழுது அந்தபாரத்தால் தெற்குப்பக்கம்பூமி உயரத்தூக் கிக்கொண்டது. அப்பொழுது அதைஸமமாகச் செய்யவே ண்டி மஹரிஷிகளும் தேவதைகளும இந்திரனுடன்கூட பிர் ம்மாவிடம்சென்று இதை அறிவித்தார்கள். பக்தி சிரத்தை யுடன் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு நிற்கும் அவர்களைப் பார்த்து நானும் வருகிறேன் நாமெல்லாரும் சேர்ந்து கை லாஸம்சென்று சங்கரிடம் விக்ஞாபனம் செய்துகொள்வதை த்தவிர வேறுகதியில்லை என்று அவர்களுடன் தானும் ஹம் ஸம்போன்ற விமானத்திலேறிக்கொண்டு கைலாஸத்திற்குப் புறப்பட்டார். சந்திரனுடைய காந்திஸம்பந்தத்தால் ஜலப் பிரவாகத்தைப் பெருகவிடுகிறதான சந்திரகாந்த சிலையையு டையதாயும் தேவக்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டதாயுமி ருக்கிற கைலாஸத்தைச் சதுர்முகன் பிரவேசித்து நந்திகேசு வாரால் ரக்ஷிக்கப்பட்டதுவாரதேசத்தையுடையதாயும் அதி க ஒளிகளால அலங்கரிக்கப்பட்டதும் பைரவர் சூலபாணி இவர்களால் காவல்காக்கப்பட்டதுமான ஸ்ரீபரமேசுவரனு டைய இருப்பிடத்தையடைந்து ஸகலஜகத்தினுடைய ஸிரு ஷ்டிஸ்திதிப்பிரளயம இவைகளுக்குக்காரணபூதரான சந்திர சேகரனை தேவதைகளுடன்கூட பத்மஸம்பவரான பிர்ம்மா நமஸ்கரித்தார். இந்த ஸமயத்தில் சிவனானவர் தானநேரில் சதுர்முகனைப்பார்த்து நீங்கள் எதற்காக வந்தீர்கள் என்று ஸகலதேவதைகளையும் வினவினர். உடனே வாணீபதியா னவர் தகிக்கப்பட்ட மன்மதனுடைய சரீரத்தையுடையவரு ம் எல்லா உலகங்களுக்கும் ஆதாரபூதருமான ஹே சங்கர! இந்த பூமியானது அதிகமேடாயும் அதிகப்பள்ளமாயும் இரு க்கின்றதே அதற்குயாது காரணமென்பதை எனக்கறிவிக்க வேண்டும். உமதாக்ஞையால் அகிலப்பிரபஞ்சஸிருஷ்டியும்

என்னுடையதாயிருக்கின்றது. ஆகையால் இந்தபூமி சலன த்தைத் தங்களிடம் தெரிவிக்கவேண்டி வந்தேன் என்று கூறும் எதிரில் நிற்கும் பிர்ம்மாவைப்பார்த்து ஈசுவரன் செப்புகின்றார். தேவதைகளுடன் நீர் இங்கு வந்தகாரணத்தை நான் அறிந்தேன். தெற்குதிக்கில் எனக்குச்சமானமான ஒரு முனி இருக்கின்றார் அவர் அங்கிருந்தால் பூமிக்கு சலனம ஏற்படாது என்றார். பிர்ம்மா ஸகல ஸுரர்களுக்கும் ஈசனுக வும் பார்வதிக்குப் பிரியநாயகராயுமிருக்கிற ஹே பகவன்! தங்களுக்கு ஸமமாக மூன்றுலகங்களிலும் ஒருவராவது என் னால் பார்க்கப்படவில்லை. தாங்கள் தான் அவ்விதமொரு வர் இருப்பதாக அறிகிறீர் என்று அறிவித்தார். உடனே கிரி சர் ஹே பிர்ம்மன்! என்னுடைய ஆக்ஞையால் தேவதைகள் அனைவரும் தங்கள் ஸ்தானத்திலிருக்கின்றார்கள். அவர்களு டைய ஸ்தானத்தில் கார்யமிருந்தால் அவர்களை ஏவுவது உசி தமாகும் என்றுகூறி பிர்ம்மாவையும் தேவர்களையும் பார்த்து தம்பக்கத்தில் வீற்றிருக்கும் அகஸ்தியமுனிவரையும் பார் த்துப் பின்வருமாறு கூறுகின்றார். ஹே அகஸ்தியமஹர் ஷே! நீர் எப்பொழுதும் என்னிடத்தில் வைக்கப்பட்ட சித் தத்தையுடையவராயிருப்பதால் கனத்திலும் பூஜ்யபாவத்தி லும் சக்தியிலும் தபஸ்ஸிலும் எனக்கு ஸமமாக ஆகின்றீர். இந்த வடக்குப் பக்கத்திலிருக்கும் பூமியானது என்னுடை ய அதிகமான பாரத்தால் கீழ் அமிழ்ந்கியிருக்கின்றது. அது ஸரியாய் மேடுபள்ளமில்லாமல் எங்கும் ஒரேமாதிரியாக இரு க்கவேண்டி நீர் தக்ஷிணதிக்கிற்குப் போகவேண்டும். அந்த திக்கில் மலயம் என்று பெயர்கொண்ட சிறந்த பர்வதமிருக் கின்றது. அது ஸகலபாபங்களையும் போக்குகிறதாயும் தேவ தைகளுக்கிருப்பிடமாயுமிருக்கின்றது. சுத்தமான மனதை யுடைய மகான்களுக்கு வாஸபூமியான இந்தகிரியிலிருந்தும் தாமபரபர்ணி என்கிற மஹாநதியானது எப்பொழுதும் பிர வாகமாக ஓடிக்கொண்டிருக்கின்றது. இதில் பலபுண்யதீர்த்

தங்களிருக்கின்றன. இந்ததீர்த்தங்களை தர்சனம்செய்தாலும் தொட்டாலும் பானம் செய்தாலும் ஸகலபாபங்களையும் நாசம்செய்கின்றன. இந்த இடத்தில் தேவதைகள் கின்னரர்கள் கந்தர்வர்கள், யக்ஷர்கள், வித்யாதரர்கள், உரகங்கள், ஸித்தர்கள், ஸாத்யர்கள், முதலானபலரும் எப்பொழுதும் வஸிக்கிறார்கள். சுத்தமான பிரதேசமாயும் சந்திரகாந்தசிலையில் பெருகும் தீர்த்தம்போல் பாவனமாயும் சீதளமாயுமிருக்கும் தீர்த்தத்தையுடையதும் சிறந்த புஷ்பங்களாலலங்கரிக்கப்பட்டதாயும் ஸகலப்பிராணிகளுக்கும் ஆச்ரயமாயுமிருக்கும் இந்த மலயபர்வதத்திற்கு நீர்செல்லும் என்று பகவான் ஆக்ஞை செய்தார். இவ்விதம் சொல்லிவிட்டு பரமேசுவரர் மௌனமாயிருக்கும்பொழுது அகஸ்தியமுனிவர் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு இவ்விதமறிவிக்கின்றார். ஹே ஸ்வாமின்! எந்த மார்க்கத்தினால் போகிறது ஸகல சிரேயஸ்ஸிற்கும் முக்கிய காரணமான உம்முடைய பாதஸேவையை விட்டு விட்டு எங்காகிலுமோரிடத்திற்குப் போவதில் என்மனதிற்குத்திருப்தியில்லை. ஆனாலும் லோகக்ஷேமத்தையுத்தேசித்து உங்களால் ஆக்ஞை செய்யப்பட்டிருக்கின்றது. அதை அனுஷ்டிக்காமல் என்னிஷ்டப்படி இங்கிருப்பதிலும் உத்ஸாகமில்லை என்று சொல்லிவிட்டு புறப்பட்டுப் போகவேண்டுமென்கிற எண்ணத்துடன் கிரிசருடைய சரணாரவிந்தங்களில் நமஸ்காரம் செய்தார். அந்தஸமயத்தில் பினாகியான பகவான் தவத்திற்கு இருப்பிடமாய் விளங்கும் அம்மஹரிஷியைப்பார்த்து மிகவும் ஸந்தோஷத்துடன் கூறுகின்றார். ஈசுவரர் என்னுடைய பார்சுவத்திலிருந்தும் போகிறவரான உமக்கு வழிநடுவில் தவங்களுக்கெல்லாம் சீக்கிரம் ஸித்தியையளிக்கும் அமிருதேசுவரர் என்று பிரஸித்தமான ஒரு லிங்கம் பிரகாசிக்கின்றது. அந்த அமிருதேசுவரலிங்கத்தை நீர் ஏகாக்ரமான சித்தத்தையுடையவராய் கொண்டு பூஜை செய்யும் அவ்விதம்செய்து அவரிடமிருந்து ஸ்திரமானஸித்

தியைப் பெற்று மிகவும் புண்யகரமான ஜம்புதீர்த்தத்திலும்
ஸ்நாநம்செய்து ஸௌக்கியமாகப் போகலாம். அதற்குப்
பிறகும் அநேகம் புண்யஸ்தானங்களிருக்கின்றன. அந்த
விடங்களில் விளங்கும் ஈசுவரமூர்த்திகளையும் பூஜித்துக்கொ
ண்டு சீக்கிரமாகப் போய்ச்சேரும் என்றும் நீரே எப்பொழு
ழுதும் தவம்செய்து கொண்டு மலயபர்வதத்தில் வஸித்துக்
கொண்டிரும் என்றும் அனுக்கிரகித்தனுப்பினார். பிறகு
தன்பக்கத்திலிருக்கும் பிரம்மா முதலான தேவர்களையும் அ
ளவிடவியலாத சக்தியையுடைய சங்கரர் நீங்களும் உங்களு
டைய ஸ்தானத்திற்குச் செல்லுங்களென்று அனுப்பிவிட்
டார். உடனே மஹாதேஜஸ்ஸையுடைய அகஸ்தியரும்
வேதமந்திரங்களைத் தியானம் செய்துகொண்டு சிஷ்யர்களு
டனும் ஸதிகளுக்குள் முந்தினவளாய் விளங்கும் பத்நியான
லோபாமுத்திரையுடனும் கைலாஸபர்வதத்திலிருந்தும் கிள
ம்பி ஆகாயகங்கையைத் தாண்டினார். விசேஷ தபோவலி
மையால் எவ்வித சரீரத்தையும் எடுத்துக்கொள்ளும் சக்தி
வாய்ந்த அம்முனிவர் தன் சரீரத்தை ஜ்யோதிர்மார்க்கத்திலி
ருந்தும் கீழ் இறங்கும்படிசெய்தார். அங்கிருந்தும் இறங்கும்
ஸமயத்திலேயே வேதங்கள்போல் பலசாகைகளுடன் விள
ங்கும் ஜம்பூவிருக்ஷத்தைக்கண்டார். உடனே அந்தத்த
போநிதியானவர் பரமேசுவரரால் கூறப்பட்ட வசனத்தை
மனதால் சிந்தித்துக்கொண்டு பார்த்தவுடனே அம்மரத்து
க்கு வந்தனம்செய்து அந்தப்பூமியையடைந்தார். முன்பக
வானால் உத்தமமான ஸ்தானமாக இதுதான் சொல்லப்பட்ட
தென்று தீர்மானித்து ஸஹ்யபர்வதத்திலிருந்து உண்டான
காவேரியைப்பார்த்து சுத்தராயிருந்தாலும் அந்தமஹர்ஷி
மறுபடியும் காவேரியில் ஸ்நாநம்செய்து சுத்தராயும் நிர்மல
மான சித்தத்தையுடையவராயுமிருந்துகொண்டு மஹர்ஷிக
ளோடும் சிஷ்யர்களோடும் சிவாலயத்திற்குச் சென்றார். அங்
குவிளங்கும் ஸகலமான புண்யதீர்த்தங்களைக் காட்டிலும் மிக

வும் சிறந்ததான ஜம்பூதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்தார். பிறகு அகஸ்தியரானவர் முன் பிர்ம்மாவினல் பூஜிக்கப்பட்டவரும் பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுக்கிறவருமான ஸ்ரீசங்க ஈரை நமஸ்கரித்து மூலஸ்வரூபமாயிருக்கும் ஜம்பூவிருக்ஷத் தையும் வந்தனம்செய்தார். பூர்வம் விசேஷமாகத் தபஸ் செய்த ஸ்ரீபார்வதியால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாயும் எப்பொழுதும் பிரகாசிக்கிற அமிருதாத்மாவான ஈசுவரரை அர்ச்சிக்க வேண்டுமென்று அதிகமான தபஸ்செய்தவரும் விசேஷசக்தி பொருந்தியவருமான அகஸ்தியர் கருதினார். உடனே ஸகலவேதஸ்வரூபரான அந்தமஹர்ஷி சிறந்தபுஷ் பங்களாலும் வேதோக்தங்களான மந்திரங்களாலும் காவேரி தீர்த்தங்களாலும் அபிஷேகம் அர்ச்சனம் முதலியவைகளை பக்தியுடன்செய்து ஜகத்துக்களுக்கு ஆதாரமான அந்தமூர் த்தியை பில்வங்களாலும் உயர்ந்த மலர்களாலும் அலங்கா ரம்செய்து துளசியால் அர்ச்சித்து ஷோடசோபசாரப்பூஜை செய்து பகவானுன திரியம்பகரை விதிப்பிரகாரம் நமஸ்காரம் செய்தார். அதற்கு பிற்பாடு அதிகபக்தியுடன் அகிலாண் டேசுவரி என்கிற லோகமாதாவையும் சாஸ்திரப்பிரகாரம் நன்கு பூஜித்துப் பிரதக்ஷிணவந்தனங்கள் செய்தார். பிறகு அகஸ்தியமஹரிஷி தேவியை ஸ்தோத்திரம் செய்கின்றார். ஸகலப்பிராணிகளுக்கும் தாயாராயிருந்துகொண்டு பரிபால னம் செய்கிறவளும் பிரளயகாலத்தில் ஸம்ஹாரம்பண்ணு கிறவளுமான ஸ்ரீ ஆதிசக்தியான அகிலாண்டேசுவரியை ஸேவிக்கிறேன். எவ்வளவு உக்கிரமான விபத்துக்களையும் நாசம்பண்ணுகிறவளும் ஸகல ஐசுவரியங்களையும் கொடுப்ப வளும் பக்தர்களை ரக்ஷிக்கிறவளுமான அகிலாண்டேசுவரி யை நமஸ்கரிக்கின்றேன். ஸகலலோகங்களுக்கும் ஆதார பூதமாயும் சங்கரருடைய பிரியபத்நியாயுமிருக்கிற ஹே அகி லாண்டேசுவரி! உன்னை எவர்கள் தியானம் செய்கின்றார் களோ அவர்கள் முக்தியையடைகிறார்கள். லக்ஷ்மீ, மஹா

விஷ்ணு இவர்களாலும் பிர்ம்மா ஸரஸ்வதி இவர்களாலும் ஸேவிக்கப்பட்ட சரணங்களையுடைய ஹே பரமேசுவரி! என க்கு அனுக்கிரகம்பண்ணு. என்று இந்தப்பிரகாரம் ஸ்ரீபார் வதி தேவியை அகஸ்தியர்போற்றி தெளிவான மனஸ்ஸை யுடையவராய்க்கொண்டு அமிருதேசுவாரையடைந்தார். உட னே ஹிமவானுடைய புத்திரியால் பூஜிக்கப்பட்டவரும் ஸர் வக்ஞருமான அந்தபகவானை அம்முனிவானவர் தன்னு டைய தபஸ் சீக்கிரம் ஸித்திக்கவேண்டியதின் பொருட்டு ஸ்தோத்திரம் பண்ணத்தொடங்கினர். இவ்வுலகத்திற்கு நீர் தான் சிருஷ்டிகர்த்தா; ரக்ஷிப்பவரும் நீரே; பிரளயகாலத்தில் அழிப்பவரும் நீரே; உமது மகிமையை யாரால் தான் வர்ணிக் கமுடியும். பிரம்மா, விஷ்ணு இவ்விருவர்களும் தங்களுடைய அம்சபூதர்கள்; அவர்களே உலகங்களைப் பரிபாலிக்கிறார்கள். அந்த மஹிமையும் தங்களுடையதே ஆகும். அமிருதமய மான ஸ்வரூபத்தையுடையவரும் ஸகல புருஷார்த்தஸித்திக் கும் காரணபூதராயும் சூலாயுதத்தைக்கையில் தரிப்பவரும் பரமாத்மாவான ஹாரின் பொருட்டு நமஸ்காரம். தவத்தி லிருக்கும் தேவதைகளுக்கு ஞானத்தையும் சிறந்த வித்யை களையும் கொடுப்பவரும் புண்யக்ஷேத்திரத்தில் விளங்குகிற வருமான அமிருதேசுவாருக்கு வந்தனம். பக்தர்களுக்கு பக் தியால் அடையத்தகுந்தவரும் யோகிகளுக்கு யோகத்தால் அடையத்தகுந்தவரும் ஸித்தர்களுக்கு ஞானத்தால் அடை யக்கூடியவருமான அமிருதஸ்வரூபரின் பொருட்டு நமஸ் காரம். அகிலாண்டேசுவரியினுடைய தபஸால் நன்கு அர் ச்சிக்கப்பட்டவரும் அகிலஜகத்திற்கும் பிரளயத்தையுண்டு பண்ணுகிறவருமான ஸ்தாணுவின்பொருட்டு நமஸ்காரம். மஹர்ஷிரூபமான விருக்ஷத்தின் நிழலால் ஸேவிக்கப்பட்ட வரும் சிறந்ததாயும் பெரிதாயுமிருக்கும் ஜம்புவிருக்ஷத்தி னுடைய அடியில் வஸிப்பவருமான லிங்கஸ்வரூபத்திற்கு நமஸ்காரம். ஜம்பூத்வீபத்தை முக்யமாகவுடையவரும்

ஜம்புமூலத்தில் வஸிப்பவருமான ஸ்ரீஜம்புநாதரின் பொரு ட்டு நமஸ்காரம். அணுவுக்கணுவாயும் பெரிதுக்கு பெரிதாயும் ஸகலஸித்தியையும் கொடுக்கிறவரும் தேஜோரூபமாயும் விளங்கும் அமிருதலிங்கத்தின்பொருட்டு நமஸ்காரம். இவ்விதம் பகவானை ஸ்தோத்திரம் செய்து அதிகமான ஸித்தி பெற்ற அகஸ்தியமுனிவர் அதிக ஸந்தோஷத்துடன் அந்த ஞானக்ஷேத்திரத்திலிருந்தும் புறப்பட்டார். மிகவும் சிறந்த தீர்த்தத்தாலும் அதிகமான தவத்தின் வலிமையாலும் அமிருதலிங்கம் அகிலாண்டேசுவரி இவர்களுடைய அனுக்கிரக விசேஷத்தாலும் அதிகதேஜஸ்ஸுடனும் சக்தியுடனும்கூடியவராய்க்கொண்டு தன்னுடைய ஜடையாகிற மின்னலால் பிரகாசிக்கும் ஆகாயமார்க்கத்தையுடையவராய்க் கொண்டு மலயபர்வதத்தை அம்முனிவர் அடைந்தார்.

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 16.

षोडशे वृत्रहा तप्त्वा तपो दोषस्य शान्तये ।
जम्बूपतिप्रसादेन सिद्धिमापेति भाषते ॥

இந்தப் பதினாறாவது அத்தியாயத்தில் இந்திரனானவன் விருத்தாஸுரனை வதம்செய்து அதினாலேற்பட்ட தோஷத்தை இந்த ஜம்புநாதரை ஆராதித்துப் போக்கடித்து இஷ்டஸித்தியைப் பெற்றான் என்று கூறப்படுகின்றது.

ரிஷிகள்: ஹே ஸூத! இதற்குமேலுள்ள சரித்திரத்தையும் எங்களுக்குச் சொல்லவேண்டும். இதைக்கேட்

கக்கேட்க எங்களுக்கு மிகவும் ஸந்தோஷமாயிருக்கிறது என்று பிரார்த்திக்கும் முனிகளுக்கு ஸூதர் மொழிகின்றார். ஹே மஹரிஷிகளே! ஜாக்கிரதையாய் கேட்கவேண்டும். இதற்குமேல் புண்யப்பிரதமாயும் ஞானத்தை விருத்தி செய்கிறதாயுமான சரித்திரம் வேறுகிடையாது. முன்னொரு ஸமயம் இந்திரனுக்கும் மிகவும் கெட்டவனான விருத்ராஸுரனுக்கும் யுத்தமானது ஏற்பட்டது. ஸுராதிபனான மகவானுக்கும் அஸுராதிபனான விருத்திரனுக்கும் யுத்தத்தில் விசேஷமானசக்தியும் ஒருவருக்கொருவர் கொல்லவேண்டுமென்கிற ஆக்ரகமும் அதிகமுண்டாயிற்று. இந்தமத்தியில் விருத்திராஸுரனால் அடிக்கப்பட்ட ஸஹஸ்ராக்ஷன் சினங்கொண்டு வஜ்ராயுதத்தால் அவனைக் கொல்லவேண்டி அதைப் பிரயோகம் பண்ணினான். மிகவும் உக்ரமான அந்த வஜ்ரத்தால் அடிக்கப்பட்ட அஸுரன் அறுபட்ட தலையையுடையவனாய்க்கொண்டு சீக்கிரம் பூமியில்விழுந்தான். விழுந்தக்ஷணத்தில் அந்த அஸுரனுடைய சரீரத்திலிருந்தும் பயங்கரமான சரீரத்துடனும் தீக்ஷ்ணமான கத்தியைக்கையில் தரித்துக்கொண்டும் உண்டான ராக்ஷஸன் மிகவும் குரூரனாயும் கத்தியைச்சுழற்றிக்கொண்டும் பெரிய இரும்புத்தடியையும் சுற்றிக்கொண்டு இந்த இந்திரனிடம் வந்தான். அவனுக்கு எதிரில் நின்றுகொண்டு அட்டஹாலம் செய்து கோபத்தால் சிவந்தமுழிகளால் பார்த்து ஸுரபதியை வதம்செய்வதில் முயற்சியுடன் சலிக்காமல் நிற்கும் அந்த ராக்ஷஸனைக்கண்டு பயந்து புண்யதீர்த்தங்களில் ஸ்நானம்செய்யவேண்டி மூவுலகங்களிலுமுள்ள ஸகல புண்யதீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்தும் அந்தராக்ஷஸன் இவனைவிடவில்லை. ஸகல இஷ்டஸித்திகளையும் கொடுக்கும் பலக்ஷேத்திரங்களில் வஸித்தும் பயன்படவில்லை. இதினால் அவமானத்தையடைந்து மிகவும் குரூரமான தவத்தையும் செய்தான். அப்பொழுதும் இந்த தேவராஜனை அவன் விடவில்லை. இதற்காக உத்தமதானங்கள்

தர்மங்கள் செய்தும் உபயோகப்படவில்லை. அற்பகாலம் இவ்விதம் கஷ்டப்பட்டு வஸித்துவந்தான். பிறகு ஒருஸமயம் பிரகஸ்பதியிடம் சென்றான். தன்னிடம்வரும் அமராதிபதியை பகவானான பிருகஸ்பதிபார்த்து தன் ஆஸனத்திலிருந்தும் சீக்கிரம் எழுந்திருந்து வருகிற இந்திரனைப்பிரிய மொழிகளுடன் எதிர்கொண்டழைத்து அர்க்யம் பாததீர்த்தம் முதலியவைகளால் அவனுக்கு மரியாதைசெய்து தனக்குண்டாயிருக்கும் அவமானத்தால் கலக்கமுள்ளவனாயிருக்கும் இந்திரனை சிறந்த ஆஸனத்திலமர்த்தினார். ஹே ஸுராதிப! மிகவும் பெருமைவாய்ந்த ஸுதர்மையைவிட்டு எங்களால் எதிர்பார்க்கப்படாத இவ்விதம் நேர்ந்த தங்களுடைய வரவிற்கு யாதுகாரணம்? என்றுவினவும் தேவாசார்யரை வஜ்ரி பக்தியுடன் நமஸ்கரித்து அருகில்வந்து தான்வந்த காரணத்தைப் பின்வருமாறு மொழிகின்றான். ஹே குரோ! சிறந்த ஞானசக்ஷுஸ்ஸினால் ஸகலமும் தங்களுக்குத் தெரிந்தவிஷயம். நீர் ஒருவர்தான் உலகில் ஸகலவேதங்களுடைய பொருளையும் கசடற அறிந்தவர். அவ்விதமிருந்தும் என்முகமாகவும் மறுபடியும் கூறவேண்டுமென்று விரும்புகிறீர். ஆகையால் என்னுடைய அவமானத்தையறிவிக்கிறேன். ஜகத்திற்குச் சத்துருவான விருத்தாஸுரனானவன் என்னால் போரில் வெல்லப்பட்டான். அவனுடைய காயத்திலிருந்தும் மிகவும் பயங்கரமான ஒருராக்ஷஸ் உண்டாயிற்று. அவனை ஜயிக்கவேண்டி புண்யதீர்த்தங்கள், க்ஷேத்திரங்கள் இவைகளில் ஸ்நாநம் பகவத்ஸேவை முதலானவைகள் செய்தும் எவ்வளவோ தானதர்மங்கள் செய்தும் அது என்னைவிடவில்லை. ஆகையால் இதற்குமேல் ஸ்வர்க்கமாகிற ராஜ்யத்திலிருக்கும் எனக்கு வித்வானான ஹே குரோ! நீர்தான் இதற்கோர் உபாயத்தை யறிவிக்கவேண்டும். என்று பிரார்த்திக்கும் தேவேசனுக்கு வாசஸ்பதி கூறுகின்றார். ஹே வாஸவ! அந்த ரக்ஷஸ்ஸை உன்னால் ஜயிப்பது சிரமமாயிருக்

தால் மிகவும் சிறந்த அறிவையுடைய நீ குருவென்கிற பெரு
மையை எனக்கு வைத்துக்கேட்கிறபடியால் அந்தாக்ஷல்
லை ஜயிப்பதற்கு ஒருஉபாயம் கூறுகின்றேன். அது உன
க்கும் திருப்தியாயிருந்தால் அவ்விதம் செய்யலாம். அதாவ
து தென்தேசத்தில் அதிகமான புண்யத்தைக் கொடுக்கிற
தும் மங்களகரமான தீர்த்தத்தால் பிரகாசிக்கிறதும் கவேர
னுடைய கன்யகை என்று பெயர்பூண்ட ஒருநதியானது
இருக்கின்றது. அந்நதியின் தென்கரையில் அநாதியாயும்
புண்யஸ்வரூபமாயும் மஹான்களான தபஸ்விகளுக்கும் கி
டைப்பதரிதாயும் பாவனமான ஒரு க்ஷேத்திரமிருக்கின்
றது. அந்த க்ஷேத்திரத்தில் தான் பிர்ம்மாவானவர் தனக்
கிருப்பிடமான தன் லோகத்தைவிட்டு தன் சித்தத்திற்கு
அதிகமான தெளிவையுண்டுபண்ணுகிறதென்று கருதி உக்ர
மான தவம் செய்தார். மேலும் அந்த க்ஷேத்திரத்தில் விள
ங்கும் உத்தமமான புண்யதீர்த்தத்தில் சுத்தமான மனதை
யுடைய சதுர்முகன் தபஸ்ஸால் ஸ்ரீசங்கரரை ஆராதித்தார்.
இந்த இடத்திலேயே ஸ்ரீபரமேசுவரனை ஆராதித்து மேன்
மையான ஸித்திகளைப்பெற்றுத் தம் பத்நீயுடன் வஸிக்கி
றார். முன்னொரு ஸமயத்தில் கைலாஸநாதரால் அனுப்பப்
பட்ட பார்வதியானவள் தன் சகிகளோடுகூட மிகவும் புண்
யக்ஷேத்திரமான இதையடைந்தாள். பூஜ்யமான இந்த
இடத்தில் தர்மாத்மாவான சதுர்முகன் தவம்செய்துகொண்
டிருந்தார். .மங்களஸ்வரூபமாயும் அழகாயும் விளங்கும் ஸர்
வமங்களை என்கிற பரதேவதையானவள் அங்குபோனவுடன்
அதிக பக்தியுடன் கூடிய பிர்ம்மாவால் அர்ச்சிக்கப்பட்டவ
ளாய்க்கொண்டு அமிருதேசுவரர் என்று பிரஸித்திபெற்ற
கிரிசரை விசேஷமாகப் பூஜித்தாள். ஏகாக்ரமான மனதால்
பர்த்தாவைப் பூஜித்து அவருடைய ஸான்னித்யத்தைப்
பெற்று ஒருவராலும் அடையமுடியாததான பதியினுடைய
ஸமானமான கௌரவத்தை யடைந்தாள். ஹே மகவர்!

ஸர்வலோகங்களிலும் பிரஸித்தமாயும் புண்யத்தைக்கொடுக்கிறதாயும் ஸகல ஸித்திகளையும் சீக்கிரமாக அளிக்கின்றதுமான க்ஷேத்திரம் அதைவிட்டால் வேறுகிடையாது. அதற்குப்போகாமல் எந்த விடத்திற்குப் போனாலும் இந்தா க்ஷல் விலகாது. ஆகையால் ஹே பிரபோ! நீர் அந்த க்ஷேத்திரத்திற்குச் சென்று தவம்செய்தால் இது நிவர்த்தியாகும் என்று சிறந்த அறிவையுடைய குரு தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். இந்தவசனத்தைக் கேட்டாக்ஷஸனும் மிகவும் மனவருத்தத்துடன் இனிநம்மால் ஒன்றும் செய்யமுடியாதென்று தீர்மானித்துக் கொண்டது. இவ்விதம் பிரகஸ்பதி பகவானுடைய உபதேசத்தைக் கேட்ட இந்திரன் அஞ்சலி பந்தத்துடன் அவரை நமஸ்கரித்து ஒன்றிலும் ஆஸ்தையில்லாதவனுய்க்கொண்டு தன்னுடைய நகரத்திலிருந்தும் வெளியில் புறப்பட்டான். நடுவழியில் இருக்கும் புண்யக்ஷேத்திரங்களிலும் ஸஞ்சாரம் செய்துகொண்டு ஜம்புநாதக்ஷேத்திரத்திற்கு ஒருகுரோச தூரத்தில் வரும்பொழுதே ராக்ஷஸ்னால் விடப்பட்டான். அந்தாக்ஷல் இந்திரனைவிட்டு விலகியவுடன் நிர்மலமான மனதையுடைய அமராதிபன் இந்தக்ஷேத்திரத்தையடைந்தான். இங்குவந்து வேதங்களைப்போல் பலசாகைகளையுடையதும் ஸாமநஸ்கூட்டங்களால் நிறைந்ததுமான ஜம்பூவிருக்ஷத்தைக்கண் ணுற்றான். அங்குவந்த இந்திரன் சுத்தனும் ஸந்தோஷத்தோடு கூடியமனதையுடையவனுயுமிருந்துகொண்டு பாவநமான ஜம்புதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து ஸகலதோஷங்களிலிருந்தும் விலகியவனும் ஒருவிதமான கவலையும் மனதிற்கில்லாமல் மிகவும் ஸ்வச்சமான சித்தத்தையுடையவருமான இவனை அதிகவலிமைவாய்ந்த இந்தப்பிர்ம்மஹத்தியானது விட்டுவிட்டது. உடனே சுத்தமானமனதையுடைய நாகாதிபன் சீக்கிரமாக ஸ்ரீபரமேசுவரருக்குப் பூஜை செய்யவேண்டுமென்று நினைத்தான். துளஸீ பில்வம் கமலம் கர்ணிகாரம் பாடலீ புன்னகை மல்லிகை சம்பகை மொகு

ழம்பூ முதலான வனத்திலுண்டான அனேகவித புஷ்பங்களால் தர்மாத்மாவான மகவான் அமிருதேசுவரரைப் பூஜித்தான். சந்தனம் அகரு கஸ்தூரி தேவதாரு கோரோசனம் பச்சைக்கற்பூரம்முதலான வாஸனைத்திரவியங்களால் மஹேசுவரருக்கு லேபனம்செய்து நல்லவாஸனையையுடைய புண்யதீர்த்தங்களால் அபிஷேகம்செய்து மிகவும் நிர்மலமாயும் அதிகவிலையுள்ளதாயும் அற்பக்காற்றால் பரந்து போகக்கூடியதுமான வஸ்திரங்களால் அலங்கரித்துச் சிறந்தரத்னங்களால் இழைக்கப்பட்ட அனேக ஆபரணங்களைச்சாற்றி வேதமந்திரங்களால் பலவாறாகத்துதித்து அநேகவியஞ்சனங்களுடன் கூடியவையும் நெய்யில்பக்வம் செய்யப்பட்டவைகளுமான பல நிவேதனங்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்து மற்றுமுள்ள அநேகவுபசாரங்களால் ஸ்ரீ அமிருதேசுவரரை ஆராதித்து அடியில்வருமாறு போற்றத்தொடங்கினார்.

## ॥ इन्द्रस्तुतिः ॥

ललाटलोचनज्वालानिर्दग्धस्मरविग्रहः ।
नमस्ते करिचर्मात्तवाससे कृत्तिवाससे ॥ १ ॥

यच्चार्मणे न पततश्चक्षुषी नीललोहित ।
तद्धाम भवतो नित्यं सदा पश्यन्ति सूरयः ॥ २ ॥

सृष्ट्यर्थं ब्रह्मरूपस्सन् स्थित्यर्थं जगतामपि ।
तवैव हर नित्योयमात्मा नारायणः परः ॥ ३ ॥

अमृतेश्वर भूतेश सृष्टिस्थित्यन्तकारण ।
यत्तव स्थानमनघं तद्विष्णोः परमं पदम् ॥ ४ ॥

भक्तान्तःकरणाम्भोजविकासनखरत्विषे ।
अमृतेश नमस्तेऽस्तु रुद्राय स्थिरधन्वने ॥ ५ ॥

जटामकुटनिष्यन्दगङ्गारिङ्गत्सुधांशवे ।
नमोऽमृतस्वरूपाय लिङ्गायामलतेजसे ॥ ६ ॥

अमराधिपकोटीरनिर्घृष्टाङ्घ्रिसरोरुह ।
स्वभक्तजनुषे तुभ्यं महसे महते नमः ॥ ७ ॥

दीव्यत्सुरासुरवधूसीमन्तमणिरश्मिभिः ।
नीराजितपदाब्जाय देवाय महते नमः ॥ ८ ॥

अखिलाण्डेश्वरीं देवीममृतेश्वरसुभ्रुवम् ।
जिष्णुरारभते स्तोतुं गृहीतमणिपादुकाम् ॥ ९ ॥

गुणानामणिमादीनामष्टाभिस्सिद्धिभिः शिवाम् ।
भजे प्रदात्रीं भक्तानां प्रदात्रीं तद्विषामपि ॥ १० ॥

ब्रह्मणा च सरस्वत्या स्तुतां पङ्कजया समम् ।
वैकुण्ठेन स्तुतां देवीं अखिलाण्डेश्वरीं भजे ॥ ११ ॥

भवाब्धिपारं नयतीं भवाङ्गनियतालयाम् ।
भवापायभयं हन्त्रीं भवानीमहमाश्रये ॥ १२ ॥

इति स्तुत्वा भगवतीमखिलाण्डेश्वरीं वृषा ।
ययौ च सिद्धिमनघां महदैश्वर्यदायिनीम् ॥ १३ ॥

*இந்திரன்: நெற்றிக்கண்ணிலுள்ள அக்னியால் தகிக்கப் பட்ட மன்மதனுடைய சரீரத்தையுடையவரும் கஜாஸுரனு டையதோலை வஸ்திரமாக தரிப்பவருமான ஹே அமிருதே*

சுவா! உமக்கு வந்தனம். ஹே நீலலோஹித! எதை தோல்ம யங்களான இந்த நேத்திரங்கள் அறியவில்லையோ அவ்வித மஹிமைபெற்ற உம்முடைய சிறந்ததான தேஜஸ்லை வித் வான்கள் எப்பொழுதும் பார்க்கிறார்கள். ஹே ஈச! உம் முடைய நித்யமான ஆத்மாவானது உலகங்களை சிருஷ்டிக்க வேண்டி பிர்மமாவினுடைய ரூபத்தை தரிக்கின்றது. ரக்ஷிப் பதற்காக சிரேஷ்டரான நாராயணருடைய ஸ்வரூபமாக ஆகின்றது. ஹே அமிருதேசுவா! சிருஷ்டிஸ்திதிநாசம் இவைகளுக்குக் காரணபூதரான ஹே பூதேச! உம்முடைய உத்தமமான யாதொரு ஸ்தானத்தை விஷ்ணுவினுடைய பரமபதமான வைகுண்டமாகக் கூறுகின்றார்கள். பக்தர் களுடைய சித்தமாகிற தாமரைமலருக்கு ரவியாயும் பழு தில்லாத சிரேஷ்டமான தனுஸ்ஸையுடையவருமான ஹே அமிருதேசுவா! உமக்கு நமஸ்காரம். ஜடையால் விளங்கும் சிரஸ்ஸிலிருந்தும் பெருகிவருகிற கங்கையில் சலிக்கிறதான சந்திரனையுடையவரும் சுத்தமான தேஜோரூபமாயும் லிங்க ரூபமாயுமிருக்கும் அமிருதேசுவாரின் பொருட்டு நமஸ்கா ரம். இந்திரனுடைய கிரீடத்தால் உரையப்பட்டிருக்கிற சாணும்புஜத்தையுடையவரும் தன்னுடைய பக்தர்களிட மிருந்து உண்டாகிறவாயும் பூஜ்பராயும் விளங்கும் தேஜோ ரூபமான உமக்கு நமஸ்காரம். பிரகாசிக்கின்ற தேவா ஸுராஸ்திரீகளுடைய சிரோபூஷணமான ரத்னகிரணங்களால் ஹார்த்தி சுத்தப்பட்ட பதகமலங்களையுடைய தேவசிரேஷ் டரான உமக்கு நமஸ்காரம். என்று துதித்துப் பிறகு அமிருதேச்வாருடைய பத்நியாயும் ரத்னமயமான பாது கைகளைத் தரிப்பவளும் அகிலாண்டேசுவரி என்றுபெயர் பெற்றவளுமான ஸ்ரீபாதேவதையைப் போற்றுகின்றார். அணிமாதிகளான எட்டுகுணங்களுடைய ஸித்திபெற்றவளு ம், சத்துருக்களை நாசம்பண்ணுகிறவளும், பக்தர்களுக்கிஷ் டத்தையளிப்பவளுமான பார்வதீ தேவிக்கு வந்தனம். பார

நீயோடுகூட பிர்ம்மாவாலும் லக்ஷ்மியுடன் மஹாவிஷ்ணு வாலும் துதிக்கப்பட்டவளான அகிலாண்டேசுவரி என்கிற சிவையை நமஸ்கரிக்கின்றேன். பக்தர்களை ஸம்ஸாரமென் கிற கடலிலிருந்தும் கரையேற்றுகிறவளாயும் பரமேசுவரரு டைய சரீரத்தில் எப்பொழுதும் வஸிப்பவளுமான ஸ்ரீபவா நியை பவபயத்தைப் போக்கவேண்டி நான் சரணமாகவடை கின்றேன். இவ்விதம் இந்திரன் பூஜ்யையான அகிலாண் டேசுவரியை ஸ்தோத்திரம்செய்து அதிகமான ஐசுவர்யங் களைக்கொடுக்கும் ஸித்தியை ஸ்ரீபரதேவதையின் அனுக்கிர கத்தால் அடைந்தான். 33 கோடி தேவதைகளுக்கு அதி பதியாயும் ஸ்வர்க்கத்திற்கு ராஜாவாயுமிருக்கும் மஹேந்தி ரன் அப்பொழுது அதிகமான ஆனந்தக்கடலிலமிழ்ந்தான். திக்பதிகளுக்கெல்லாம் நாதனும் சுத்தமான புத்தியையு டையவனுமான நாகராஜன் இந்தப்பிரகாரம் பிரகஸ்பதி பக வானுடைய வசனத்தைக்கேட்டு புண்யமான கஜாரண்யத் தையடைந்து அமிருதமயமான சரீரத்தையுடைய பசுபதி யையும் இவருடைய பத்நியாயும் ஹிமவானுடைய புத்திரி யாயும் விளங்கும் லோகமாதாவையும் நன்குபூஜித்து ரக்ஷஸ் ஸிடமிருந்துண்டான பயத்தைப்போக்கி இஷ்டஸித்தியைப் பெற்று தன்ராஜ்யத்தையடைந்தான்.

பதினாறுவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 17.

अथ वै सप्तदशके श्वेतवेतण्डतल्पजः ।
पूजयामास सर्वेशं प्रथितं येन तद्वनम् ॥

எதினால் அந்த க்ஷேத்திரத்திற்கு கஜாரண்ய க்ஷேத்தி

ரமென்று பிரஸித்தியேற்பட்டதோ வெளுப்புவர்ணமான
அந்தயானை சிரேஷ்டமானது ஸர்வேசுவரனைப்பூஜைசெய்
ததென்று இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றது.

வியாஸ சிஷ்யராயும் அறிவாளிகளுக்குள் சிறந்த
வராயும் விளங்கும் ஹே ஸூதமஹரிஷியே! உலக
சுகத்தைப் பெறுவதற்கும் மோக்ஷத்தையடைவதற்கும்
வெவ்வேறுஸ்தானமாக இல்லாமல் ஒரேஸ்தானத்தில் இவ்
விரண்டையும் அடையக்கூடிய க்ஷேத்திரம் இருக்கின்றதா?
அவ்விதமிருந்தால் அதைத் தயவுசெய்து எங்களுக்குப் போ
திக்கவேண்டுமென்று முனிவர்கள் கேட்டுக் கொண்டதை
யனுஸரித்து சூதர் நீங்கள் கேட்டுக்கொண்டபடி உத்தம
மான ஸ்தானமிருக்கின்றது. அதைக்கூறுகின்றேன்; கவன
மாய்க் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார்.

பூமியில்ஓடும் வேறான ஸ்வர்க்ககங்கைபோலும் சோள
தேசத்தில் பிரகாசிக்கிறதும் நதிகளுக்குப்பதியான சமுத்தி
ரத்திற்கு பார்யையாயும் எப்பொழுதும ஓடுகிற பிரவாகத்
தையுடையதாயும் தொட்டமாத்திரத்தால் பரிசுத்தம்பண்ண
க்கூடிய தீர்த்தத்தையுடையதும் ஸ்வச்சமாயும் உத்தமமான
புண்யதீர்த்தங்களுக்கெல்லாம் முதன்மையானதுமான ஸஹ்
ய பர்வதத்திலுண்டான காவேரீஎன்கிற யாதொரு நதியா
னது விளங்குகின்றதோ அதற்குத் தென்கரையில் சம்பாப்
பயிர்களாலும் முத்துக்களாலும் சுத்தமான மணல்களாலும்
சந்திரத்வீபம்போல் விளங்கும் சந்திரதீர்த்தமென்று பிரஸித்
தமான ஒருஸ்தலமிருக்கின்றது. அந்த இடத்தில் ஆகாயத்
தையளாவிநிற்கும் அழகான ஒரு அரண்யமிருக்கின்றது.
நன்றாய் விருத்தியடைந்த ஜம்பூவிருக்ஷங்களோடு கூடிய
தும் யோகிகளுக்கு யோகமார்க்கம்போலும் ஸகலவேதங்
களையும் நன்கறிந்தவர்களும அழகான மரவுரியைத்தரிப்
பவர்களுமான தாபஸர்களாலும் அதிகநிழலுடன்கூடியவை

களான மரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதாயும் தேவதைகளுக்குச் சுகத்தைக்கொடுக்கின்றதாயும் அதிக விஸ்தாரமான இந்தப்பூமண்டலத்தைப் பார்க்கவேண்டுமென்று இச்சையுடன்வந்த ஸ்வர்க்கலோகம்போலும் பாவைகளாலும் மிருகங்களாலும் மற்றுமுள்ள ஸகலப்பிராணிகளாலும் சூழப்பட்டதும் ஓரிடத்தில் சூரியன் குதிரைகளுக்குச் சிரமபரிகாரம் செய்துவைக்க வேண்டுமென்கிற எண்ணங்கொண்டது போல் சூர்யமண்டலத்திற்கு மேல் போய்நிற்கும் சிலவிருக்ஷங்களையுடையதாயுமான இந்த க்ஷேத்திரத்தில் ஸாக்ஷாத் பார்வதீதேவியால் அர்ச்சிக்கப்பட்டிருக்கிறதாயும் சுத்தமான தீர்த்தஸ்வரூபமாயும் வியாபகராயுமிருக்கும் உமாபதிக்கு மிகவும் பிரியமாயும் நிழலைக்கொடுக்கிறதாயும் வெளுப்புநிறமுமான ஒருஜம்பூ விருக்ஷமானது இருக்கின்றது. அதானது நக்ஷத்திரங்கள் போல் பிரகாசிக்கும் தன்னுடைய பழங்களால் இரவில் விருத்தியடையும் சங்கருடைய சிரஸ்ஸிலிருக்கிற சந்திரனுக்குப் பரிவாரங்களான நக்ஷத்திரங்களை அதிக விருத்திசெய்கின்றது. தன்கிளைகளின் நுனிகளால் ஆகாயகங்கையை ஹம்ஸபக்ஷிகளோடு கூடினதாகச் செய்கின்றதும் சிகப்புவர்ணங்களான தளிர்களாலும் நுனிகளாலும் ஸகலதிக்குகளையும் மறைக்கிறதாயும் ஆகாயத்திலும் வெகுதூரம்போய் சூரியனுடைய குதிரைகளுக்குச் சிரமத்தைப் போக்குகின்றதும் தன்னுடைய பலரஸங்களின் பெருக்கால் ஒவ்வொருதிக்கிலும் ஒரு நதியையுண்டுபண்ணுகிறதாயும் எப்பொழுதும் தன்கிளைகளால் ஆகாசகங்கையிலிருப்பதால் ஆகாசகங்கையில் விளையாடவேண்டுமென்கிற விருப்பமில்லாததாயும் ஜம்பூத்வீபமென்கிற இந்தஜகத்திற்கு ஜயஸ்தம்பம் போலவும் ஜம்புநாதர், ஜம்புதீர்த்தம், ஜம்பூத்வீபம்என்று நாதர் தீர்த்தம் த்வீபம் என்கிற இம்மூன்றிலும் தன் பெயரால் வியாபித்ததும் வேதத்தைப்போல் பல சாகைகளால் சிறந்ததான இந்த ஜம்பூவிருக்ஷத்தினுடைய அடியில் இருக்

கும் திண்ணையில் சூலாயுதத்தோடு கூடியவரான சங்கரர் எப்பொழுதும் வஸிக்கிறார். அந்த அரண்யத்தில் ஸஞ்சாரஞ்செய்கிற ஒரு வெளுப்பான யானையானது முன்ஜன்மாவில் செய்யப்பட்ட தபோவிசேஷத்தால் சுத்தமாயிருந்துகொண்டு ஒருஸமயம் இந்த ஜம்புநாதரைப் பார்த்தது. எந்தப் பிரபுவானவர் தவத்தால் ஸ்வாதீனமான மனதையுடையவர்களும் முயற்சியுடையவர்களுமான யதிசிரேஷ்டர்களால் தேடப்படுகிறாரோ, எந்தப்பிரபுவை அவரவர்களுடைய நடத்தைக்குத் தக்கவாறு பலவிதங்களான உபாதிகளோடும் குணங்களோடும் கூடினவராகக் கருதுகின்றார்களோ, அக்ஞஜனங்கள் எவரை விகிருதியாக பாவிக்கிறார்களோ, அறிவாளிகள் விகாரமற்றவராகக் கூறுகின்றார்களோ, ஸகல ஜோதிஸ்வரூபமாயும் தபோரூபமாயும் ஸகலபுத்திகளுடைய வாஸநாரூபமாயும் விளங்கும் யாதொரு பகவானை எல்லாவித்யைகளும் உபநிஷதங்களுடைய வாக்குகளும் அடைகின்றனவோ, ஸகலசப்தஸ்வரூபியாயும் பெருத்தவர், இளைத்தவர், உயரம், குட்டை, கறுப்பு, சிகப்பு, என்கிற ஒருவியவகாரத்திற்கும் விஷயமில்லாதவராயும் பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாயம், சூர்யன், சந்திரன், புருஷன் என்கிற அஷ்டமூர்த்திஸ்வரூபமாயும் ஸாங்கியயோகம் நான்கு வேதங்கள் சிவவிஷ்ணுஸ்வரூபங்களை போதிக்கும் ஆகமசாஸ்திரங்கள் இவைகளிலெல்லாம் பிரகாசிக்கின்றவரும் அத்யயனம்பண்ணுகிறவர்களால் சாஸ்திரங்களில் விசாரிக்கப்படும் அர்த்தரூபமாயும் ஜகத்தாகிற சக்கிரத்திற்கு மத்தியிலிருக்கும் ரத்னமயமான அச்சுப்போலவும் பிர்ம்மா, விஷ்ணு முதலானவர்களால் ஆச்சரியப்படும்படியான ஜ்யோதிஸ்வரூபமாயும் விளங்கும் எந்த ஈசனை அடிவணங்கி அவனுக்கிரகத்தால் ஆதிசேஷன் பாதாளலோகத்திற்கு அரசனாக இருக்கிறானோ, எவர் அர்ஜுனனுக்கு அவன் சத்துருக்களை ஜயிக்கவேண்டி அனுக்கிரகம் செய்தாரோ, மன்மதன் எவருடைய நெற்றிக்கண்ணாகிற யக்ஞகுண்டத்

தில் தன்சரீரமாகிற ஹவிஸ்ஸை ஹோமம் பண்ணினாரோ, எந்த சிவன் யமனுடைய நிர்ப்பந்தத்திற்கு அகப்படாமல் ஜீவிக்கவேண்டுமென்கிற அவாவால் தன்னைச் சரணாகதியாக வடைந்த மார்க்கண்டேயரைக் கருணையால் சிரஞ்சீவியாகச் செய்தாரோ, எவர் தன்மாமனாரான தக்ஷப்பிரஜாபதியால் அமங்களமாக ஆரம்பிக்கப்பட்ட யாகத்தை தன்னாலனுப்பப் பட்ட வீரபத்திரரால் நடைபெறாமல் தடுத்துவிட்டாரோ, எந்த மஹேசன் தாமரைமலர்போன்ற நேத்திரங்களைப்பக்தி சிரத்தையுடன் பூஜித்தபக்தரான விஷ்ணுவுக்கு அவர் சத்து ருக்களுடைய பிராணனை அபகரிக்கும் சக்திபெற்ற ஸுதர் சனம் என்கிற சக்ராயுதத்தைக் கொடுத்தாரோ, எந்தகிரிசர் தன்புத்திரியினிடம் கெட்ட காரியத்தைச்செய்த பிர்ம்மாவி னுடைய ஐந்தாவது முகத்தை அறுத்துவிட்டுச் சதுர்முக னாகச் செய்தாரோ, எந்த கௌரீநாதர் தேவஸ்திரீகளுக்கு முக்யமான பதி என்கிற ஆபரணம் நிலைக்கவேண்டித் தானாக த்தன்கழுத்தில் காளகூட விஷத்தை ஆபரணமாகவணிந்தா ரோ, எந்த உமாகாந்தர் தன்புஜபலத்தால் ஸகலஜகத்திற்கு ம் உபத்திரவத்தைச் செய்துவந்த ஜலந்தரனுடைய கழுத்தை யறுத்து முண்டமாக நிறுத்தினாரோ, எவர் தன்னையடைந்த பக்தர்களுடைய பாபமூட்டைகளை உடனே அபகரித்துவிடு கிறாரோ, அவ்விதமகிமையை பெற்ற ஸர்வேசுவரரை இந்த யானையானது பார்த்தது. எல்லாவற்றையும் நன்கறிந்த ஜம் பூபதியும் இதைப்பார்த்து இதின் நடத்தையையும் அறிந்து கொண்டார். ஸூதர்: ஹே முனிவர்களே! இந்த யானையின் விருத்தாந்தத்தை அற்பம் கூறுகின்றேன்; கவனமாய்க் கே ளுங்கள். இந்த கஜாரண்யத்திற்கு வடக்குபாகத்தில் சுவே தாரண்யமென்று பெயர்கொண்ட பெரிதான ஒரு பர்வத மிருக்கின்றது. அதற்குப்பக்கத்தில் பத்மபுஷ்கரிணீ என்று பெயர்பெற்ற மிகவும் சுத்தமான ஒரு தீர்த்தமிருக்கின்றது. அது எப்பொழுதும் பிரகாசிக்கின்ற பத்மம், கல்ஹாரம்,

நீலோத்பலம் முதலான புஷ்பங்களையுடையது. வெண்தாமரைமலர்களிலிருந்தும் பெருகும் மகரந்தத்தின் வாஸனையால் சூழப்பட்ட திக்குகளையுடையது. எப்பொழுதும் இடைவிடாமல் பெருகும் மதுவை அருந்துவதில் ஆசைகொண்ட வண்டுகளையுடையது.

அதிகமான வாயுவால் அசைக்கப்பட்ட கரையிலிருக்கும் தாழைமரங்களிலுள்ள புஷ்பங்களுடைய தூளிகளால் ஒவ்வொருநாளும் திக்குகளில் வாஸனையையுண்டுபண்ணுகிறதாயும் மஹரிஷிகளுடைய பாலகர்களால் சுத்தம்பண்ணப்படும் வல்கலங்களால் சிகப்பாயும் விளங்குகின்றது. இவ்விதமிருக்கும் அந்தபுஷ்கரிணியினுடைய கரையில் விஸ்தாரமாயும் அநேக மரங்களால் சூழப்பட்டுமிருக்கும் வனத்தில் சாபத்தால் வந்திதான ஒருகஜசிரேஷ்டமானது ஸஞ்சாரம் செய்துக்கொண்டிருந்தது. துஷ்டர்களுக்குத் தென்படாததாயும் மஹான்களுக்கு ஸாதுவாயுமிருக்கும் அந்தயானையானது அமிருதேசுவரரைப் பார்த்து மிகவும் ஆனந்தமடைந்தது. தன்னுடைய துதிக்கையைச் சுருட்டி சிரஸ்ஸில்வைத்துக்கொண்டு பகவானுக்கு வணங்கிற்று. துதிக்கையைச்சுருட்டித் தொங்கவிட்டுக்கொண்டு அஞ்சலிபந்தம் செய்தது. பிறகு சுருதிவாக்குகளுக்கெட்டாததாயும் தன்நேத்திரங்களுக்குப் பார்க்கக்கூடியதாயும் விளங்கும் அந்த ஈசனுக்கு அர்ச்சனை செய்யவேண்டுமென்று நினைத்தது. உடனே சந்திரதீர்த்தமென்கிற புண்யஜலத்தில் முந்தித்தான் ஸ்நானம் செய்து தாமரைமலரில் கொண்டுவரப்பட்ட தீர்த்தங்களால் புராரியை அபிஷேகம் செய்தது. சிறந்த வாஸனையையுடைய புஷ்பரேணுக்களால் சந்தனபிஷேகம் செய்தது. வெளுப்பு, சிகப்பு, கறுப்பு முதலான பலவர்ணங்களையுடைய ஸுகந்தங்களான பலபுஷ்பங்களால் அந்தயானையானது பரமேசுவரனுடைய சிரஸ்ஸைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்படும்படி

அலங்காரம் செய்தது. பின்னும் காட்டு அக்கினியைக்கொண்டுவந்து அதில் அகரு சந்தனம் இவைகளைப்போட்டு சங்காருக்குத் தூபம்காண்பிவித்தது. ஸர்ப்பங்களுடைய சிரஸ்ஸிலிருக்கும் ரத்னங்களைக்கொண்டுவந்து அவைகளின் காந்திகளால் அவருக்குத்தீபம் காண்பிவித்தது. பிறகு நன்கு பழுத்தவைகளாயும் அமிருதம்போல் சுவைபொருந்தியவையுமான அந்தவனத்திலுள்ள சிறந்தகனிகளைப் பகவானுக்கு நிவேதநம் செய்தது. மறுபடியும் தாமரைமலரில் தீர்த்தத்தைநிரப்பி பானீயத்திற்கும் அர்க்கியாசமனத்திற்கும் உபயோகப்படுத்தும்படி பார்வதீசருக்கு எதிரில்வைத்தது. காம்புடன்கூடிய பத்மத்தைக் கொடையாகப் பிடித்தது. நாணல் புஷ்பங்களால் சந்திரசேகருக்குச் சாமரம்போட்டது. சம்புவினுடைய சாயை தன்னிடம் ஸம்பந்தப்படவேண்டி யோகிபோல் மிகவும் நிர்மலமாய் விளங்கும் தன்மனதை ஈசனுக்குக்கண்ணாடியாகக் காண்பிவித்தது. பிற்பாடு சந்திரன்போல் வெளுத்ததாயும் மங்களரூபமாயும் பெரிதாயுமிருக்கும் தன்சரீரத்தால் மேருபர்வதம்போல் பிரகாசிக்கும் ஈசனைப்பிரதக்ஷிணம் செய்தது. அவ்விதம் பிரதக்ஷிணம்செய்து மிகவும் பக்தியுடன்கூடிய அந்த யானையானது பகவானை நமஸ்கரித்து தன் கன்னப்பிரதேசத்திலிருந்து சப்திக்கும் வண்டுகளுடைய சப்தத்தால் ஸ்தோத்திரம் செய்து மறுபடியும் வணங்கின சிரஸால் கிரிசரை வந்தனம்செய்தது. இந்தப் பிரகாரம் பரமஸந்தோஷத்துடன் ஈசனுக்குப் பூஜாவிதியை முடித்துவிட்டுத் திரும்பி வந்துவிட்டது. ஒவ்வொருதினமும் அந்தயானை மிகவும் நிர்மலமாய் விளங்கும் புஷ்கரிணியினுடைய தீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து சிறந்த வாஸனை பொருந்திய மலர்ந்த அநேக புஷ்பங்களைத் தன் துதிக்கையால் எடுத்துக்கொண்டு உத்தமமான இந்தஜம்பூக்ஷேத்திரத்திற்குவந்து துதிக்கையில் தீர்த்தம் கொண்டுவந்து பகவா

னுக்கு அபிஷேகம்செய்து புஷ்பங்களால் அர்ச்சித்து நமஸ்காரம் பண்ணிவிட்டுத் தானிருக்கும் வனத்திற்குச் சென்றுவிடுகிறது. இவ்விதம் பலவருஷங்கள் அந்தகஜம் மஹேசுவரரை ஆராதித்துக் கொண்டுவந்தது. பிர்ம்மா, விஷ்ணு இவர்கள் வஸிக்கப்பட்ட ஸ்தானமானது எப்படி சிறந்த கர்மாக்களால் துதிக்கப்படுமோ அவ்விதமே ஜம்பூத்வீபத்தில் பிரகாசிக்கும் ஜம்புநாதருக்குப் பிரியமான இந்தவனமும் கரிவனம் (அதாவது கஜாரண்யம்) என்று பிரஸித்தியடைந்தது. இந்தமாதிரி அந்தயானையானது ஒருக்ஷணங்கூட காலத்தை வீண்பண்ணாமல் ஒவ்வொருநாளும் பக்தியுடன் ஜம்பூபதியை ஆராதித்துக்கொண்டு வந்தது. இது இவ்விதமிருக்கச் சிலகாலம் சென்றபிறகு ஒரு எட்டுக்கால்பூச்சியானது கஜாரண்யத்தில் விளங்கும் ஸர்வேசுவரரான ஸ்ரீபரமேசுவரரைப்பார்த்தது. தர்சனம் செய்தவுடன் முன்ஜன்மத்தில் செய்த புண்யவிசேஷத்தால் அதற்கு அதிக அறிவுண்டாயிற்று. உடனே ஸகலஜகத்திற்கும் மூலமாயும் பாவஸ்துவாயும் ஆதி அந்தமில்லாதவருமான பிரபுவை ஜம்பூவிருக்ஷத்தின் மூலத்திலிருப்பதாகப் பார்த்து ஆனந்தவெள்ளம் பெருகுகிற கண்களையுடையதாய்க்கொண்டு அந்தலூதை என்கிற ஜந்துவானது இவ்விதம் கூறுகின்றது. அபர்ணாதிபதியான இந்துசேகருடைய சிரஸ்ஸானது ஜம்பூவிருக்ஷத்திலிருந்து விழுந்த சுள்ளிகளாலும் இலைகளாலும் அடிக்கப்படுகின்றதே; என்னகஷ்டம்; இவ்விதம் பகவானைப்பார்க்கும் என்மனதிற்கு அதிக கஷ்டமுண்டாகிறதே என்று மிகுந்தமனவருத்தத்துடன் அசுத்தமானஜலம் பகவான்மேல்படாதபடி அங்கிருந்த இலைகளால் மறைத்து வேறிடமாகத் திருப்பிவிட்டு உயரஇருந்து விழும்சருகு முதலியவைகள் சிவலிங்கத்தின்மேல் எவ்விதம் விழாமலிருக்குமோ அவ்விதம் லிங்கத்தினுடைய அடியிலிருந்து சிரஸ்ஸிலிருக்கும் சந்திரன் வரையி

ல் தன் வாயிலுள்ள நூலால் யோகிகளுடைய மனஸ்போல் பகவானைச் சுற்றிக்கொண்டு ஜடையினுடைய ஸமீபத்தில் தானும் இருந்தது.

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 18.

अष्टादशे विशेषेण गजलूताप्रपूजनम् ।
तयोरीशेन देहान्ते प्रसाद: कृत उत्तमः ॥

யானையும் எட்டுக்கால்பூச்சியும் சங்கரரை விசேஷமாக ஆராதித்ததென்றும் அவ்விரண்டுகளுக்கும் ஈசனால் சரீரத்தின் முடிவில் சிறந்த அனுக்கிரகம் செய்யப்பட்டதென்றும் இந்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

ஸூதர்: அந்த ஊதை என்கிற ஜந்துவானது ஹரருடைய சிரஸ்ஸில் நன்கு நிழலாயிருக்கும்படி விஸ்தாரமாயும் அழகாயுமான ஒருசாலையை தன்வாயிலுள்ள நூல்களால் நெய்ய ஆரம்பித்தது. அந்தச்சாலையைப் பார்த்த ஜனங்கள் ஆகாயத்திற்கு அதிக சோபையையுண்டு பண்ணுகிறதாயும் பால்கடலுடைய காந்தியையுடையதாகவும் ஹரருடைய மௌளியிலிருக்கும் கங்கையினுடைய கரைகளைப்போலவும் கருதினார்கள். லக்ஷ்மியினுடைய வஸ்திரம்போலவும் ஸ்வர்க்கத்திற்கு ஹம்ஸதூலமயமாகப் போடப்பட்ட ஆஸனம்போலவும் சந்திரதீர்த்தத்தில் ஸ்நாநத்திற்காக ஆகாயத்திலிருந்து வந்த சந்திரமண்டலம் போலவும் ஆகாயத்தில் சலிக்கிறதான நக்ஷத்திரம்போலவும் பரமேசவாருடைய சிரஸ்ஸிலிருக்கும் கங்கையிலிருந்து உயர்க்கிளம்

பும் ஹம்ஸக்கூட்டங்கள் போலவும் காத்தால் கொண்டுவரப்
பட்ட திக்கஜத்தினுடைய வஸ்திரம்போலவும் காளகண்ட
ருடைய கழுத்திலுள்ள ஒளியாகிற மேகத்தினிடமிருக்கும்
ஸ்நேகத்தால் வந்திருக்கும் கொக்குக்கூட்டங்கள் போலவும்
விஸ்தாரமாயும் அழகாயும் ஆச்சரியமாயும் செய்யப்பட்ட
அந்தச்சாலையைப் பார்த்துப் பலஜனங்கள் பலவாறு நினைத்
தார்கள். இவ்விதம் எல்லோராலும் சிலாகிக்கத்தகுந்த சிற
ந்தபந்தலை சம்புவிற்குமேல் செய்துவிட்டது. கீழிருக்கும்
ஈசுவரர்பேரில் ஒன்றும் எப்படிவிழாமலிருக்குமோ அவ்வி
தம் வெள்ளைக்குடை பிடித்தாப்போல் நெருக்கமாகவும் அதி
கநிழலைக் கொடுக்கும்படியாகவும் செய்துவிட்டு சந்தோஷத்
துடன் அந்த லூதையானது வெளியில் போய்விட்டது. மறு
நாள் வழக்கம்போல் அந்த வெள்ளையானையானது சூலபாணி
யைப்பூஜிக்கவேண்டி துதிக்கையை சிரஸ்ஸில் வைத்துக்கொ
ண்டு ஸந்நிதியில்வந்தது. வந்தவுடன் பகவானுக்குமேல் பூச்
சியினுடைய வாயிலிருந்துண்டான அசுத்தமான நூல்களா
ல் செய்யப்பட்ட விதானத்தைப் பார்த்துத் திருப்தியில்லா
மல் அந்தகஜம் அபிஷேகம் செய்தது. சந்திரனைக்கிரீடத்தி
லுடையவரும் கங்கையால் விளங்கும் சிரஸ்ஸையுடையவரு
மான ஸ்ரீமஹாதேவருக்கு தோஷமுள்ள வாய்நீரால் இவ்வி
தம் செய்யப்பட்டிருக்கிறது. இதற்குமேல் செய்யவேண்
டிய கெடுதல் என்ன இருக்கிறது என்று அந்தயானை நன்கா
லோசித்து ஈசுவரனுடைய சிரஸ்ஸை மறைக்கிறதான அந்த
விதானத்தை தன் தந்தங்களால் அறுத்துவிட்டு பக்தியுடன்
வழக்கம்போல் லிங்கத்தைப் பூஜித்துவிட்டு இருப்பிடம்
போய் சேர்ந்துவிட்டது. மறுநாள் அந்த எட்டுக்கால்பூச்சி
யும் ஜம்புநாதர் ஸந்நிதிக்குவந்து யானையால் அறுக்கப்பட்
டிருக்கும் தன்னால் கட்டப்பட்ட விதானத்தையும் வனத்தி
லுள்ள புஷ்பங்களால் மூடப்பட்ட லிங்கத்தையும் பார்த்து
வருத்தத்தையடைந்தது. அன்றையதினமும் மறுபடியும்

முன்போல் விதானத்தைப் (பந்தலை) போட்டுத் தர்சனம்
செய்துவிட்டுத் தன்னிருப்பிடம் சென்றது. மறுநாள் அங்
கு யானை தர்சனத்துக்கு வந்து முன்போலிருந்ததைப்பார்த்
து நூல்களை அறுத்துவிட்டுப் பூஜித்துப்போயிற்று. இவ்
விதம் ஒவ்வொருநாளும் லூதாஜந்து பந்தல்கட்டுகிறதும்
மறுநாள் யானை அறுக்கிறதுமாக சிலகாலம்சென்றது. ஒரு
நாள் தினம் கஜம்வந்து நூல்களையறுத்துத் திரும்பும் ஸமய
த்தில் லூதையும் வந்துவிட்டது. வந்ததும் நூல்பந்தல்
அறுத்திருப்பதைக் கண்டு அதிகமான துக்கத்தையடைந்
தது. இந்த நாகைமரத்தினுடைய ஜீர்ணமான இலை முதலி
யவைகள் விழுந்து சம்புவிற்கு தோஷத்தையுண்டுபண்ண
வேண்டாமென்று நினைத்து மூகத்திலிருக்கும் ஜலத்தாலுண்
டாகும் நூல்களால் என்னால் இந்த விதாநமென்கிற பந்தல்
போடப்பட்டது. அதை பக்தனென இந்ததுஷ்டகஜமானது
அறுத்து எடுத்து விடுகின்றது. மதத்தால் பொட்டையாயும்
அற்பபுத்தியுடையவருமாக இருப்பவர் ஒன்றையும் அறிய
மாட்டார். பிரபுவினுடைய பந்தலுக்குக் கெடுதல் செய்கிற
இந்ததுஷ்டஜகத்திற்குப் பதில் சிக்ஷைசெய்ய வேண்டுமென்
று தீர்மானித்து இந்த மரத்தின் பொந்தில் நாமிருந்து
கொண்டு துதிக்கையைத் தூக்கும்பொழுது அதில்கடித்து
மரிக்கும்படி செய்யவேண்டுமென்று அவ்விதமே அம்மரத்
தின்பொந்தில் ஓர்மூலையிலிருந்தது. இவ்விதம் ரகஸ்யமாக
ஒளிந்துகொண்டு ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்
கும்பொழுது மறுநாள் வழக்கம்போல் சிவபக்தியில் சிறந்த
அந்தகஜம் உமாகாந்தருடைய ஸந்நிதியையடைந்து பக்தி
யுடன் தன்கையைத்தூக்கி பகவானுக்கு அஞ்சலிபந்தம் செ
ய்தது. இந்த ஸமயத்தில் அந்த லூதையானது யானையி
னுடைய துதிக்கையில் பிரவேசித்தது. அதின் வழியாக
ஒருமனிதன் பரகாயப்பிரவேசம் பண்ணுவதுபோல் யானை
யின் உள்ளே பிரவேசித்துவிட்டது. உடனே விதாநத்தை

யறுத்த அந்ததுஷ்டகஜத்தை நன்றாய் கடித்துவிட்டது. கடித்தவுடன் அந்தயானையானது பூமியில் துதிக்கையை ஊன்றிக்கொண்டு கழுத்துமுறிந்து கம்பீரமாகக் கத்திக்கொண்டு ஒருபக்கமாக விழுந்து கடித்தவேகத்தால் மாணத்தையும் அடைந்தது. லூதை என்கிற இந்தப்பிராணியும் வேகமாக வெளியில் வரும்பொழுது துதிக்கையினுடைய நுனியில்வந்தவுடன் வெளியில் வாமுடியாமல் அவ்விடத்திலேயே அதுவும் மாணத்தையடைந்தது. இவ்விதம் ஒன்றுக்கொன்று ஆக்ரசம்கொண்டு மரித்தவைகளும் அதிகமான சிவபக்தியையுடையவைகளுமான கஜம் லூதை இவ்விரண்டு புண்யமூர்த்திகளையும் பார்த்து இயற்கையில் கருணைக்கடலான பகவானுக்குத் தயையுண்டாயிற்று. ஜம்புநாதருடைய அனுக்கிரகம் ஏற்பட்டவுடன் இவ்விரண்டுப் பிராணிகளுக்கும் ஸகல உலகங்களிலும் பிரகாசிக்கின்ற தேஜோரூபமான சரீரமேற்பட்டது. இவ்வித ஆச்சரியமான கர்மாவைப்பார்த்து தேவலோகத்தில் துந்துபி வாத்தியம் முழங்கிற்று. விண்ணவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். ஈசுவரன் இந்தயானையானது மோக்ஷத்தைப் பெறவேண்டுமெனக்கருதி அதிக பக்தியுடன் வெகுகாலமாக நம்மைப்பூஜித்தது. ஆகையால் அதற்கு அதின் இஷ்டத்தையே கொடுக்கவேண்டுமென்று மொக்ஷத்தைக் கொடுத்தார். இந்தலூதை என்கிற ஜந்துவானது பூமியையடையவேண்டுமென்று தன் வாயிலுள்ள நூல்களால் நமக்குப்பந்தல் போட்டது. கோபத்தால் யானையைக்கொன்றது. ஆகையால் மறுபடியும் ஜன்மாவடைந்து போகங்களையனுபவித்துச் சரீரமுடிவில் நமது ஸாயுஜ்யத்தை இதுவும் அடையட்டும் என்று ஞானஸ்வரூபியான மஹேசன் ஸகலஜனங்களும் ஆச்சரியப்படும்படியாக இவர்களுக்கு அனுக்கிரகித்து மறைந்தார். பிற்பாடு திவ்யபுருஷர்களாயிருக்கும் கஜம் லூதை என்கிற இவ்விருவர்களும் ஜம்புநாதரான சிவனை வந்தனம்செய்து ஸந்தோஷத்தால்

தளதளத்துப்போன தம்வாக்கால் பகவானைத்துதித்தார்கள். ஹே மஹாதேவ! எங்களை ரக்ஷியும். ஸகலஜகத்திற்கும் ஆதாரபூதரான ஹே ஈசுவர! எங்களைப் பாதுகாரும். எங்கும் பிரகாசிக்கும் பரம்பொருளே! எங்களைரக்ஷியும். ஸகலஜனங்களுக்கும் மங்களத்தைக்கொடுக்கும் ஹே பிரபோ! எங்களைப் பாலனம்பண்ணும். ஆத்மஞானம் பெற்றவர்களுக்கு ஸத்ஸ்வரூபமாயும் அவிவேகிகளுக்கு அஸத்ரூபமாயும் கணக்கிடமுடியாததாயும் மனதாற் சிந்திக்கமுடியாததுமான உம்முடைய ஸ்வரூபத்தை யாரால்தான் வர்ணிக்கமுடியும். அகங்காரமென்கிற பெரிய ரோகத்திற்குச் சிறந்த ஔஷதரூபமாயும் பரிபூர்ணமான அறிவே உருவெடுத்ததாயும் தேஜோரூபமாயும் விளங்கும் ஹே மஹேச்வர! உமக்கு நமஸ்காரம். யோகிகள் எட்டுப் பிரகாரங்களான யோகங்களால் தம் சரீரத்தை எவ்வளவு சிரமப்படுத்திக்கொண்டபோதிலும் யாதொரு உம்முடைய உண்மையான ஸ்வரூபத்தை அறிகிறார்களில்லையோ அவ்வித மஹிமைவாய்ந்த உமக்கு வந்தனம். யாதொரு அவயவமும் இல்லாதவராயும் தத்வஸ்வரூபமாயும் விளங்கும் உம்மிடத்தில் பலகாரணங்களைக் கொண்டு அந்தந்த ஸ்தானத்தைக் கற்பிக்கிறார்களோ அவ்வித மகிமை பொருந்திய உமக்குவந்தனம். ஸத்என்று சிலராலும் அஸத்தென்று சிலராலும் வாதிக்கப்படும் கலகத்திற்குக் காரணமான இந்தஜகத்திற்கு வித்வான்கள் யாதொரு உம்முடைய கலையை ஸாக்ஷியாகக் கூறுகின்றார்களோ அந்தஉமக்கு நமஸ்காரம். இறந்தகாலம் வருங்காலம் நிகழ்காலம் என்கிற இம்மூன்றுகாலங்களும் எவருடைய ஞானத்தை அனுஸரிக்கின்றனவோ அவ்விதமஹிமைவாய்ந்த ஹே மஹேசுவர! ஸத்தாயும் ஞானஸ்வரூபாயும் விளங்கும் உமக்கு வந்தனம். ஸ்வயமாயுண்டான வேதவாக்குகள்கூட தம்மனதோடுகூட எந்த ஸ்வரூபத்தை அறியமுடியாமல் திரும்பிவிட்டனவோ அந்த உமக்கு நமஸ்காரம். யாதொருவருடைய கண்கொட்டுவதாலும்

மூடுவதாலும் ஸகல லோகங்களும் விருத்தியையும் நாசத்தையும் அடைகின்றனவோ, எவரால் பார்க்கப்பட்ட மாயையானவள் இந்த ஜகத்தை உண்டுபண்ணுகிறாளோ, எவர் விகாரத்தையடைந்தால் இந்தமாயை ஸ்வரூபநாசத்தையடைகின்றதோ, அந்தப்பிரபுவினுடைய சரணாரவிந்தங்களில் நமஸ்காரம். என்று இவ்விதம் பகவானை ஸ்துதிசெய்து பன்முறை அடிபணிந்து சிரஸ்ஸில் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு ஸந்நிதியில் இவ்விருவர்களும் நின்றுகொண்டிருந்தார்கள். அந்தஸமயத்தில் இவர்களுடைய பக்தி சிரத்தை பூஜை முதலியவைகளால் திருப்தியடைந்த சிவன் கருணையுடன் உங்களுக்கு என்னவேண்டும் என்று வினவினார். அமிருதவர்ஷம் போன்ற இம்மொழியைச் செவியிலேந்திய அவ்விருவர்களுக்குள் உத்தமமான கதியையடைந்ததும் ஸந்தோஷத்தால் மலர்ந்து விஸ்தாரமான கண்களையுடையதுமான அந்தயானையானது பரமேசுவரரிடம் பிரார்த்திக்கின்றது. ஹே சிவ! சங்கர! பூதநாத! பக்தர்களைப் பாதுகாப்பதையே நோன்பாகக்கொண்டவரே! ஹே தேவதைகளுக்குள் சிறந்த ஈசுவர! பக்தர்களுக்கு இவ்விதமே தாங்கள் பிரஸாதம் செய்யவேண்டும். ஹே மஹேசுவர! உம்முடைய பிரஸாதத்தால் எனக்கு ஸகலமான இஷ்டங்களும் ஸித்தித்துவிட்டன. ஆனாலும் ஹே பகவன் பிரபோ! தங்களிடம் ஒருவிக்ஞாபனம் செய்துகொள்ளுகிறேன். சந்திரன், சூரியன் இவ்விருவர்களும் எவ்வளவு காலம் வரையில் இவ்வுலகத்தில் விளங்குகிறார்களோ அவ்வளவுகாலம் வரையில் இந்தக்ஷேத்திரமானது கஜாரண்ய க்ஷேத்திரமென்று என்பெயரால் பிரஸித்தியடையவேண்டுமென்று சங்கரரிடம் வேண்டிக்கொண்டது. கருணாநிதியான சந்திரசூடரும் அவ்விதமே பிரஸித்தியடையட்டுமென்று அனுக்கிரகம் செய்தார். இந்த அனுக்கிரகத்தைப்பெற்ற அந்த கஜமானது ஈசப்பிரஸாதத்தால் பிரமதகணங்களுக்குப் பதியாகஆகி சம்புவினுடைய சரண

பூஜையால் மிகவும் பிரகாசித்துக்கொண்டு அந்தக்ஷணமே சிவகணங்களோடுகூட சிவலோகத்தில் விளங்கிக்கொண்டிருந்தது. பிறகு பக்திமான்களுக்குள் மிகச்சிறந்தான அந்த ஊதை என்கிற ஜந்துவும் புராரியைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து ஸ்தோத்திரம்செய்து பரமஸந்தோஷத்துடன் ஹே சம்போ! உம்முடைய சரணாரவிந்தங்களில் என்றும் குன்றாததிருடமான பக்தியை எனக்கு அனுக்கிரகிக்கவேண்டும். எனக்கு மறுபடியும் மாதாவினுடைய உதரத்தின் ஜன்மா ஏற்குமானால் நான் ஒரு சக்ரவர்த்திக்குப் புத்திரனாகஜனித்து தங்கள் வாஸத்திற்கு யோக்கியமான தேவாலயங்களை நிர்மாணம் செய்யவேண்டும். பிறகு அந்தஜன்மாவினுடைய முடிவில் கணங்களுக்குப் பதியாயிருக்கும் தன்மையை எப்படி. அடைவேனோ அவ்விதம் அனுக்கிரகிக்கவேண்டுமென்று ஸ்ரீசங்கரரைப் பிரார்த்திக்கும்பொழுது பரமஸந்தோஷத்தையடைந்த ஸர்வலோகேசுவரரான கௌரீபதியும் அவ்விதமே ஆகட்டுமென்று அனுக்கிரகம் செய்தார். ஈசானுக்கிரகபலத்தால் மிகவும் பரிசுத்தமான சோளராஜனுடைய வம்சத்தில் சுபதேவன் என்று பெயர்பூண்டு அரசாக்ஷிசெய்துகொண்டிருந்த அரசனுடைய பத்நியான கமலாவதீ என்பவளுக்குப் புத்திரனாகவேண்டி ஊதை என்கிற ஜந்துவானது அவளுடைய கர்ப்பத்தில் தோன்றியது. அந்தராஜா சிவனுக்கு வாஸஸ்தானமான வியாக்கிரபுரிஎன்கிற நகரில்வஸித்து வந்தான். அவன் ஜாதியில் சேணியன். இந்த அரசனையும் அவன் பார்யையும் தாய் தந்தையாக அடையவேண்டி இது அவளுடைய கர்ப்பத்தையடைந்தது. அசுபத்தைக் கொடுக்கக்கூடிய கெட்டஸ்தானத்தில் கிரகங்களிருக்கும் ஸமயத்தில் தன்பத்நிக்குப்பிரஸவ உபத்திரவம் ஏற்பட்டிருக்கிறதென்று ஒருமுகூர்த்தம் தாமதித்துப்பிறகு புத்திரனுண்டானால் சிறந்த அறிவுடையவனும் பூர்வஜன்மஞானமுள்ளவனாகவும் ஸ்ரீசங்கரகைங்கர்யத்தில் ஈடுபட்டவனாகவும்

பெருமைவாய்ந்தவனாகவும் தயையுடையவனாகவும் சூரனாக
வும் சோளத்திற்கு மன்னனாகவும் இருப்பன் என்று ஜோஸி
யர்கள் கூறியதைக்கேட்ட அரசன் கவலைகொண்டு கெட்ட
காலத்தில் புத்திரனுண்டாகாமலிருக்கவேண்டித் தைர்யமு
ள்ள பத்நியைக் கால்களில் கயிற்றால் கட்டித்தலைகீழாகத்
தொங்கவிட்டு சுபமுகூர்த்தம் வந்தபிறகு அவளைக்கட்டை
அவிழ்த்துக்கிரமமாக விருக்கும்படிசெய்தான். உடனே சுப
முகூர்த்தத்தில் கமலாவதியும் மன்மதனைப்பழிக்கும் அழ
கானமேனியுடன் கூடியபுதல்வனைப்பெற்றாள். இதையறிந்த
சுபதேவனும் ஸந்தோஷப்பட்டு சிவந்தகண்களையுடைய தன்
குமாரனுக்கு அந்தஸமயத்தில்செய்யவேண்டிய ஜாதகர்மம்
முதலான ஸம்ஸ்காரங்களைச்செய்தான் பிராமணர்களின்பொ
ருட்டு பூமி கோ ஸுவர்ணம் எள்ளு நெய் முதலியவை
களை தானம்கொடுத்துப் பிற்பாடு புத்திரனுக்குச் சோழ
க்ஷன் என்று நாமகரணஞ்செய்தான். சோளதேசத்திற்குச்
சந்திரன்போல் விளங்கும் அக்குழந்தையானது பிதுர்க்களு
க்கு மிகவும் ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுகிறதாய்க்கொ
ண்டு பாலசந்திரன்போல் ஒவ்வொருநாளும் விருத்தியடைந்
தான். சோழக்ஷன் பாலனாகவிருந்தாலும ஜாதிஸ்மரனாகவி
ருந்தபடியால் ஜம்பூமூலத்தை வாஸஸ்தானமாகவுடைய ம
ஹேசுவரனைஎப்பொழுதும் ஸ்மரித்துக்கொண்டு வந்தான்.
இவ்விதம் கிரமமாக அவன் விருத்தியடைந்து யௌவனஸ்ரீ
யை அடைந்தான். உடனே பிதாவான சுபதேவன் இவனை
சுப முகூர்த்தத்தில் பத்திராஸனத்திலேற்றிவைத்து சோளதே
சத்திற்கு அதிபதியாகப் பட்டாபிஷேகம்செய்தான். சோள
தேசத்தரசனென்று எங்கும் பிரஸித்திபெற்ற அந்தசோழ
க்ஷன் மனதைச்சிவனிடத்திலும் ஸாதுக்களான பெரியோர்
களிடம் தனத்தையும் ராஜ்யத்தில் நீதியையும் சத்துருக்
களிடம் பயத்தையும் திக்குகளில் சிறந்தகீர்த்தியையும் சாஸ்
திரங்களில் புத்தியையும் அர்ப்பணம் செய்தான். இவ்விதம்

ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்த அந்த வேந்தன் ஒருஸமயம் ஸகலஸைந்யங்களோடும் சிதம்பரக்ஷேத்திலிருந்தும் புறப்பட்டு பரமேசுவரனை ஸேவிக்கவேண்டி ஞானக்ஷேத்திரத்தையடைந்தான். இங்குவந்த சோளபதி ஸகலவஸ்துக்களாலும் விதிப்படி ஸ்ரீஜம்புநாதரை நன்கு ஆராதித்து அஞ்சலிபந்தம் செய்துகொண்டு கண்களைக்கொட்டாமல் பகவானை தர்சனம் செய்தான். அந்தஸமயத்தில் மஹேசன் ஆலயமில்லாமல் ஜம்புமரத்தடியில் ஆவரணமுமில்லாமலிருந்தபடியால் அதைக்கண்ணுற்ற சோளனுக்கு சிறந்த பிராகாரங்களுடன்கூடிய உத்தமமான ஆலயத்தில் வஸிக்கத்தகுந்தவரும் ஸகலஜகத்திற்கும் பிரபுவாயும் தேவதைகளால் பூஜிக்கத்தகுந்தவருமான உமாபதியான பகவான் இந்த ஸ்திதியிலிருக்கும்படி நேர்ந்ததே என்று மிகவும் வருத்தப்பட்டான். முன்ஜன்மாவில் ஊதைஎன்கிற ஜந்துவாயிருந்த என்னால் இந்த மரத்திலிருந்து காய்ந்தசருகுகளும் மற்றுமுள்ள அசுத்தமும் இவர்பேரில் படாமலிருக்கவேண்டி பந்தல்போட்டு என்னால் பூஜிக்கப்பட்ட திரிலோகநாதன் இப்பொழுது வெளியிலிருக்கிறார். ஸகலதிக்குகளையும் ஜயித்து ராஜாக்களிடமிருந்தும் ஸ்வர்ணங்களை ஸம்பாதித்து அவைகளைக்கொண்டு கோபுரம், மண்டபம், பிராகாரம், ஆலயம் முதலான ஸ்தானங்களை நிர்மாணம் செய்வோமென்று தீர்மானித்துச் சோணாக்ஷன் பார்வதிநாதரை நமஸ்கரித்து என்னிஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான். பிறகு அதிகமான பராக்கிரமத்தையுடையவனும் சதுரங்க பலங்களுடன் கூடியவனும் அதிரதனுமான அந்த சோணாக்ஷன் வெளியில்சென்று அங்க, வங்க, கலிங்க, ஆந்திர, பாண்டிய, கர்ணாட, கோஸலம் முதலானதேசங்களை ஜயித்து அதிகமான பொருளை ஸம்பாதித்து இரண்டாவது குபேரன் என்று அழைக்கும்படியானான். அந்ததனங்களை யானை, குதிரை, ஒட்டகை காளை முதலானவைகளில் ஏற்றிக்கொண்டு ஜம்பூபதியினுடைய க்ஷேத்திரத்திற்

கு வந்துசேர்ந்தான். உடனே சிறந்த முகூர்த்தமாகப் பார்த்து ஜம்பூநாதருக்கு ஆலயம்கட்டத்துடங்கினன். மேற்கில் ஒன்பது ஜன்னலுடன் கூடிய தெற்கு வாசற்படியைக்கட்டினன். ஜம்பூபதிக்கு கிழக்கில் ஓங்காரரூபமாக ஒரு ஆலயத்தை நிர்மாணம் செய்தான். ஸ்வர்ணங்களாலும் வெள்ளியினுலும் தாம்பிரத்தினுலும் ரத்னங்களாலும தூண்களையும் மதள்களையும் திண்ணைகளையும் பின்னும்வேண்டிய கட்டிடங்களையும் உண்டுபண்ணினன். பிறகு சோணகேசுவரர் என்று பெயர் கொண்ட லிங்கத்தை அந்த ஆலயத்தினுள் கிழக்குமுகமாகப் பிரதிஷ்டை செய்தான். மறுபடியும் ஞானக்ஷேத்திரமென்கிற அந்தகஜாரண்யத்தில் ஸ்ரீஜம்புநாதருக்கு உத்ஸவம் நடக்கும்காலத்தில் ஜனங்களுக்கு சிரமமில்லாமலிருக்கவேண்டுமென்று நகரத்தையும் வீடுகளையும் வீதிகளையும் விஸ்தாரமாகச் செய்தான். உயர்ந்த ரத்னங்களாலிழைக்கப்பட்டு தேஜோரூபமாய் விளங்குகின்ற சிறந்த பல ஆபரணங்களை ஜம்புநாதருக்கு அர்பணம் பண்ணினன். பூஜைக்கு வேண்டிய பாத்திரங்களையும் மற்றுமுள்ள ஸாமான்களையும் அநேகம் ரூபாய்கள் வரக்கூடிய நிலங்களையும் மற்றும்வேண்டிய ஸாதனங்களையும் கஜாரண்யேசுவரரின் பொருட்டு ஸார்வபௌமனுன சோளேசன் கொடுத்தான். பின்னும் ஈசுவரகைங்கர்யத்திற்கு வேண்டிய தாஸீ, தாஸாள் சில்பிகள் முதலான வேலைக்காரர்களையும் ஏற்படுத்தி அவர்களுக்கும் வேண்டியதைக் கொடுத்தான். மஹரிஷிகளுக்கும் பதினெட்டு மடங்கள் கட்டிவைத்தான். சிவாலயம் ஏற்பட்ட நாள்முதற்கொண்டு ஒவ்வொருமாஸமும் ரதோத்ஸவங்களையும் அநேகவித நிவேதனங்களையும் ஞானபூமிபதிக்குச் சோணகேஷன் நடக்கும்படி ஏற்பாடு செய்தான். இவ்விதம் நடத்தியதிலிருந்தும் ஜம்புநாதருக்கு சோணகேஷனிடத்தில் பிரியமுண்டாயிற்று. ஸந்தோஷத்தால் பகவான் சோளபதியிடம் சொல்லுகிறுர். உன்னுடைய சுச்ரூஷையால் நான்

ஸந்தோஷமடைந்தேன். வியாக்கிரபுரத்தில் உனக்கு சிரேய ஸ்ஸைக் கொடுக்கிறேன். ஹே சோளபூபதே! உனக்கு அபே க்ஷைபுள்ள வான்களைக்கேள், கொடுக்கிறேன். என்றுகூறும் ஜம்புபதியைச் சோளராஜன் நமஸ்கரித்து பகவானிடம் அறி விக்கிறான். ஹே பிரபோ! என்னால் கணக்கில்லாத நிதிகள் உம்முடைய பிரியத்தின்பொருட்டு இங்குவைக்கப்பட்டிருக் கின்றன. ஆகையால் மஹாவிபவர் என்கிற இந்தப்பெயர் பூமியில் உமக்குப் பிரஸித்தமாய் விளங்கவேண்டும் என்றான் இதைக்கேட்ட சம்புவும் அவ்விதமே ஆகட்டுமென்று சொ ன்னார். பிறகு நீ உன்நகரத்தை விட்டுக்கிளம்பி வெகுகால மானபடியால் உன் பத்நீபுத்திரன் முதலானவர்கள் உன்னைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். ஆகையால் உன் ராஜதானிக்குப்போ என்று சங்கரரால் சொல்லப்பட்ட அர சன் உடனே ஜம்பூபதிக்கு வந்தனம்செய்து விடைபெற்றுக் கொண்டு ஸைந்யங்களோடு தன் பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தான். ஸூதர்: ஸ்ரீபரதேவதையால் ஸ்தாபனம் செய் யப்பட்ட யாதொரு லிங்கத்தில் ஈசன் பிரகாசிக்கின்றாரோ அந்த இடத்தில் ஒன்பது தீர்த்தங்களும் ஒன்பது ஜன்னல் களாகச் செய்யப்பட்டிருக்கின்றன. இப்பொழுதும் அந்த ஒன்பது ஜன்னல்களால் ஒன்பது தீர்த்தங்களையும் சங்கரரை யும் காலையிலும் மாலையிலும் ஸேவிக்கிறார்கள். ஒன்பது ஜன்னல்கள் வழியாக எவர்கள்பகவானை தர்சனம்செய்கிறார் களோ அவர்கள் ஒன்பது தீர்த்தங்களிலும் ஸ்நாநம் செய்த புண்யபலனையடைகிறார்கள் என்றுகூறினார். முனிகள்: மேல் பக்கமாக பகவானுடைய ஸந்நிதியில் ஜன்னல்ரூபமாக ஒன் பது துவாரங்கள் பகவானைதர்சனம்செய்வதற்கு சோளராஜ னால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதே மறுபடியும் தென்பக்கமா க ஒருவாசப்படியும் ஏற்பட்டிருக்கிறதே அதையும் சோளரா ஜனே உண்டுபண்ணினானா என்று வினவும்பொழுது ஸூ தர் மொழிகின்றார். முற்பிறவியில் ஊதைஎன்கிற ஜந்துவா

யிருந்த சோளுக்ஷன் தனக்கும் கஜத்திற்கும் அக்காலத்தி லிருந்த சத்துருபாவத்தை ஸ்மரித்து இனி கஜம் ஈசன்ஸமீப த்தில்செல்லாதிருக்க வேண்டுமெனக் கருதியும் ஒன்பது தீர்த்தங்களுடைய புண்யத்தைப் பெறவேண்டியும் சிங்கத்தின் முகம்போன்ற ஒன்பது ஜன்னலை ஏற்படுத்தினான். பிறகு ஜம்புநாதனை அர்ச்சனை முதலானவைகளைச் செய்து ஸேவிக்க விருப்பங்கொண்ட பக்தர்களுக்குப்போய் வாவேண்டித் தென்பக்கமாக வாயற்படி ஒன்றும் உண்டுபண்ணப்பட்டது. இந்தப்பிரகாரம் எழுபத்தெட்டு சிவாலயங்கள் சோளேந்திரனால் கட்டப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஆலயத்திற்கும் பிராகாரம், கோபுரம், ஆலயம், பூஜிக்கவேண்டிய ஸாமான்கள், மண்டபங்கள் மஹோத்ஸவங்கள் முதலியவைகளை நன்கு ஏற்பாடு செய்திருக்கிறான். ஜகத்தில் சிறந்த கீர்த்தியுடன் சோளுக்ஷன் ராஜ்யபரிபாலனம் செய்துவந்தான். தானிருக்கும்வரை வேண்டிய போகஙகளை யனுபவித்து தேவதைகளுக்கும் வேதியர்களுக்கும் வேண்டிய ஆலயங்களைக் கட்டிவைத்து தர்மநெறிதவறாமல் ராஜ்யத்தைப் பரிபாலித்து முடிவில் தன்புத்திரனுக்குச் சோளராஜ்யத்தைப் பட்டாபிஷேகம் செய்துவைத்து மறுபடியும் திரும்பிவாராமல் ஸ்திரமாயிருக்கக்கூடிய பரமாத்மாவினுடைய உத்தமமான பதத்தை அவ்வேந்தன் அடைந்தான். ஸகல வேதங்களாலும் போதிக்கப்பட்ட எந்தப்பதத்தைச் சோளேசுவரனான அந்த சோளுக்ஷன் அடைந்தானோ அதை வேதவாக்குக்களுக்கெல்லாம் இருப்பிடமான பதஞ்சலிமஹரிஷியும் பெறவில்லை, ஆகையால் ஹே மஹரிஷிகளே! இந்தக்கரிவனமானது புத்தியையும் முக்தியையும் கொடுக்கும் உத்தமமான க்ஷேத்திரம். இங்கு வஸிப்பவர்களுக்கு ஒருகாலும் கஷ்டமேற்படாது. இவ்வித புண்யக்ஷேத்திரம் வேறுகிடையாதென்று சொல்லிமுடித்தார். இநதப்பிரகாரம் சூதமஹரிஷி மூலமாக கஜாரண்யமாஹாத்மியத்தைக் கேட்டு ஸந்தோஷமடைந்த முனி

கணங்கள் கஜம் ஊதை என்கிறஜந்து இவைகளுடைய பூர்வ ஜன்மங்களையும் அவைகளுக்குச் சாபமேற்பட்ட காரணத்தையும் கூறவேண்டுமென்று ஸூதமுனிவரை வேண்டினார்கள்.

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 19.

एकोनविंशे मुनिभिः पृष्टः सूतो महात्मभिः ।
लूतेभयोर्जन्महेतुमवदच्छापमात्मवान् ॥

இந்தப்பத்தொன்பதாவது அத்தியாயத்தில் முனிகளால் வினவப்பட்ட ஆத்மஞானியான ஸூதர் கஜத்திற்கும் ஊதைக்கும் ஜன்மா ஏற்பட்டதற்கும் சாபமேற்பட்டதற்கும் காரணத்தை நிரூபிக்கிறார்.

ரிஷிகள் ஹே ஸூதமஹர்ஷே! கஜம் என்றும் ஊதை என்றும் பெயர்பூண்டு இந்த கஜாரண்யத்தில் வஸித்த இவர்கள் எவர்கள்? முற்பிறவியில் எப்படியிருந்தார்கள்? அவர்களுக்குச்சாபம் எப்படி ஏற்பட்டது? எதினால் திர்யக் ஜன்மாவையடைந்தார்கள்? என்கிறவிஷயத்தைத் தயவுசெய்து தாங்கள் எங்களுக்கறிவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். ஸூதர் கூறுகின்றார். கணங்களுக்குள் சிறந்தவர்களான மால்யவானென்றும் புஷ்பதந்தனென்றும் இருவர்களிருந்தார்கள். ஒருஸமயம் கெட்ட ஸ்வபாவமுடைய அவ்விருவர்களும் பரமேசுவருடைய அனுக்கிரகம் தங்களுக்கு இருக்கென்று அகங்காரங்கொண்டு ஈசுவரபக்தி தனக்குத் தான் அதிகமாக இருக்கென்று ஒவ்வொருவரும் சொல்லிக்

கொண்டு சண்டைபோட ஆரம்பித்தார்கள். இவ்விதம் ஒவ்வொருவரும் தன்னையே உயர்வாகக்கூறும் அந்த அவிவேகிகளுக்கு கோபம் அதிகமாகி மனக்கலக்கமேற்பட்டு மால்யவான் என்பவன் புஷ்பதந்தனைப்பார்த்து நீ அதிககர்வம் கொண்டவனாயிருப்பதால் இப்பொழுது யானையாகி பூலோகத்தையடையவேண்டும் என்று சாபம்கொடுத்தான். உடனே புஷ்பதந்தனும் மால்யவானைப்பார்த்துக் கோபம்கொண்டு நீ அதிககோபமுள்ளவனாகயிருப்பதால் கிருமியாக ஆகவேண்டுமென்று சபித்தான். இவ்விதம் இருவரும் சாபத்திற்கு ஆளானவர்களாய்க்கொண்டு அற்பவிவேகம் ஏற்பட்டு ஸ்ரீபரமேசுவரனையடைந்து நமஸ்காரம் செய்து அவ்விருவரும் வருமாறு அறிவித்தார்கள். ஹே ஸ்வாமின்! எங்கள் இருவர்களுக்கும் அக்ஞானத்தால் இவ்வித ஆபத்து நேர்ந்துவிட்டது. எங்களுக்கு என்னகதி? எப்பொழுது இந்தசாபம் விலகும்? எந்தஇடத்தில்விலகும்? என்கிறவிஷயங்களைத் தாங்கள் எங்களுக்கு அனுக்கிரகித்துக் கூறவேண்டுமென்று அவ்விருவர்களும் பிரார்த்திக்கும்பொழுது கருணைக்கடலான கௌரீநாதன் ஆலோசித்து இவ்விதம் அவர்களுக்கு மறுமொழியுரைக்கின்றார். தக்ஷிணதேசத்தில் கஜாரண்யமென்று பிரசித்தமான ஒருக்ஷேத்திரமிருக்கின்றது. அதற்கு வடக்கில் அதின் பார்சுவத்தில் சுவேதம்என்கிற பெரியமலை இருக்கின்றது. அதிக மஹிமைபெற்ற அந்த கஜாரண்யத்தைக்கிருமிரூபமாக மால்யவான் அடைந்து அங்கிருக்கும் ஜம்புவிருக்ஷத்தினுடைய பொந்துக்குள் இருந்துகொண்டு அந்தமரத்தின் அடியில்விளங்கும் சிவலிங்கத்தை முடிந்தவரையில் பக்தியினால் ஆராதித்துக்கொண்டிரு என்று சொல்லிவிட்டு புஷ்பதந்தனைப்பார்த்து நீயும் அந்த சுவேதபர்வதத்திற்கு ஸமீபத்தில் பெரியகாடு இருக்கின்றது. அங்குபோயிரு. அந்த இடத்தில் புண்யமான ஒருதடாகமிருக்கின்றது. அதிலிருக்கும் கமலங்களால் கஜாரண்யத்திலிருக்கும் லிங்கத்தை ஒவ்

வொருநாளும் அர்ச்சனைசெய். அந்த இடத்திலும் ஒருகாரணத்தால் உங்களிருவர்களுக்கும் விவாதமுண்டாகும். அதிலிருந்தும் உங்களுக்கு முக்தி ஏற்படும் என்று பகவான்கூறினார். ஹே விப்ரர்களே! அந்த கணசிரேஷ்டர்கள் தான் இங்கு பானையாகவும் லூதையாகவும் வந்தார்கள். பாபங்கள் எவ்வளவு அதிகமாக இருந்தாலும் எவ்வளவு குடூரமாகவிருந்தாலும் ஸகல பாபங்களும் கஜாரண்யவாஸத்தால் நாசத்தையடைந்துவிடும் இந்த விஷயத்தில் விசாரிக்கவேண்டிய அவச்யமேயில்லை. நிச்சயம்தான். அவ்விருவர்களும் திர்யக் ஜாதியையடைந்திருந்தாலும் இந்த க்ஷேத்திரத்தினுடைய வைபவத்தால் முக்திபெற்றனர். சிறந்தநியமங்களோடு கூடிய ஹே ரிஷிகளே! இந்த ஸ்தானத்திற்கு இதரக்ஷேத்திரங்களைக் காட்டிலும் அதிக மஹிமையுண்டுதான். நீங்கள் இதை நன்கு கவனிக்கவேண்டும் கிருகங்களுக்குள் ஸூர்யனுக்கு எப்படி அதிகதேஜஸ் இருக்கின்றதோ கற்பகவிருக்ஷங்களுக்குள் பாரிஜாத விருக்ஷத்திற்கு எப்படி கௌரவம் அதிகமோ குலபர்வதங்களுக்குள் ஹிமவானுக்கு எப்படி மஹிமை அதிகமோ சிவபக்தர்களுக்குள் விஷ்ணுவானவர் எப்படி சிறந்தவரோ, அவ்விதம் வேறான பல க்ஷேத்திரங்களிருப்பினும் அவைகளைக் காட்டிலும் இதற்குமஹிமை அதிகம். பின்னும் கார்ஹபத்ய, தக்ஷிணாக்னி, ஆஹவநீயம், என்று மூன்று அக்னிகளும் ஸமமாயிருந்தாலும் அவைகளுக்குள் கார்ஹபத்யம் என்கிற அக்னியை எப்படிச் சிறந்ததாகக் கூறுகின்றார்களோ அவ்விதம் இதர க்ஷேத்திரங்களைக் காட்டிலும் இதுவே சிறந்தது என்கிற விஷயத்தை அற்பம் உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். இந்த க்ஷேத்திரத்தில் ஒருராத்திரியாவது இரண்டுராத்திரியாவது எவன்வஸிக்கிறானோ அவன் கணங்களுக்குள் முக்கியனாகவும் நந்திகேசுவரருக்கு ஸமானமாகவும் ஒருஸமயம் மேலாகவும் ஆகின்றான். அந்தக்ஷேத்திரத்தில் பக்தியால் வேதாத்யயனம் செய்த ஒருபிராமணனு

க்கு அன்னமிட்டால் அதானது அவனுக்குக் கோடியாகத்தினுடைய பலத்தை யுண்டுபண்ணுகின்றது. பிர்ம்மபுஷ்கரிணீ தீர்த்தத்திலாவது காவேரியினுடைய தீர்த்தத்திலாவது ஸ்நாநம்செய்து பரிசுத்தனாகயிருந்துகொண்டு எந்த மனுஷன் இந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் அழகான மூர்த்தியையுடைய சிவலிங்கத்தைப் பக்தியினால் பிரதக்ஷிணம்செய்து சிரத்தையுடன் நமஸ்காரம் பண்ணி கந்தம், புஷ்பம் முதலான திரவியங்களால் பூஜைசெய்து விசேஷ நிவேதனங்களையும் ஸமர்ப்பணம்செய்து அகிலாண்டேசுவரியையும் தர்சித்து நமஸ்கரித்துப் பிரஸித்தமான ஜம்பூவிருக்ஷத்தையும் வந்தனம் செய்து சரீரமுள்ளவரையில் வஸிக்கின்றானோ, இவனை மஹாத்மாவாக அறியவேண்டும். அவன் ஸாக்ஷாத்பரமேசுவரன் தான். இதுநிச்சயம். அந்த க்ஷேத்திரத்திலிருக்கும் ஸ்தாவரமானவஸ்துவிலோ ஜங்கமமான வஸ்துவிலோ எவனுடைய சித்தமிருக்கின்றதோ அவனுக்கும் முடிவுகாலத்தில் சிவலோகமே கிடைக்கின்றது. எவனுக்கு பிர்ம்மஸரஸ்ஸினுடைய தீர்த்தமானது ஒருபிந்துவாகிலும் உதரத்திலிருக்கின்றதோ அது பூராவும் லிங்கஸ்வரூபமாக ஆகின்றது. அந்த லிங்கத்தினுடைய பெயரை எவன் புத்திரனுக்குவைக்கிறானோ அந்தவம்சத்திலுண்டான முன் பத்துபேர்களும், பின்னுள்ள பத்துப்பேர்களும் மோக்ஷத்தையடைகிறார்கள். அந்த க்ஷேத்திரத்தில் வஸிக்கும் புருஷர்களுக்காவது அல்லது பசுக்களுக்காவது கெட்ட புத்தியையுடைய எவன் அப்பிரியத்தைச் செய்கிறானோ அவன் நரகத்தையடைகிறான். இப்படியிருக்க ஜம்புநாதஸேவையில் முயற்சியுடையவர்களாயும் அவருடைய நாமாவை ஸ்மரிப்பவர்களுமான சிவபக்தர்களுக்கு பாபியான ஒருவன் சத்துருவாயிருந்தால் அவன்நரகத்தையடைகிறானென்றும் கூறவும் வேண்டுமோ. ஞானக்ஷேத்திரத்தில் பெரியகல்லுகள் சிறியகற்கள் செங்கல்கள் எதுவாயிருந்தாலும் அவையாவும் சிவலிங்கங்கள்தான். இதில் சங்கையே

யில்லை. புழுவாகவாவது அல்லது வேறான அற்பஜந்துவாக வாவது ஈசுவராநுக்கிரகத்தால் ஞானக்ஷேத்திரத்தில் எது உண்டாகிறதோ அதுமுடிவில் கணங்களுக்குப்பதியாக ஆகின்றது. என்றால் எந்தமனிதர்கள் மிகவும் புண்யமாயும் சிறந்ததாயும் விளங்கும் இந்த க்ஷேத்திரத்தில் ஜநிக்கிறார்களோ அவர்கள் மஹாத்மாக்களாகவும் சிவபக்தர்களாகவும் சிவனுக்குப் பிரியர்களாகவும் ஆகிறார்கள். எவன் மிகவும்சிறந்த பதினாறுதானங்களையும் இங்கு செய்கிறானோ எவன் இந்த க்ஷேத்திரத்தில் ஒருபிராமணனுக்குப் பிரியத்துடன் போஜனம் செய்துவைக்கிறானோ அவன் மஹாபுண்ய புருஷனாகிறான். இந்தப்புண்யபுருஷனை ஸ்மரித்தால் பிர்ம்மஹத்தி முதலான மஹாபாபங்களும் நிச்சயமாய் விலகிவிடுகின்றன. ஜம்புபுஷ்கரிணீ தீர்த்தத்தில் ஸ்நாநமும் ஜம்புநாதருடைய தர்சனமும் சிவராத்ரி புண்யகாலத்தில் உபவாஸமும் பஸ்மருத்திராக்ஷதாரணமும் எப்பொழுதும் பஞ்சாக்ஷரஜபமும் ஒரு ஜன்மாவில் ஒருவனுக்கேற்படுமேயானால் அவன் ஸாக்ஷாத் பரமேசுவரருக்கு ஸமனாக ஆகிறான் இதில் அற்பமேனும் சங்கைக்கிடமில்லை. நம: சிவாய என்கிற மந்திரத்தை எவன் ஒருதடவை ஜபிக்கிறானோ தாமரையிலையில் ஜலம்போல் அவனிடத்தில் பாபஸம்பந்தமே ஏற்படுகிறதில்லை. மார்க்கத்தில் நடந்துவந்த ஒருவன் எதிர்பாராமல் வழிநடுவில் இந்தவூரில் ஓரிரவுதங்கியிருந்தால் அவனும் ஸம்ஸாரபந்தத்திலிருந்தும் விடுபடுகிறான். இந்த க்ஷேத்திரத்திலேயே எப்பொழுதும் வஸிப்பவர்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ. எதுவரையில் சூர்யனைப் பார்க்கவில்லையோ அதுவரையில்தான் இருட்டு இருப்பதுபோல் இந்த க்ஷேத்திரத்தினுடைய தர்சனம் ஏற்படாத வரையில்தான் ஸம்ஸாரபந்தமிருக்கும்; ஏற்பட்டால் உடனே நிவர்த்தித்துவிடும். இந்த க்ஷேத்திரத்தில் எவன் நித்யமாக அன்னதானம் செய்கின்றானோ அவனுடைய மாஹாத்மியத்தைக் கூறுவதற்கு நாறு

வருஷகாலமும் போதாது. தேவதைகளுடைய மாஸம் பிதுருக்களுடைய மாஸம். மாக மாஸம் இந்தமாஸங்களில் காவேரீதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து சுத்தனாயிருந்துகொண்டு பஸ்மருத்திராக்ஷங்களை தரித்து வேதத்தையறிந்த சிறந்த பிராமணர்களின் பொருட்டு எள்ளு போஜனம் இவைகளைக்கொடுத்து ஜம்புநாதர் அகிலாண்டேசுவரி இவர்களுக்கும் அர்ச்சனை செய்துகொண்டு எவன் இங்குவஸிக்கிறானோ அவன் ஸதாசிவஸ்வரூபம்தான். பிர்ம்மஸரஸ்ஸினுடைய தீர்த்தத்திலாவது காவேரீ தீர்த்தத்திலாவது ஸ்நாநம்செய்து ஸ்ரீ அகிலாண்டேசுவரியினுடைய ஸந்நிதியில் ஸங்கல்பம் செய்துகொண்டு பக்தியுடன் ஒவ்வொருதினமும் எவன் பிரதக்ஷிணம் செய்கிறானோ அவனுக்கு இவ்வுலகில் ஸகலஇஷ்டங்களும் சித்திப்பதுடன் பரலோகத்திலும் உத்தமமான கதியையடைகிறான். காசி, சிதம்பரம், திருவாரூர், திருவண்ணாமலை இந்த க்ஷேத்திரங்கள் ஈசுவரனுக்குப் பிரியமானவைகள். இங்கு வஸிப்பதுதேவலை. அதிகம்பேசுவதால் யாது பயன். அடிக்கடி சொல்லுகின்றேன். உன்னுடைய சுகத்தை நீ விரும்பினையேயானால் நான் கூறுவதைக் கவனமாய்க்கேள். இந்தகஜாரண்ய க்ஷேத்திரத்தைக் காட்டிலும் உத்தமமான க்ஷேத்திரமும் பஞ்சாக்ஷரத்தைக் காட்டிலும் சிறந்த மந்திரமும் பரமசிவனுக்கு மேலான தெய்வமும்இல்லையாதென்று நிச்சயமாகச்சொல்லுகின்றேன். என்று கஜாரண்யத்தினுடைய மாஹாத்மியத்தை விஸ்தாரமாக ஸூதர் நிரூபித்து ஜம்புநாதரையும் ஸ்ரீபார்வதிதேவியையும் பக்தியுடன் வந்தனம்செய்தார். கைலாஸபர்வதத்தில் விளங்கும் ஸுகத்தையுடையவர்களாயும் கஜாரண்யத்தில் வஸிக்கிறவர்களாயும் கலிதோஷத்தை நாசம் பண்ணுகிறவர்களாயும் காவேரியின் கரையிலிருப்பவர்களும் கணேசர், ஷண்முகர் இவர்களிடம் பிரீதியையுடையவர்களாயும் ஸகல இஷ்டங்களையும் கொடுப்பவர்களும் மறுஜன்மா இல்லாமல் செய்கின்றவர்களும் ஸர்

வஜனங்களுக்கும் தாய்தந்தையர்களாயும் ஜகத்திற்கு அதி பதியளாயுமிருக்கும் ஸ்ரீஜம்புநாதரையும் அகிலாண்டேசுவரி யையும் சரணமாக அடைகின்றேன். ஸூதர்: ஹே ரிஷி களே! கஜாரண்யத்திலுடைய மஹிமையைச் சிவனிடத்திலி ருந்தும் நந்திகேசுவரர் கேட்டார். அவரிடமிருந்து கேட்ட சதுர்முகனால் வியாஸருக்கு கூறப்பட்டது. அவரிடமிருந்து கேட்ட என்னால் அந்த மாஹாத்மியமானது உங்களுக்குச் சொல்லப்பட்டது. மிகவும் சிரேஷ்டமான இந்த ஜம்புநாத ருடைய மஹிமையை எவன்படிக்கிறானோ எவன்கேட்கிறா னோ சிரத்தமாக எழுதி வித்வானான சிவபக்தனின் பொரு ட்டு எவன்கொடுக்கிறானோ இவர்கள் புத்திர பௌத்திரர் களோடுகூட ஸகலபோகங்களையும் அனுபவித்து முடிவில் பிர்ம்மா முதலானவர்களுக்கும் அரிதான சிவலோகத்தை யடைந்து ஸகலபரிவாரங்களுடன் ஸுவர்ண விமானத்தில் ஸஞ்சாரம் செய்துகொண்டு சுகமாயிருக்கிறார்கள்.

பத்தொன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 20.

विंशे तु नन्दिने प्रोक्तमीशेन करुणाब्धिना ।
ब्रह्मेशवैभवं सूतः प्रोवाच परया मुदा ॥

இந்த இருபதாவது அத்தியாயத்தில் கருணாநிதியான ஈசுவரனால் நந்திகேசுவரருக்குச் சொல்லப்பட்ட பிர்ம்மேச வைபவமானது ஸூதரால் கூறப்படுகின்றது.

ரிஷிகள் ஸூதமுனிவரை நோக்கி கஜம், லூதை இவை களுடைய சரித்திரமானது கேட்கப்பட்டது. அதி

னால் நாங்கள் அதிஸந்தோஷத்தையடைந்தோம். இன்னும்
இருக்கும் இந்த கஜாரண்யத்தின் வைபவத்தை எங்களுக்கு
போதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். ஸூ
தர் இதைத்தான் முன்னொருஸமயம் நந்திகேசுவரர் பரமே
சுவரரை வினவுகின்றார். கைலாஸத்தில் வஸிக்கின்றவராயும்
தேவதேவராயும் உம்மையடைந்தவரை ரக்ஷிக்கிறவராயும் வி
ளங்கும் ஹே ஹர! உம்முடைய பிரஸாதத்தைச் சீக்கிரம்
உண்டுபண்ணுகிறதான அந்த ஆலயமானது எப்படி யாரால்
கட்டப்பட்டது ஸகல தேவதைகளுக்கும் ஈசனான ஹே பிர
போ! உம்முடைய அனுக்கிரகத்தைச் சீக்கிரம் உண்டுபண்
ணுகிறதான பிராகாரம் யாரால் ஏற்படுத்தப்பட்டது. அந்த
க்ஷேத்திரத்தினுடைய ஸமீபத்திலிருக்கிற லிங்கத்தினுடை
ய மஹிமையையும் எனக்குச் சொல்லவேண்டுமென்று கே
ட்கும் நந்திக்குப்பகவான் கூறுகின்றார். ஹே சைலாதரு
டைய புத்திர! உன்புத்தி நிர்மலமானது. கஜாரண்யேசுவரரு
டைய மஹிமையானது மிகவும் பரிசுத்தமானது. முன்னொரு
கல்பத்தில் பிர்ம்மாவினால் வினவப்பட்டநான் அவரின்பொரு
ட்டும் ஸநகாதிமஹரிஷிகளின் பொருட்டும் க்ஷேத்திர வைப
வத்தைச் சொன்னேன். ஹே கணசிரேஷ்ட! அந்தப்பிர்ம்ம
ஸ்தானத்தினுடைய வைபவத்தைக்கேள். வெகுகாலத்திற்கு
முன் இந்தஸ்தலத்தில் சதுர்முகரானவர் பஞ்சாக்னி மத்தியி
லிருந்துகொண்டு பஸ்மத்திரிபுண்டரங்களுடனும் ருத்திரா
க்ஷமாலைகளுடனும் கூடியவராயும் கிழங்கு, வேர், காத்து
இவைகளைப் புசிக்கிறவராயும் ஸ்ரீருத்திரம் பஞ்சாக்ஷரம் முத
லியஜபங்களை ஜபித்துக்கொண்டும் உக்கிரமான தபஸ்ஸைச்
செய்தார். மாகமாஸத்தில் மகாநக்ஷத்திரத்தில் இந்த க்ஷேத்
திரத்தில் ஜம்பூபலரஸத்தால் நிரம்பியிருக்கும் ஸரஸில் ஸ்
நாநம் செய்கிறவன் பிர்ம்மஹத்திமுதலான மஹாபாபங்கள்
செய்திருந்தாலும் அவைகளிலிருந்தும் விடுபடுகிறான். அற்
பபாபமுடையவர்களுக்கு அவைவிலகுவதில் சங்கை ஏது?

அந்தத்தீர்த்தின் கரையில் அற்பதானம்கொடுத்தாலும் பெரியதானத்தைச் செய்தபலம் உண்டாகும். ஜம்புதீர்த்தத்திற்குச் சமமானதீர்த்தம் மூவுலகங்களிலுமில்லை. அந்ததீர்த்தத்தில் ஸ்நானம்செய்து பரிசுத்தமான சரீரத்தையுடையவரும் வேதத்தையறிந்தவர்களுக்குள் சிறந்தவருமான பிர்ம்மாவானவர் அந்த இடத்தில் என்னை பரமேசுவரர் என்றுபெயர் ண்ட லிங்கத்தில் பூஜித்தார். அதில் அகிலாண்டேசுவரியான பார்வதிக்குப் பூஜிக்கவேண்டியதற்காக உத்தமமான ஸ்தலத்தைக் காண்பித்தார். இந்த க்ஷேத்திரத்தினுடைய வைபவமானது ரகஸ்யமாயுள்ளது. சதுர்முகர் தூபம், தீபம் நிவேதனம் முதலானவைகளால் என்னை ஆராதித்துப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து தன்பெயரால் பிரஸித்தியடைந்த முக்கண்ணரான தேவரை நன்றாய்ப்பூஜித்து ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தார்.

## ब्रह्मस्तुतिः ॥

नमो नमस्ते शशिशेखराय त्रिलोचनाय त्रिपुरान्तकाय ।
त्रैलोक्यनाथाय महेश्वराय ब्रह्मेश्वरायास्तु नमोस्तुनित्यम् ॥

नमोस्तु वह्नीन्दुदिनेशनेत्रत्रयीमयायाथ त्रियंबकाय ।
त्रिकाग्निकालाय सनातनाय ब्रह्मेश्वरायास्तु नमोस्तु नित्यम् ॥

उक्षाधिरूढाय दिगम्बराय श्रीकृत्तिवासाय पिनाकपाणये ।
नमोस्तु ब्रह्माच्युतवन्दिताय ब्रह्मेश्वरायास्तु नमोस्तु नित्यम् ॥

त्रिपुण्ड्रफालानलसूर्यचक्षुषे विदग्धकामाय महेश्वराय ।
श्रीरुद्रभष्यार्णरताय तुभ्यं ब्रह्मेश्वरायास्तु नमोस्तु नित्यम् ॥

दक्षादिदीक्षाभृशभङ्गदायिने गङ्गातरङ्गावलिसज्जटाय ।
नमो विषाहीन्दुविभूषणाय ब्रह्मेश्वरायास्तु नमोस्तु नित्यम् ॥

பிர்ம்மா சந்திரசேகரராயும் மூன்றுகண்களையுடையவரும் திருபுரர்கள் என்கிற அஸுரர்களை ஜயித்தவருமான உமக்கு வந்தனம். மூன்றுலோகங்களுக்கும் அதிபதியாயும் பிர்மேசுவரரென்று பெயர்பெற்றவருமான உமக்கு நமஸ்காரம். சூர்யன் சந்திரன் அக்னி இவர்களை நேத்திரமாகவுடையவரும் அநாதியாயும் விருஷபவாகனத்தில் வீற்றிருப்பவரும் யானைத்தோலை ஆடையாகத் தரிப்பவரும் பிநாகமென்கிற தனுஸ்ஸை ஆயுதமாகவுடையவரும் பிர்ம்மா, விஷ்ணு இவர்களால் நமஸ்கரிக்கத்தகுந்தவரும் மூன்று புண்டரங்களால் அலங்கரிக்கப்பட்ட நெற்றியையுடையவரும் ஸ்ரீருத்திரமென்கிற மந்திரமாகிற ஸமுத்திரமத்தியில் வஸிப்பவரும் தக்ஷருடைய யக்ஞ தீக்ஷையை பங்கம்செய்தவரும் கங்கையினுடைய அலைக்கூட்டங்களால் விளங்கும் ஜடையையுடையவரும் நர்த்தனம் செய்கிறவரும் அரவம் சந்திரன் இவைகளை பூஷணமாகவுடையவருமான ஸ்ரீமஹேசுவரரின் பொருட்டு நமஸ்காரம். இவ்விதம் பிர்ம்மாவால் செய்யப்பட்ட ஸ்துதியைக் கேட்டு ஸந்தோஷத்தையடைந்த நான் ஹே பத்மஜ! உமக்கு என்னவேண்டும் என்றுகேட்டேன். உடனே பிர்ம்மா நமஸ்காரம் செய்து பக்திசிரத்தையுடன் தெரிவிக்கின்றார். ஹே சந்திரசேகர! வேதங்களை எனக்குக் கொடுக்கவேண்டும் ஜகத்சிருஷ்டிக்கவேண்டிய சக்தியைக்கொடும். உம்முடைய சரணாம்போஜத்தில் திருடமான பக்தியையும் அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அவ்விதமே அவருக்கு அனுக்கிரகம்செய்து அந்தலிங்கத்தில் மறைந்துவிட்டேன். அவரும் வேதங்களிலும் உலகசிருஷ்டியிலும் அதிக ஸாமர்த்தியத்தைப் பெற்றார். இந்த க்ஷேத்திரத்தில் தவம்செய்ததினால் பிர்ம்மாவுக்கு இந்த மாதிரி பரமேசுவரானுக்கிரகமேற்பட்டு சிருஷ்டிகர்த்தாவாக ஆனார். ஸகலவேதங்களுடைய ஞானத்தையும் பெற்றார் என்று கூறிமுடித்தார்.

இருபதாவது அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் 21.

त्रेतायां गौतमस्तप्त्वा तपोऽहल्या वियोजितः ।
शङ्करेश प्रसादेन पुनराप सतां मुनिः ॥

கௌதமர் தன் பத்நியால் விரகிதராயிருக்கும் ஸமயத்தில் திரேதாயுகத்தில் இந்த க்ஷேத்திரத்தை யடைந்து தபஸ்செய்து சங்கரேசர்என்று பெயர்வாய்ந்த ஸ்ரீமஹேசுவரருடைய அனுக்கிரகத்தால் மறுபடியும் தன் பார்யையையடைந்தார் என்று இந்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

ஸூதர் கஜாரண்யமென்கிற மஹாக்ஷேத்திரத்தில் பிர்ம்மேசர் என்று பெயர்பெற்றும் சங்கரேசரென்றும் சிவன் விளங்கிக்கொண்டிருந்தார் என்றுகூறும் ஸூதரைப்பார்த்து முனிவர்கள் சொல்லுகின்றார்கள். கிருதயுகத்தில் பிர்ம்மேசுவரர் என்று பெயர்வாய்ந்தவரும் திரேதாயுகத்தில் சங்கரேசுவரர் என்று கியாதிபெற்றவருமான பரமேசுவரர் அந்த ஸமயத்தில் அதிகமான பிரஸித்தியையடைந்தது யாதுகாரணம், அதைத்தாங்கள் தயவுசெய்து விஸ்தாரமாக எங்களுக்குப் போதிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். ஸூதர்: நைமிசாரண்யவாஸிகளான ஹே முனிசிரேஷ்டாரளே! கேளுங்கள். திரேதாயுகத்தில் கௌதமர் கஜாரண்யத்தில் தவம்புரிந்தார். பத்நியான அகல்யையில்லாமலும் சிரமத்தையடைந்த மனதோடுகூடியவருமாக இருந்துகொண்டு பத்துவருஷகாலத்தை தவத்தினாலேயே போக்கடித்தார். அந்தஸமயம் பஸ்மருத்திராக்ஷாலங்கிருதராயிருந்துகொண்டு சதருத்திரத்தைப் பாராயணம் செய்தார். பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்தார். அதிக பக்தியுடன் வனத்தினி

ருக்கும் சிறந்த வாஸனையுடைய மலர்களைக்கொண்டு சங்கரரைப்பூஜித்தார். ஹே மஹாரிஷிசிரேஷ்டர்களே! இந்தப்பிரகாரம் அந்தக்ஷேத்திரத்தில் தவம்செய்யும் அந்தகௌதமருக்கு முன்னிலையில் பிரம்மாவால் பூஜிக்கப்பட்டதும் ஸர்வ இஷ்டங்களையும் கொடுப்பதுமான லிங்கத்திலிருந்தும் மஹேசவரர் தோன்றினார். திங்களைச் சடையில் தரிப்பவனும், விஷமமான நேத்திரத்தையுடையவரும், ஜடையுடன்கூடியவரும் வரம், அபயம், மான், தனுஸ், முதலியவைகளால் விளங்கும் கைகளையுடையவரும், ஸர்ப்பத்தை யக்ஞோபவீதமாகத்தரிப்பவரும், பஸ்மருத்திராக்ஷங்களால் அலங்கிருதரும், மன்மதனை தகிக்கப்பட்ட பஸ்மாவினால் பூசப்பட்ட சரீரத்தையுடையவரும், தேவதைகளால் பூஜிக்கப்பட்டவரும், பக்கத்தில் நிற்பவளும் ஸகல ஆபரணங்களாலும் பூஷிதையாயும் ஜயை முதலான ஸகிகளால் ஸேவிக்கப்பட்டவளாயுமிருக்கிற பார்வதீ தேவியோடுகூடியவரும், கஜாநநர், ஷண்முகர், நந்திகேசுவரர், பிருங்கி முதலியவர்களால் சூழப்பட்டவரும் சத்திரம், சாமரம், குடை முதலானவைகளைத் தரிக்கும் கணங்களால் ஸேவிக்கப்பட்டவருமான ஸ்ரீ சங்கரரைப்பார்த்தார். உடனே பிருத்யரான கௌதமர் ஸாஷ்டாங்கமாக அந்தச்சந்திரசேகரரை நமஸ்கரித்து எழுந்திருக்காமலிருக்கும் அம்முனியை சிவன் நந்திகேசுவரரைக்கொண்டு தூக்கி நிறுத்தும்படி செய்தார். அவரும் வணக்கத்துடன் நின்றுகொண்டு பரமேசுவரரைப் பின்வருமாறு துதிக்கின்றார்.

## ॥ गौतमस्तुतिः ॥

सदेहं जगतो मूलकन्दं कन्दर्पशासनम् ।
खट्वाङ्गिनं खड्गखेटधरं हेतिकराम्बुजं ॥ १ ॥

गङ्गाधरं गरगळं घण्टाकर्णसमर्चितम् ।
टङ्कहस्तं ठादिमन्त्रवेद्यं वैद्यं महारुजाम् ॥ २ ॥

डमरुकरसंघुष्टविष्टपानिष्टहारिणम् ।
निर्मितानेकदेशादिविनतावनकारिणम् ॥ ३ ॥

पद्माक्षपद्मसंभूताद्यनालोकितपच्छिरम् ।
फणिकङ्कणभूषाढ्यं भणिताद्यखिलागमम् ॥ ४ ॥

बन्धमोचनकृद्देवं भक्ताभक्तेषु शंकरम् ।
भयदं दुष्टमनसां भक्तेष्वभयदायकम् ॥ ५ ॥

भयस्करं महामायानिर्वर्तनकरं हरम् ।
यशस्करं भास्कराक्षं यमिमानससंस्थितम् ॥ ६ ॥

रमारमणपूज्याङ्घ्रिरङ्गस्थानसुनृत्तकम् ।
लवलेशांशसंभूतं जगत्त्रयविनोदिनम् ॥ ७ ॥

वामदेवं वासवार्च्यं वरदाभयपाणिनम् ।
षडूर्मिरहितं षोढान्यासपूज्यमुमाधवम् ॥ ८ ॥

सर्वात्मकं सदा शान्तं सनकादिसमर्चितम् ।
हरं जगत्त्रयहरं हरिणाङ्ककलाधरम् ॥ ९ ॥

क्षयद्वीरं क्षितिरथं क्षयापस्मारनाशनम् ।

சரீரத்தோடுகூடியவரும் ஜகத்திற்கு மூலகாரணராயும் அனங்கனேவென்றவரும் கட்வமென்கிற ஆயுதம் சத்தி இவைகளைத்தரிப்பவரும் கங்கையை முடியிலுடையவரும் விஷத்தைப்புசித்தவரும் கண்டாகர்ணனால் அர்ச்சிக்கப்பட்டவரும் டக்காயுதத்தைக் காத்திலேந்தியவரும் டகாராதியான மந்திரத்தால் அறியத்தகுந்தவரும் ஸகலலோகங்களுக்கும் வைத்தியராயும் கையில் விளங்கும் டமுருவாத்தியத்தின் ஒலியால்போக்கப்பட்ட லோகங்களுடைய கஷ்டங்களையுடையவரும் தன்னை வணங்கும் விண்ணவர்களைப்பாதுகாப்பவரும் சதுர்முகர் சக்ராயுததரர் இவ்விருவர்களாலும் காணமுடியாத பாதம் சிரஸ் இவைகளையுடையவரும் சர்ப்பங்களைக் கங்கணமாகப்பூண்டவரும் ஸகல வேதங்களையும் வெளியிட்டவராயும் ஸம்ஸாரபந்தத்தை நிவர்த்திசெய்கிற தேவதையாயும் பக்ஷபாதமின்றி எல்லாஜனங்களுக்கும் சுகத்தைக்கொடுப்பவரும் அஞாநியானமாயையை விலக்குகிறவரும் சிறந்த கீர்த்தியையுண்டுபண்ணுகிறவரும் சூர்யனை நேத்திரமாகவுடையவரும் முனிகளுடையமனதில் வஸிப்பவரும் ரமாபதியான விஷ்ணுவால் பூஜிக்கப்பட்ட சரணங்களையுடைவரும் நன்றாய் நர்த்தனம் செய்கிறவரும் தன்னுடைய அம்சலேசத்தால் சிருஷ்டிக்கப்பட்ட ஸகலலோகங்களையுடையவராயும் வாமதேவர் என்று பெயர்பூண்டவராயும் இந்திரனால் பூஜிக்கப்பட்டவரும் ஷடூர்மியில்லாதவராயும் ஆறுவிதங்களான நியாஸங்களால் பூஜிக்கத்தகுந்தவராயும் உமைக்குப்பதியாயும் ஸர்வலோகஸ்வரூபியாயும் எப்பொழுதும் சாந்தஸ்வபாவமுடையவரும் ஸநகர்முதலான முனிகளால் நன்கு அர்ச்சிக்கப்பட்டவரும் பிரளயகாலத்தில் மூன்றுலோகங்களையும் ஸம்ஹாரம் பண்ணுகிறவரும் சந்திரகலையைத்தரிப்பவரும் சூரர்களுக்குச்சத்ருவாயும் பூமியை ரதமாகக்கொண்டவரும் கிருகபீடை அபஸ்மாரதோஷம் இவைகளைப் போக்கடிப்பவருமான ஸ்ரீஸாம்பஸதாசிவனை

நமஸ்கரிக்கின்றேன் என்று இவ்விதம் துதித்து கௌதமர் எனக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணினர்! நானும் திருப்தனுயிருந்துகொண்டு வேண்டிய வரனைக்கேளுமென்று அவரிடம் சொன்னவுடன் அவர் என்னைப்பிரஸன்னனுகவறிந்து கொண்டு மிகவும் வணக்கத்துடன் தங்களுடைய பாதாரவிந்தங்களில் பக்திதான்வேண்டுமென்றுவேண்டினர். பிறகு கௌதமர் ஹே ஸ்வாமிந்! முன்காலத்தில் பிர்ம்மாவால் அர்ச்சிக்கப்பட்டவராய்க்கொண்டு பிர்மமேசர் என்கிறபெயரால் பிரஸித்தியடைந்தீர். ஹே தயாமூர்த்தே! மஹேசுவா! இப்பொழுது சங்கரேசர் என்கிறபெயர் ஏற்பட்டிருக்கின்றது. யாதொருகாரணத்தால் எனக்கு ஸுகத்தையுண்டு பண்ணுகிறீரோ அதினுல் சங்கரேசராகவுகிறீர் என்று துதித்தார். இவ்விதமே உமக்கு ஸுகமுண்டாகட்டும். அகல்யையோடு நீரும் கௌதமராகஆகும் என்று அனுக்கிரகம் செய்து வரதரான சங்கரேசுவரன்மறைந்தார். பிறகு கொஞ்சகாலம் சென்றதும் கௌதமர் அகல்யையோடு சேர்ந்தார். அந்த க்ஷேத்திரத்தில் கௌதமருக்காக மஹேசுவான் பிரஸன்னராகி சங்கரேசர் என்கிற பெயரையடைந்தார். அதுமுதற்கொண்டு அந்த க்ஷேத்திரத்தில் பிர்ம்மேசரும் கியாதியையடைந்தார். இவ்விதம் கஜாரண்யத்திற்கேற்பட்ட கீர்த்தியை எவன்கேட்கிறானே அவன் புண்யவான், ஸ்ரீசங்கரேசாருடைய கதையை எவன்படிக்கிறானே அவன் நித்யமாய் விளங்கும் சிவலோகத்தையடைகிறான்.

இருபத்தொன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் 22.

रावणोपद्रुतश्श्रीदो द्वाविंशे तप्तवांस्तपः ।
राजराजेश्वरं लिङ्गं संपूज्य सुखमाप सः ॥

ராவணனால் உபத்திரவப்படுத்தப்பட்ட குபேரன் இந்த க்ஷேத்திரத்திற்குவந்து தபஸ்செய்து ராஜராஜேசுவரர் என்கிற லிங்கத்தைப் பூஜித்து ஸுகமடைந்தார் என்று இந்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

ஸூதர்: விச்ரவஸ்ஸுக்கு ராவணனென்றும் குபேரனென்றும் இரு புத்திரர்களிருந்தார்கள். அவர்கள் வெவ்வேறான மாதாவிடமிருந்து உண்டானபடியால் ஸ்நேகமில்லாமல் கோபத்தால் சிவந்த கண்களையுடையவர்களாய்க்கொண்டு ஒருவருக்கொருவர் யுத்தம் செய்துவந்தார்கள். யுத்தத்தில் ஜயிக்கப்பட்ட குபேரனுடைய புஷ்பக விமானமும், ஐசுவரியமும் ராவணனால் அபகரிக்கப்பட்டது. உடனே குபேரன் லஜ்ஜையால் துக்கப்பட்டுக்கொண்டு கைலாஸபர்வதத்தையடைந்தான். அங்கு தவம்செய்து மஹாதேவரை ஆராதித்தான். பின்னும் பனிரண்டுவருஷத்தில் பூர்த்தியடையக்கூடிய பாசுபதம் என்னும் பெயர்கொண்ட விருதத்தை அனுஷ்டித்துக்கொண்டு அக்னி என்பதை முதலாகவுடைய மந்திரங்களால் விபூதியைச் சரீரத்தில் தரித்துக்கொண்டு பதினாயிரம் தடவை பஞ்சாக்ஷரத்தையும் ஆவர்த்தி செய்துகொண்டும், ஸ்ரீ ருத்திரத்தை ஜபித்துக்கொண்டும் ஒவ்வொருநாளும் மூன்றுதடவை ஸ்நானம்செய்து ஸ்ரீ பரமேசுவர லிங்கத்தைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து பத்திரங்களாலும் புஷ்பங்களாலும் பழங்களாலும் தூபதீப நைவேத்தியங்களாலும் குபேரன் ஆராதித்து மேல்வருமாறு ஸ்தோத்திரம்பண்ணினான்.

## ॥ कुबेरस्तुतिः ॥

नमस्ते देवेश त्रिपुरदळन ह्यन्धकरिपो
महावेतण्डत्वक्परवश जटाहीन्दुगर भृत् ।
प्रपद्ये त्वां शश्वत्क्षितिरथ विपन्नार्थिमथन
त्रिलोकैकस्वामिन्हर वरद सर्वात्मक भव ॥

नमस्ते कैलासे विरचितलसच्चारुवसते
कपर्दिन्विश्वात्मन्निरतिशयमायामयहर ।
त्रिशूलाङ्कज्वालाकवलितयमध्वान्तपटल
शरीरे शर्वाण्याकलितपरदेहार्धकभृते ॥

नमस्ते चन्द्रांशुस्फुटशतविदीप्याधिकयशो
गणेशस्कन्दाद्यैरजहरिनताङ्घ्रिंबुजविभो ।
प्रपन्नं मां शश्वत्परिकलय दृष्ट्वा करुणया
दयांभोधे देव त्रिदशपरिणामैकद सदा ॥

குபேரன்: தேவதைகளுக்கெல்லாம் அதிபதியாயும், திரிபுராஸுரர்களையும் யமனையும் ஜயித்தவராயும், சிறந்த யானையினுடைய தோலை வஸ்திரமாகத் தரிப்பவரும், ஜடையில் சந்திரன், கங்கை, ஸர்ப்பம் இவைகளை பூஷணமாகவுடையவரும், பூமியை ரதமாகவுடையவரும், தன்னைச் சரணமாகவடைந்தவர்களைப் பாதுகாப்பவரும், மூன்றுலகங்களுக்கும் ஒரே நாதராயும், ஸகல இஷ்டங்களையும் கொடுப்பவருமான ஹே பரமேசுவரா! உமக்கு நமஸ்காரம். மிகவும் அழகான கைலாஸகிரியில் வாஸம் செய்கிறவரும், ஜடையையுடையவரும், ஸர்வ ஜகத்ஸ்வரூபியாயும், மாயாஸ்வரூபியாயும், சூலாயுதத்தை அடையாளமாகவுடையவரும், பார்வதியால் வஸிக்கப்பட்ட தன்னுடைய பாதி சரீரத்

தையுடையவருமான ஹே சங்கர! உம்பொருட்டு வந்தனம். அநேக சந்திரகிரணங்கள் போல்பிரகாசிக்கின்ற அதிகமான கீர்த்தியையுடையவரும், கணேசர், ஸ்கந்தர், இவர்களுடன் கூடியவரும் பிர்ம்மா, விஷ்ணு இவர்களால் நமஸ்காரம் பண்ணப்பட்ட பாதாம்புஜத்தையுடையவரும், கருணைக்கடலாயும் தேவதைகளுக்கு ஹிதத்தையே எப்பொழுதும் செய்கிறவராயும் விளங்கும் ஹே தேவ! சரணுகதியடைந்த என்னைக் கருணையுடன் பார்த்துப்பாதுகாரும்.

இந்தப்பிரகாரம் குபேரனுல் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட கிரிசர் பிரஸந்நராயிருந்துகொண்டு குபேரனைப்பார்த்து பயப்படாதே என்று அன்புடனுரைத்துக் கூறுகின்றார். திக்பதியான ஹே குபேர! ஸத்யமான என்னுடைய வசனத்தைக்கேள். ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் தசரதன் என்கிற அரசனுக்குப் புத்திரராகத்தோன்றி ராவணனை யுத்தத்தில் அடிக்கப்போகின்றார். அப்பொழுது உன்னிடமிருந்து கொண்டுபோகப்பட்ட புஷ்பகவிமானமானது உன்னையடையப்போகின்றது. கூடியசீக்கிரத்தில் திக்பதியாயிருக்கும் தன்மையையும் தனேசனுயிருக்கும் தன்மையையும் நீ அடையப்போகின்றாய். அதற்கு ஒரு உபாயமிருக்கின்றது. அதையறிவிக்கின்றேன் கவனமாய்க்கேள்.

காவேரிநதிக்குத் தென்கரையில் கைலாஸத்தைக்காட்டிலும் சிறந்ததாயும் ஞானத்தை விருத்திபண்ணக்கூடியதும், அதிகமான புண்யத்தைக்கொடுக்கிறதும், கஜாரண்யமென்று மிகவும் பிரஸித்திவாய்ந்த ஒரு க்ஷேத்திரமிருக்கின்றது. அதில் ஸகல தீர்த்தங்களும் ஸர்வக்ஷேத்திரங்களுமிருக்கின்றன. ஸ்ரீ அகிலாண்டமஹாதேவியினுடைய க்ஷேத்திரம். அதற்கு ஜம்புகேசுவரம் என்றுபெயர். ஸ்ரீ பராதேவதையினுடைய கரகமலங்களால் உண்டுபண்ணப்பட்டதும் ஜலஸ்வரூபமாயும் விளங்கும் சிறந்த லிங்கமானது ஜம்புவிரு

க்ஷேத்திரனுடைய மூலத்தில் பிரதிஷ்டைசெய்யப்பட்டிருக்கின்றது. அந்த லிங்கத்திற்கு நான்கு பக்கங்களிலும் தேவ ரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்டவைகளும், நந்திகேசுவரர் முதலான கணநிபர்களால் பூஜிக்கப்பட்டவையுமான முக்கியமான ஒன்பது தீர்த்தங்களிருக்கின்றன. மற்றும் பலதீர்த்தங்களுமிருக்கின்றன. அந்தந்த தீர்த்தங்களும் உண்டுபண்ணினவர்களுடைய பெயருடன் கூடினவைகள். அந்த க்ஷேத்திரம் ஐந்து குரோசம் விஸ்தீர்ணமுடையது. இந்த இடத்தில் மரித்தவர்களுக்கு மறுபிறப்பில்லை. நந்தீசுவரர் வாலகில்யர், ஸோமேசர், வாமதேவர், நித்ராநாசகேசர், பத்மேசர், மாகதேசுவரர், ராமச்சந்திரஸாஸ்ஸலுக்குப்பின்பக்கமாய் நீலஹரீசுவரர் அதற்கு வாயுதிக்கில் துவைபாயனேசுவரர் என்கிற மஹாலிங்கமும் இந்திரேசுவரர், மதங்கேசுவரர், பார்த்தீசுவரர், சங்கரர் கிழக்குதிக்கில் விருஷத்வஜேசுவரர், புலஸ்தியேசர், கஹ்ளாளசர், தெற்குதிக்கில் அச்விநீ, ஈசானர் இந்த இருவரும் பர்வதேசர், ஹலீச்வரர், வருணேசர், அகளங்கேசர், பைப்பலாதேசுவரர், கருணேசர், வரேசர், வாராணஸீசுவரர், வியாக்ரபாதேசுவரர், ஆனந்தேசர் முதலான லிங்கங்கள் இருக்கின்றன. நீ மித்திரனாக இருக்கிறபடியால் உனக்குச் சொல்லப்பட்டன. நீயும் இந்த க்ஷேத்திரத்திற்கு வடக்குபாகத்தில் உன்பெயரால் சங்கரரைப் பிரதிஷ்டைசெய்து அதற்கு ராஜராஜேசுவரர் என்று உன்பெயரைவைத்து அதை ஆராதித்து அதினிடத்திலிருந்தும் இஷ்டத்தையடையப்போகின்றாய். என்று சம்புவால் சொல்லப்பட்ட குபேரன் சுஜாரண்யத்தையடைந்தான். சிவஸ்தானமாயும் புக்தி முக்தி இவைகளைக்கொடுக்கின்றதுமான அந்தக்ஷேத்திரத்தில் விளங்கும் பரிசுத்தமாயும் புண்யமாயுமுள்ள காவேரீதீர்த்தத்திலும் ஜம்புதீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து விபூதிருத்ராக்ஷமாலை இவைகளையணிந்து மஹேசுவரருடையலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து அதற்குராஜரா

ஜேசுவரர் என்று பெயர்கொடுத்துப்பலவித உபசாரங்களால் அதைதனன்குபூஜித்து சிரஸில் விளங்கும் திங்களையுடைய அந்த அஷ்டமூர்த்தியைத் தனேசுவரன் துதிக்கின்றான். தனபதி: தேவர்களுக்கெல்லாம் தேவராயும் கருணைக்கிருப்பிடமாயும் வேறுகதியில்லாதவர்களுக்குப் பந்துவாயும் ஸமுத்திரத்தைபாணம்வைக்கும் பையாகவுடையவரும் கைலாஸபர்வதத்தில் வஸிப்பவரும் பிநாகத்தைக்கையில் தரிப்பவருமான ஹே ஹர! ஹே மஹேச! பாபியாயும் பிறருக்கு ஹிம்ஸை செய்கிறவனுயுமிருக்கும் ராவணனால் கஷ்டப்படுத்தப்பட்ட என்னைப்பாதுகாரும். என்றுபிரார்த்திக்கும் குபேரனுடைய வசனத்தால் ஸந்தோஷத்தை யடைந்த விச்வேசுவரரானவர் அந்தத்தனபதியை திக்பதி என்கிறஸ்தானத்தில் ஸ்தாபித்து திரிசேதித்திரானவர் அவனை மித்திரனாகவும் தன்னுடைய தயைக்குப்பாத்திரனாகவும் செய்துகொண்டார். குபேரனும் லிங்கத்தை ஸ்தாபனம்செய்தமகிமையால் ஸந்தோஷமாகத் தன்னுடைய ஸ்தானத்தைப்பெற்று ஸுகித்திருந்தான்.

இருப்பத்திரெண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 23.

त्रयोविंशे तु शोणाक्षचोलः शङ्करबोधितः ।
गण्डक्युपलसंभूतं विमानं नीतवानिति ॥

ஸ்ரீசங்கரரால் அறிவிக்கப்பட்ட சோணாக்ஷனென்கிற சோளராஜன் கண்டகீநதியினுடைய கற்களால் கட்டப்பட்ட விமானத்தை இந்த க்ஷேத்திரத்திற்குக் கொண்டுவந்தானென்று இந்த இருபத்திமூன்றாவது அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

முனிகள்; ஹே ஸூதமஹரிஷே! அந்த கஜாரண்யமெ
ன்கிற க்ஷேத்திரத்தில் இன்னும் என்ன விசேஷ
மிருக்கின்றது. சோளமன்னனுடைய சரித்திரம் இருந்தா
லும் அதையும் கூறவேண்டுமென்று பிரார்த்திக்கும்பொழுது
ஸூதர் மொழிகின்றார். ஹே முனிகளே! கேளுங்கள், மஹாத்
மாவாயும் சோணாக்ஷன் என்று பெயர் பெற்றவனாயுமிருக்
கும் சோளபூபதி மூர்த்தி குபேரனுக்கு ஒப்பாகவிருந்தான்.
மந்திரிகளோடுகூடத் தன்னுடைய பிரஜைகளையும் சிற்றரசர்
களையும் நீதிநெறிதவறாமல் ரக்ஷித்துவந்தான். அவனுக்குச்
சோணாக்ஷசோளன் என்று பிரஸித்தமான பெயர் உண்டா
யிற்று. ஜீர்ணமான பல சிவக்ஷேத்திரங்களை உத்தாரணம்
செய்தான். ஒருஸமயம் ஸேனைகளுடன் ஸஞ்சாரம்செய்யும்
பொழுது புண்யமான கஜாரண்யத்தை யடைந்தான். அங்கு
வந்து ஜம்புநாதரான பகவானைத் தர்சனம்செய்து நமஸ்கரி
த்து மிகவும் பக்தியுடன் அவரையும் அவரதுபத்நியான அகி
லாண்டேசுவரியையும் பூஜித்து அந்த க்ஷேத்திரத்திலேயே
நியமமாக ஒருமாஸம் வஸித்தான். அந்த ஸமயத்தில் சோ
ளமன்னன் சம்புவினுடைய கர்ப்பகிருகத்தை நன்றாய்க் கட்
டவேண்டுமென்று கருதினான். அன்றிரவு அவனுடைய
ஸ்வப்னத்தில் பஸ்மருத்திராக்ஷாலங்கிருதராயும் த்ரிபுண்ட
ரங்களால் விளங்கும் நெற்றியையுடையவரும் ஜடைகிரீடம்
இவைகளுடன் கூடியவரும் சுத்தமான காஷாயவஸ்திரத்
தைத் தரிப்பவரும ஸகலாபரணங்களாலும் பூஷிதையான
தன் பார்யையுடன் கூடியவராயும் தாபஸரூபத்தைத்தரித்த
வருமான தேவரான முக்கண்ணன் நித்திரையிலிருக்கும் சோ
ணாக்ஷனை எழுப்பி அடியில்வருமாறு கூறுகின்றார். ஈசுவரர்:
ஹே சோளஅரசனே! எழுந்திரு; உனக்கு மிகவும் ஹித
மான வசனத்தைச் சொல்லுகின்றேன். சிவனிடத்தில் பிரீ
தியுடையவனாயும் புண்யத்தைச் செய்கிறவனாயுமிருக்கிற நீ
எனக்கு பக்தனாகிறாய். நான் சொல்வதைக் கவனமாய்க்

கேள். கண்டகீ என்கிற நதியினுடைய தீரத்தையடைந்து அங்கு ருத்ரகோடீசுவரம் என்று பெயர்பெற்றதும் கோடி ருத்திரர்களால் பூஜிக்கப்பட்டதும் அதிகமகிமைபெற்றது மான ஒரு க்ஷேத்திரமிருக்கின்றது. அந்த நதியில் ஸ்நாநம் செய்து ருத்திரகோடீசுவரர் என்று பெயர்வாய்ந்த என்னைப் பூஜித்து அங்குவிளங்கும் கிரிஜையான தேவியையும் அர்ச்சித்து ஹே நாபதே! அந்த இடத்திலிருக்கும் கைலாஸகிரி சிகரத்திற்குச் சமானமாயும் ஆச்சர்யத்தையுண்டுபண்ணுகிற தாயும் தேவதைகளால் பூஜிக்கப்பட்டதும் என்னையுத்தேசித்து முன் விசுவகர்மாவால் நிர்மாணம் செய்யப்பட்டது மான சிறந்த அந்த விமானத்தைக் காவேரி மத்யப்பிரதேசத்திலிருக்கும் இந்த க்ஷேத்திரத்தில் ஸ்தாபனம் செய். விபூதிப்பிராகாரமென்பது நான்தான். அது என்னுடையதே அது எனக்கு அதிகப் பிரியத்தைக் கொடுக்ககூடியது. ஆகையால் அதை நன்றாக நானே கட்டுகிறேன் என்று சொல்லி கஜாரண்யேசுவரரான பகவான் மறைந்துவிட்டார். மறுநாள் காலையில் அரசன் எழுந்திருந்து மந்திரிகளிடம் இரவு நடந்த விருத்தாந்தத்தை யறிவித்தான். அவர்களும் திருப்தியாக அங்கிகரித்தவுடன் அப்பொழுதே ஸகல ஸைந்யங்களுடனும் புறப்பட்டு நதிகள், நதங்கள், பர்வதங்கள், வநங்கள் முதலியவைகளைத் தாண்டி ருத்திரகோடி க்ஷேத்திரத்தில் பிரகாசிக்கும் கண்டகீ நதியையடைந்தான். அங்குசென்று தெளிவான புண்யதீர்த்தத்தால் நிரம்பிய அந்த நதியில் விதிப்பிரகாரம் ஸ்நாநம்செய்து பிதுர்க்களுக்கும், ரிஷிகளுக்கும், தேவதைகளுக்கும் தர்ப்பணம்செய்து பிராமணர்களின்பொருட்டு விசேஷ தானங்களைக் கொடுத்துப் பிறகு ருத்திரகோடீசுவரருடைய ஸந்நிதியையடைந்து பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து அர்ச்சித்து ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தான்

# शोणाक्षस्तुतिः ॥

नमो नमस्ते शशिशेखराय गङ्गाधराय त्रिपुरान्तकाय ।
श्रीरुद्रकोट्यर्चितपादुकाय हरीन्द्रविष्णव्ब्जजवन्दिताय ॥

नमो नमस्तेन्तकनशकाय श्रीव्योमकेशाय सदाशिवाय ।
श्रीरुद्रकोट्यर्चितपादुकाय भोगीन्द्रभूषाय नमश्शिवाय ॥

नमो नमस्ते हरिसायकाय क्षितिरथायान्धकसूदनाय ।
श्रीरुद्रकोट्यर्चितपादुकाय त्वनङ्गमातङ्गभिदे शिवाय ॥

नमो नमस्ते भवरोगनाशिने त्रिलोचनायाथ महेश्वराय ।
श्रीरुद्रकोट्यर्चितपादुकाय दक्षाध्वरध्वंसनहेतवे नमः ॥

சோணாக்ஷன்: சந்திரனையும் கங்கையையும் ஜடையில் தரிப்பவரும் திரிபுராஸுரர்களுக்குச் சத்ருவாயும் ஸ்ரீருத்திரகோடியால் அர்ச்சிக்கப்பட்ட பாதுகைகளையுடையவரும் பிர்ம்மா விஷ்ணு இந்திரன் இவர்களால் வந்தனம் செய்யபட்டவருமான உமாகாந்தனின் பொருட்டு நமஸ்காரம். அந்தகனை வதம் செய்தவராயும் ஆகாயத்தைக் கேசமாயுடையவரும் சிறந்த ஸர்ப்பங்களை ஆபரணமாகவுடையவரும் ருத்ரகோடிகளால் பூஜிக்கப்பட்ட பாதுகைகளையுடையவருமான ஸ்ரீஸதாசிவருக்கு வந்தனம். விஷ்ணுவை பாணமாகவுடையவரும் பூமியை ரதமாகக்கொண்டவரும் யமனுக்குச் சத்துருவாயும், மன்மதன் எனப் பெயர் கொண்ட மதயானையைப் பிளந்தவராயும் ஸ்ரீருத்ரகோடிகளால் பூஜிக்கப்பட்ட பாதுகைகளையுடையவருமான சிவனின் பொருட்டு நமஸ்காரம். ஸம்ஸாரரோகததை நாசம் செய்கிறவரும் மூன்று கண்களையுடையவரும் தக்ஷருடைய யாகநாசத்திற்குக் காரணபூதராயும் ஸ்ரீருத்திர கோடிகளால் அர்ச்சிக்கப்பட்ட

பாதுகைகளையுடையவருமான மஹேசுவரரின் பொருட்டு நமஸ்காரம். இவ்விதம் சோளபூபதியான சோணாக்ஷன் ஸ்ரீருத்திரகோடீசரை நன்கு ஸ்தோத்திரம் செய்து அவருடைய பிரஸாதத்தைப்பெற்றான். ருத்ரகோடீசரும் ஸந்தோஷங்கொண்டு அரசனைப்பார்த்துப் பின்வருமாறு மொழிகின்றார். ஹே சோளமன்ன! எழுந்திருந்து கண்டகியில் ஸ்நாநம்செய். பிறகு அந்நதியின் நடுமத்தியிலிருந்தும் கைலாஸசிகரம்போலும் கண்டகீகற்களால் சூழப்பட்டதும் முன் த்வஷ்டாவால் செய்யப்பட்டதும் அழகாயுமிருக்கும் கர்ப்பகிருகத்தை ஹே மஹீபதே! உன் கையிலெடுத்துக்கொண்டு ஜம்பூக்ஷேத்திரம் சென்று அங்கு விளங்கும் ஜம்புநாதருக்குக் கர்ப்பகிருகமாக ஏற்பாடு செய்யென்று கூறினார். இவ்விதம் மொழிந்த ஸ்ரீருத்ரகோடீசருடைய வசனத்தைச்செவியுற்ற சோளவேந்தன் ஸந்தோஷத்துடன் அஞ்சலிபந்தம் செய்துகொண்டு விஷமாக்ஷரைப்பார்த்து அறிவிக்கின்றான். ஹே ஸ்வாமிந்! கண்டகியினுடையசிலைகளால் ஸம்புடமாகவிருக்கும் அதை மானிடரூபனானநான் கஜாரண்யருடைய கர்ப்பகிருகத்தை எப்படிக்கொண்டுபோவேன். அதற்குஉபாயத்தைத்தாங்கள் தெரிவித்தால் அவ்விதம் செய்கிறேனென்று பிரார்த்திக்கும் சோணாக்ஷனைப்பார்த்துப் பிரீதியுடன் பகவானறிவிக்கின்றார். ஈசுவரன்: இந்தக்கண்டகீநதியினுடைய மடுவில் நீ ஸ்நாநம்செய்தால் காவேரியினுடையமத்தியிருந்தும் கர்ப்பகிருகம் வெளிக்கிளம்பும். ஆகையால் ஹே மஹீபதே! நீ ஸேனைகளுடன் கூட சீக்கிரம்போ என்று ஆக்ஞை செய்தார். சிவாக்ஞையைச்சிரமேற்கொண்ட அவ்வரசனும் மூன்றுமாதங்களில் வந்துசேர்ந்தான். கஜாரண்யத்தையடைந்த சோளபதி காவேரியின் ஜலத்தில் ஈசருடைய கர்ப்பகிருகத்தைப் பார்த்தான் உடனே அதிகஸந்தோஷத்துடன் அதை ஜம்புமூலத்தில் பிரதிஷ்டைசெய்தான். புண்யசாலியாயும் சம்புசரணாரவிந்தத்தில் பக்திமானு

யுமிருக்கும் அந்தச்சோளராஜன் கஜாரண்யேசுவாருடைய பிரஸாதத்திற்குக் காரணமான பிராகாரத்தை இந்தப்பி ரகாரம் நிர்மாணஞ்செய்தான். இதினால் விசேஷ ஸந்தோஷ த்தையடைந்த சோளனைப் பார்க்கவேண்டி சேரபூபதி பாண்டியவேந்தன் முதலான பாராக்கிரமசாலிகளான பல அரசர்கள் வந்தார்கள். உடனே ஸ்ரீ ஜம்புநாதசரணாம்புஜ த்தில் பக்தியுள்ளவர்களாகவும் அவரைப்பூஜிக்கிறதில் அதிக ஆஸ்தையுடையவர்களாகவுமிருந்தார்கள்.

இருபத்திமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 24.

चतुर्विंशे नृपाश्चेरमुख्याः प्राकारमण्डपान् ।
अकुर्वन् भूतिसालं तु स्वयमाबन्धयाच्छिवः ॥

இந்த அத்தியாயத்தில் சேரன் முதலான அரசர்கள் ஜம்புநாத க்ஷேத்திரத்தினுடைய பிராகாரம், மண்டபம் இவைகளைக் கட்டினார்கள் என்றும் விபூதிப்பிராகாரத்தை ஸ்ரீ பரமேசுவரரே கட்டினாரென்றும் கூறப்படுகின்றது.

ஸூதர்: சோளன், சேரன் முதலான அரசர்கள் அனைவரும் இந்த க்ஷேத்திரத்தையும் ஸ்ரீஜ ம்புநாதரான மஹேசுவரரையும் ஸ்ரீ அகிலாண்டேசுவரியை யும் பார்த்து மிகவும ஸந்தோஷத்தையடைந்தார்கள். அகி லாண்டநாயகியையும் அவள்பதியான சங்கரரையும் பிரதக்ஷி ண நமஸ்காரங்கள் செய்து விதிப்பிரகாரம் பூஜித்து ஸ்ரீபக வானுடைய கர்ப்பகிருகத்திலிருக்கும் அந்த கண்டகீசிலா ஸமூகத்தையும் ஜம்புவிருக்ஷத்தையும் அதின்மூலத்தில் விள

ங்கும் மஹாலிங்கத்தையும் நன்குதர்சனம்பண்ணி சோணு க்ஷனைப்பார்த்து சேரபாண்டியன் முதலான பூபதிகள் ஹே சோளநரபதே! நீர்தான் தன்யர், உம்முடைய புண்யத்திற்கு அளவில்லை. உமக்கு உமாகாந்தர் உபாயம் சொன்னார். ஹே ராஜனே! ஜம்புநாதபாதாரவிந்தங்களில் பதிந்த சித்தத்தை யுடையவரே! ஹே மஹாப்பிரபோ! உமக்குஸமானமான சிவபக்தசிரோமணி உலகிலில்லை என்று தீர்மானித்து நாங் கள் சீக்கிரமாக உம்முடைய ஸந்நிதியை யடைந்தோம். நாங்கள் சிவகைங்கர்யம் செய்யவேண்டுமென்று வந்திருக்கி ரேும். ஆகையால் கிருபையுடன் எங்களுக்கு ஸகாயம் செ ய்யவேண்டுமென்றும் நாமெல்லோரும் சேர்ந்து இந்தக்ஷே த்திரத்திலேயே சிவகைங்கர்யம் செய்வோம் என்றும் அறி வித்தார்கள். பின்னும் ஜம்புகேசுவாருக்கு கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு இந்நான்கு திக்குகளிலும் சிறந்த ஒருபிரா காரம் ஏற்படவேண்டும். அதை நமக்குள் விபாகம் செய்து கொண்டு ஒவ்வொரு திக்கிற்கு ஒவ்வொருவராகக்கட்டுவோ ம். பர்வதப் பிரதேசங்களிலிருந்து சக்கரயந்திரங்களால் வே ண்டிய கருங்கல்லுகளைக் கொண்டுவந்து சிறந்த சிற்பிகளால் வேலை செய்யவேண்டும் என்று அவரவரும் தம் தம் மந்திரி களிடமும் ஆலோசித்து ஒவ்வொருவரும் ஸ்ரீசந்திரமௌளி யை அர்ச்சித்துத்துதிக்க ஆரம்பித்தார்கள்.

சோணுக்ஷசோளன் ஸகல வைரிகளையும் நாசம் பண் ணக்கூடிய பாச ஆயுதத்தால் விளங்குகிறவரும் சந்திரகலை கங்கை இவைகளைச் சிரஸில் தரிப்பவரும் லக்ஷ்மீபதியால் வந்தனம் செய்யப்பட்ட சரணங்களையுடையவரும் ஸர்ப்பங் களை ஹாரமாகவுடையவரும் அக்கினியை நேத்திரமாகக் கொண்டவருமான ஹே ஜம்புநாத! எனக்குப் பிரஸாதம்பண் ணும். சோன்: ஸகலலோகங்களுக்கும் நாதராயும் கருணைக் கிருப்பிடமாயும் ஏழைகளை ரக்ஷிப்பவரும் சந்திரனை பூஷண மாகவுடையவரும் தேவதைகளுக்கெல்லாம் ஆதியாயும்

மூன்று நேத்திரங்களுடன் கூடியவருமான ஹே ஜம்புநாத! இயற்கையில் விளங்கும் கருணையால் என்னைப்பார்நுகாரும். என்று போற்றினர் பாண்டியன். ஸகல ஜனங்களுக்கும் ஈசனும் தேவதைகளுக்குள் சிறந்தவராயும் ஸ்ரீஜம்பூகேக்ஷத்திரநாயகரான ஹே பிரபோ! சீக்கிரமாக என்னைப்பார்த்துக் கருணையுடன்கூடிய உமது கடாக்ஷப்பிரவாகத்திற்குப் பாத்திரனுகச்செய்யும். பார்வதீபதியான ஹே சம்போ! எப்பொழுதும் உமது பாதாரவிந்தங்களில் என்மனமானது புதைந்திருக்கின்றது. எனக்கு துக்கமேற்படாமல் ஸந்தோஷத்தையுண்டுபண்ணும் என்று துதித்தான். விக்ரமன்: ஸ்ரீபார்வதியினுடைய முகமாகிற கமலத்திற்கு சூர்யன்போல் பிரகாசிப்பவரும் அக்னி அர்க்கன் சந்திரன் இவர்களால் விளங்கும் மூன்று நேத்திரங்களையுடையவரும் ஸகலபூதங்களுக்கும் அதிபதியாயும் ஜம்புகேசராயுமிருக்கும் ஹே பரமேசுவர! உம்முடைய கருணைக்குப்பாத்திரனுக இருக்கும் எனக்கு அனுக்கிரம் செய்யவேண்டும் என்று ஸ்தோத்திரம் செய்தான். ஸூதர்: இவ்விதம் நான்கு பூபதிகளும் ஈசுவரனை ஸ்தோத்திரம் பண்ணினர்கள். உடனே ஜம்புநாதருடைய வாக்கானது ஆகாயவாணிரூபமாக இவ்விதமுண்டாயிற்று. ஹே அரசர்களே! நீங்கள் எனக்குப்பிராகாரம் கட்டவேண்டாம். நானே செய்துகொள்ளுகிறேன். எனக்கு முந்தியும் தேவியினுடைய ஸந்நிதியிலும் பக்கங்களிலும் பிராஸாதம் கோபுரம் மண்டபம் அழகான ஆலயம் இவைகளை நிர்மாணம் செய்யுங்கள். தடாகங்களுக்கும் அவைகளுக்குவேண்டிய பிராகாரம் படித்துறை மண்டபம் முதலியவைகளையும் நீங்களே கட்டுங்கள். விபூதிப்பிராகாரம் ஒன்றைமாத்திரம் சிறந்த சில்பிகளாலும் வெண்மையாயும் கெட்டியாயிமிருக்கும் கற்களாலும் என்னிடமிருக்கும் கணங்களைக்கொண்டு நான் கட்டும்படி செய்கிறேன். இதைத்தவிர இதர கார்யங்களை நடத்துவதில் நீங்கள் ஸமர்த்தர்கள் என்பதிலய்யமில்லை.



அகிலாண்டேச்வரி அம்மன் கோவில் விமானம்

ஆகையால் என் உத்திரவுப்படி செய்யுங்கள், என்று ஏற்பட்ட பகவானுடைய ஆக்ஞையைக்கேட்டு மிகுந்தஸந்தோஷத்தையடைந்த அவர்கள் மிகவும் உயர்ந்த கற்களாலும் தேவியினுடையவும் ஈசனுடையவும் மண்டபம் முதலியவைகளையும் ஸரஸ்களுக்குப் படித்துறை முதலியவைகளையும் சிரேஷ்டமாக நிர்மாணம் செய்தார்கள்.

ஸ்ரீ சங்கரரும் மலைப்பிரதேசங்களிலிருக்கும் கல்பரீக்ஷை நன்ருய் அறிந்தவர்களான சிரேஷ்டமான சில்பிகளால் சிறந்த கற்களைக்கொண்டு வரும்படிசெய்து பூமியையும் ஆழமாகப் பாதாளம்வரையில் பறித்து கீழிருந்து திடமாகப் பிராகாரத்தைக் கட்டும்படி செய்தார். ஒவ்வொருநாளும் வேலையாட்கள் ஸாயங்காலம் வேலையை நிறுத்திவிட்டு வீடு செல்லும் ஸமயத்தில் அதிககாந்தியுடன் கூடிய பாதுகைகளால் விளங்கும் பாதங்களையுடையவரும் பிராகாரம் கட்டுகிறவிடத்தில் பூமியில் ஸஞ்சாரம் செய்கிறவருமான ஸ்ரீ ஜம்புநாதரான பகவான் விபூதியை உள்ளுக்குள் வைத்துக் கட்டப்பட்டு ஒரேமாதிரியாகவிருக்கும் பொட்லங்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் பொட்லம் வீதமாகச் சம்பளத்திற்காகக் கொடுத்தார். இதைப்பெற்றுக்கொண்ட சில்பிகளும் மண் தூக்கின ஆள்களும் சில்லரைவேலை செய்கிறவர்களும் கடைத்தெருவிற்குப்போய் அவரவர்களும் தங்களிடமிருக்கும் பொட்லங்களைப் பிரித்துப்பார்க்கும் ஸமயத்தில் அவரவர்களும் தாங்கள் செய்த வேலைக்கு உசிதமான குறைவில்லாத சம்பளம் அதிலிருக்கக்கண்டு ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு ஸந்தோஷப்படுகிறதைப் பார்க்கும் இதரர்களான துவிஜர்களும் ஆச்சரியப்பட்டார்கள். இந்தப்பிரகாரம் பரமேசுவரரே நேரில்வந்து வேலையாட்களுக்குத் தன் கையால் கொடுக்கப்பட்ட விபூதியையுடைய விபூதி என்று பெயர் பெற்ற பிராகாரத்தை அதாவது விபூதிப்பிராகாரம் என்று இப்பொழுது பிரஸித்தமாய் விளங்கும் பிராகாரத்தை

நிர்மாணம் செய்யும்படி செய்தார். இந்தப் பிராகாரத்தை எவன் கையினுல் பிரதிக்ஷிணம் செய்கிறுனே அவன் ஒரு அச்வமேதயாகம் செய்தபலனையடைகிறுன். அங்கப்பிரதக்ஷிணத்தால் எவன் பிரதக்ஷிணம் செய்கிறுனே அவனுக்கு மறுபிறப்பில்லை. மிகவும் புண்யகாலமான பிரதோஷஸமயத்திலும், பர்வகாலங்களிலும் இங்கு செய்யும் தானம் கோடிப்பங்கு அதிகமாகும். ஒரு ரூபாய் ஒருவருக்குக்கொடுத்தால் கோடிரூபாய் தானம் பண்ணினதால் ஏற்படும் பலன் கிடைக்கும். இங்கு செய்யும் காரியங்களுக்குப் புண்யகாலமென்பதுகூட வேண்டியதில்லை. எப்பொழுதும் செய்யலாம். இந்த பலன் உண்டு பிராமணர்களின்பொருட்டு ஆஜ்யத்துடன் போஜனம் போட்டால் அது ஸாக்ஷாத் சங்கருக்கு மகா மேருப்பிரமாணம் அன்னமிட்டதாகும். தானம் செய்தவன் முடிவில் கைலாஸத்தையடைந்து ஸுகமாகவஸிக்கிறுன். ஆயிரம் சிரஸால் பூமியைவகிக்கும் ஆதிசேஷரால் கூட விபூதிப் பிரகாரத்தின் மகிமையைக் கூறவியலாது. விபூதிப் பிராகாரத்தைப் பிரதக்ஷிணம் செய்யும் மனுஷ்யனை பிர்ம்மா முதலான தேவர்களும் எப்பொழுதும் ஸந்தோஷத்துடன் கிலாகிக்கிறுர்கள். ஆகையால் இந்தப் பிராகாரத்தைக் கட்ட உபக்கிரமித்தானது பூலோகத்திற்கு விசேஷமான மஹிமையைக் கொடுக்கின்றது. எவன் பக்தியால் ஒருதடவை விபூதிப் பிராகாரத்தைப் பிரதக்ஷிணம் செய்கிறுனே அவனுக்கு ஸகலகார்யங்களும் ஸித்திக்கின்றன. இதில் ஸந்தேகம்வேண்டாம். இதைப் பிரதக்ஷிணம் பண்ணவேணுமென்று பிறனுக்கு எவன் இதின் மகிமையைச் சொல்லிப் பிரதக்ஷிணம் செய்யச் சொல்லுகிறுனே ஸகல இஷ்டங்களையும் கொடுக்கிறவரான விச்வேசுவரர் அவனிடம் ஸந்தோஷப்படுகிறுர். எவன் இந்தப்பிராகாரத்தை நித்யமாகப் பிரதக்ஷிணம் செய்கிறுனே அவனுக்கு ஸம்ஸாரத்தில் மறுபடியும் ஜனனம் கிடையாது. எவனெவன் எந்தெந்தக் காரியங்களையுத்தேசித்து இதைப்

பிரதக்ஷிணம் செய்கிறானோ அவனவன் அந்தர்தக்கார்யஸித்தியையடைகிறான், ஸத்யம், ஸத்யம், ஸம்சயமில்லை. புத்திரன் வேண்டுமென்று விருப்பங்கொண்டு பிரதக்ஷிணம் செய்தால் அதைபடைகிறான். தனம்வேண்டுமென்கிற ஆவ்லுடன் பிரதக்ஷிணம் பண்ணினால் அது கிடைக்கும். சரீர ஸௌக்கியம் பூமி முதலான எதையும் விபூதிப்பிராகாரப்பிரதக்ஷிணத்தால் அடையலாம். ஆகையால் மிகவும் பிரயாஸப்பட்டாகிலும் தான் பிரதக்ஷிணம் செய்தாலும் அல்லது பிறரைச் செய்யும்படி செய்தாலும் அவனுக்கு ஒவ்வொரு நாளும் ஐசுவர்யாபிவிருத்தி ஏற்படுகின்றது நிச்சயம். முன் ஆயிரக்கணக்கான ஜன்மங்களில் அதிகமாகப் புண்யம் செய்திருக்கிறவர்களுக்குத்தான் இந்தப் பிராகாரத்தைப் பிரதக்ஷிணம் செய்யவேண்டுமென்கிற புத்தியுண்டாகும். விபூதிப்பிராகாரத்தினுடைய மகிமையானது பாபங்களைப்போக்கும். தர்மானுஷ்டானத்தில் சிரத்தையையுண்டுபண்ணும். ஆகையால் இதை எல்லா ஜனங்களையும் கேட்கும்படி செய்ய வேண்டும். அதனால் ஸகல இஷ்டங்களும் ஸித்திக்கும். எவன் பூதிப்பிராகாரத்தினுடைய மாஹாத்மியத்தைக் கேட்கவேண்டுமென்று இச்சிக்கின்றானோ அவனும் சிவனுக்கு வாஸஸ்தானமான கைலாஸத்தையடைகிறானென்றால் சிரவணம் செய்கிறவனுக்கு கூறவும் வேண்டுமோ. இந்தப் பிரகாரம் அந்த அரசர்கள் ஸ்ரீ.சங்கராருக்குச் சிறந்த கைங்கர்யங்களைச் செய்து கணங்களாக ஆனார்கள். இவ்வித மஹிமை பெற்ற கஜாரண்யேசுவராருடைய பிரபாவத்தைக் கேட்கிற மனிதன் எவ்வித பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். சிவனுடைய தர்சனத்தால் ஸகல புண்யங்களையும் அடைகிறார்கள். சோணசூடசோளராஜனும் கர்ப்பகிரகத்தில் மத்ஸ்யத்தால் அடையாளம் பண்ணப்பட்ட பரமசிவனுடைய முத்திரையை நிர்மாணம் பண்ணியிருக்கிறான்.

இருபத்திநான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் 25.

शिवार्चकाः पञ्चविंशे शोणाक्षेण निवेशिताः ।
पण्डितामज्जितास्तीर्थे कावेर्यां शंभुना भृशम् ॥

சோணாக்ஷன் என்கிற சோளராஜாவால் சிவபூஜைக்காக ஏற்படுத்தப்பட்டிருந்த பண்டிதர்கள் காவேரியின் பிரவாகத்தில் சம்புவால் முழுகும்படிசெய்யப்பட்டார்கள் என்று இந்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றது.

ஸூதர்: ஹே மஹரிஷிகளே! சிவார்ச்சக ஜனங்களுடைய நிலைமையைக்கூறுகின்றேன் கேளுங்கள். என்று சொல்லத்தொடங்கினார். சோணாக்ஷனென்கிற சோளபூபதியால் கேதாரம் காசி காஞ்சி முதலான விடங்களிலிருந்து அறுபது சிவார்ச்சகபண்டிதர்கள் அழைத்துக்கொண்டுவரப்பட்டார்கள். அவர்கள் வேதம் ஆகமம் புராணம் முதலியவைகளில் பண்டிதர்களாயும் சிவபூஜை செய்யும் விஷயத்தில் சிறந்த ஸாமர்த்தியம் பொருந்தியவர்களாயுமிருந்தார்கள். அவர்கள் வந்தவுடன் சோளன் அவர்களுக்கு பசு தனம் வஸ்திரம் முதலானவைகளைக்கொடுத்து நமஸ்கரித்துப்பின்வருமாறு பிரார்த்திக்கின்றான். ஹே பிராமணர்களே ! நீங்கள் என்வசனத்தை அங்கீகரித்து ஸ்ரீஜம்புகேசுவரான தேவரையும் அகிலாண்டேசுவரீ என்கிற ஸ்ரீ பார்வதியையும் விதிப்படி பூஜைசெய்யுங்கள். ஆறுகாலம் நடக்கவேண்டும். பிரதோஷ ஸோமவாரம் இந்தப்புண்யதினங்களில் உத்ஸவம் செய்பவேண்டும். மேலும் சிவராத்திரி ஸங்கிராந்தி அயனம் இந்தகாலங்களில் சந்திரசேகரையும் கௌரீதேவியையும் விசேஷமாகப் பூஜிக்கவேண்டும் என்றுசொல்லி அவர்களுக்கு வீடு பூமி தனம் தான்யம் முதலானவைகளைக்கொடுத்து வேண்டிய ஸௌகர்யங்களை

யும் செய்துவைத்தான். அவர்களும் அரசனுல் கொடுக்கப்ப ட்டவைகளைப் பெற்றுக்கொண்டு ஸகல ஆகமங்களிலும் அதிகமான பாண்டித்தியம்இருந்தபடியால் பண்டிதர்கள் என்று பெயரையுமடைந்தார்கள். இவ்விதம் சோளுக்ஷனுல் ஸ்தாபிக்கப்பட்ட அறுபது பண்டிதர்களும் ஜம்புகேசுவா ருடைய பூஜையையும் அகிலாண்டேசுவரியின் பூஜையை யும் மற்றுமுள்ள தேவதைகளையும் நன்கு ஆராதனம் செ ய்துவந்தார்கள். அவர்கள் சாஸ்திரங்களையறிந்தவர்களும் தர்மத்தில் அபிமானமுள்ளவர்களாயுமிருந்தபடியால் ருதுக் கள் அயனங்கள் மாஸங்கள் மற்றுமுள்ள விசேஷபுண்ய காலங்கள் இவைகளில் தவருமல் எப்பொழுதும் பக்தி யுடன் பூஜித்துவந்தார்கள். இவ்விதம் நடந்துவரும் ஸம யத்தில் ஒருநாள் இவ்விடத்தில் பூஜைக்காக ஒருபா லனையும் ஸ்திரீகளையும் வைத்துவிட்டு பாக்கியுள்ள புரு ஷர்கள் எல்லோரும் பிக்ஷாடநேசர் கும்பாபிஷேகத் திற்காகச் செல்லும்பொழுது உத்திரகாவேரியில் பிரவாஹ ம் அதிகமாயிருந்தபடியால் ஓடத்தில்போனுர்கள். போகும் பொழுது பிரவாஹத்தினுடைய வேகத்தால் அலைகளாகிற கைகளால் அடிக்கப்பட்டு அந்தஓடம் கவிழ்ந்தது. உடனே அதிலிருந்த பண்டிதர்கள் யாவரும் பிரவாஹத்திற்கு இரை யாய்விட்டார்கள். இந்தப்பிரகாரம் ஜம்புநாதர் அவர்களை நதி யில்விட்டு பாக்கியாயிருக்கும் அந்த பாலகனைப்பார்த்துவிட் டு அனுக்கிரகம்செய்து அவனைச்சிறந்த பண்டிதனுகச் செய் தார். அந்த வம்சத்திலுண்டானவர்கள் தான்மஹேசுவரரைப் பூஜிக்கிருர்கள். பிராணிகளுக்கு ஏற்பட்ட ஸம்ஸாரபந்தத் தை நிவர்த்திசெய்கிறவராயும் வியாபகராயும் ஜம்புவென்கிற புண்ய விருக்ஷத்தின் மூலத்திலிருக்கும் தன் கர்ப்பகிருகத் தில் வஸிப்பவரும் மிருடானீபதியாயுமிருக்கும் எந்த தே வர் சோளமன்னனைத்தவிர பாக்கியுள்ளவர்களை தன்னுடைய திருஷ்டியின் அனுக்கிரகவிசேஷத்தால் எப்பொழுதும் விளங்

கும் பரிசுத்தமான கணங்களாகச்செய்தாரோ அவ்வித சக்திபொருந்திய மூவுலகங்களையும் பாதுகாப்பதில் தீக்ஷை பூண்டிருக்கும் ஜம்புநாதர் நம்மை ரக்ஷிக்கட்டும். எவர் ஸகல வேதங்களுடைய அந்தமான உபநிடதங்களில் பிரியமுள்ளவரோ எவர் சந்திரகலையைத்தரிக்கிறாரோ எந்த தேவியானவள் அகிலாண்டகோடிகளையும் ஸிருஷ்டிப்பதில் அதிகமான சக்திபொருந்தியவளோ இவ்விருவர்களுடைய பாதாரவிந்தங்களைப் பூஜைசெய்கிறவர்கள் தனம் தான்யம் கிருகம் இவைகளுடன் கூடினவர்களாகவிருக்கிறார்களோ அந்த ஜம்புநாதர் அவர் பத்நீ இவர்களுடைய விஸ்தாரமான மஹிமையின் லேசமானது நமக்கு புத்திரமித்திர களத்ரபசு முதலான ஐசுவர்யங்களைக்கொடுத்து அனுக்கிரகிக்கட்டும்.

இருப்பத்திஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 26.

पञ्चप्राकारमाहात्म्यं देवदेव्योस्तथैव च ।
व्यक्तरूपं च कथितं षड्विंशे ब्राह्मसुत्सवम् ॥

பஞ்சப்பிரகார மாஹாத்மியம் ஜம்புநாதர் அவர்தேவி இவர்களுடையரூபம் மாறுதல் பிர்ம்மோத்ஸவம் இவைகள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன.

முனிகள்: ஸகல சாஸ்திரங்களிலும் பிரஸித்தராயும் முனிகளுக்குள் சிறந்தவராயும் விளங்கும் ஹே ஸூதமஹரிஷியே! பிர்ம்மாவால் தபஸ் செய்யப்பட்டு ஈசுவரனும் பிரஸாதம செய்திருக்கிறார் என்று சொன்னீர்கள். எதற்காக பிர்ம்மா தவம்செய்தார். அவருக்கு என்னதோ

ஷம் ஏற்பட்டது. இந்த விஷயத்தை விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறோம். தயவுசெய்து தாங்கள் சொல்லவேண்டுமென்றுபிரார்த்திக்கும் மஹரிஷிகளுக்கு ஸூதர்கூறுகின்றார். ஜயிக்கபட்ட இந்திரியங்களையுடைய ஹே ரிஷிகளே! உங்களுடைய பக்தியையும் ஸித்தியையும் பார்க்க மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது. சம்புவினுடைய சரித்திரத்தைச்செப்புகின்றேன்; கவனத்துடன் கேட்கவேண்டும். முன்னொருஸமயம் ஸகல ஜகத்திற்கும் சிருஷ்டிகர்த்தாவும் திரிபுராஸுரர்களுக்குச் சத்துருவாயும் விளங்கும் பகவான் பரமேசுவரர் நந்திகேசருக்கு இந்தக்கதையைச்சொன்னார். இது மிகவும் பரிசுத்தமானது. சந்திரசூடர்: ஹே நந்தின்! பிர்ம்மாவினுடைய மஹத்தான சரிதத்தைக்கூறுகின்றேன். கேள்: என்றுசொல்லுகின்றார், ஆதியில் பிர்ம்மாவானவர் முனிகணங்களோடும் இந்திரன் முதலானதேவக்கூட்டங்களோடும் கூடினவராய் ஆஸனத்திலிருந்துகொண்டு பலவிதங்களான தர்மங்களைப் பற்றித்துதித்துப்பேசினார். இந்த வியவகாரம் நடந்துகொண்டிருக்கும் மத்தியில் பிர்ம்மா என்னைத்தவிர உலகில் சுத்தமான அபிப்பிராயமுடையவர் ஒருவருமில்லை என்று சிந்தித்துக்கொண்டு லோகங்களைசிருஷ்டிசெய்தார். அந்தஸமயத்தில் ஒருஸ்திரீயும் சிருஷ்டிக்கப்பட்டாள் அழகுடன்கூடிய அந்தஸ்திரீயைப்பார்த்து சிவனுடையமாயையால் சதுர்முகன் மோகத்தையடைந்தான். தேவதைகளுக்கெல்லாம் சிரேஷ்டரான பிர்ம்மா அந்தஸ்திரீயுடன் லஜ்ஜையைவிட்டு ஸந்தோஷமாக போகத்தையனுபவித்தார். இதினாலுண்டான அதிகமான பாபத்தால்அவரால் சிருஷ்டிக்கப்பட்ட ஸகலப்பிரஜைகளும் சிருஷ்டிகாலத்திலே அற்பாயுஸ்ஸையுடையவர்களாக ஆய்விட்டார்கள். அவருக்கும் பிற்பாடு பயமுண்டாயிற்று. சிருஷ்டிசக்தியும் குன்றிவிட்டது. இந்தக் கெட்டகாரியத்தாலேற்பட்ட அபமிருத்யுவால் இளப்பிவி

டப்பட்டவராய் பித்தன்போல் ஸஞ்சாரம்செய்துகொண்டு பாபநிவிருத்தியின் பொருட்டு பூமியிலுள்ள ஸகலக்ஷேத்திரங்களிலும் ஸஞ்சரித்துப் புண்யதீர்த்தங்களில் ஸ்நாநம்செய்து நித்யராய்விளங்கும் உமேசரைப் பூஜித்துவரும்பொழுது இந்த கஜாரண்யத்தையடைந்து உத்தமமான ஞானத்தைப் பெற்றார். அதிக தைர்யத்துடன் குரோமானதவத்தை இங்குசெய்ய ஆரம்பித்தார். இந்தஸமயத்தில் சம்பு இவருடைய கடுமையான தவத்தைப்றிந்து ஸ்ரீபார்வதிதேவியிடம் பின்வரும் வசனத்தைக்கூறினர் ஹே கல்யாணி! பிர்ம்மாவினல் தபஸ்செய்யப்படுகின்றது என்பதை நீ அறிகிருயோ. அவருடைய அந்தச்சிறந்த கர்மாவால் நான் ஸந்தோஷப்படுகிறேன், ஆகையால் உன்னோடுகூடப்போகவேண்டும். உன்னுடையரூபத்தை எனக்குக்கொடுக்கவேண்டும். என்னுடைய பக்தனுன ஹிரண்யகர்ப்பன் சிருஷ்டிசக்திவேண்டுமென்று யாசிக்கிருன் என்று கூறும் பதியிடம் பிர்ம்மாவிற்கு வரன்கொடுக்கிறவரையில் தாங்கள் கேட்ட ரூபத்தைக்கொடுக்கிறேன் என்று சொல்லும் கௌரியினிடமிருந்து சக்தியைகிரகித்துக்கொண்டு தன்ரூபத்தை அவளுக்குக்கொடுத்து சக்திரூபியான ஜகதீசுவரர் அவளுடன் கூடப்புறப்பட்டு பிர்ம்மாவிடம் வந்து ஹே பிர்ம்மன்! நீர் சிருஷ்டிகர்த்தாவல்லவா? உம்முடைய தபஸால் நான் ஸந்தோஷமடைந்தவனுக ஆகின்றேன். அதிகமான தேஜஸ்ஸுடன் கூடியவரும் பாபமற்றவருமான ஹே சதுர்முக! உமக்கு வரன்கொடுப்பதற்காக நானிங்கு வந்திருக்கிறேன் என்று சொன்னர். இதைக்கேட்டு கமலத்திலுதித்தவர் பகவானைத் தர்சித்து ஸந்தோஷத்துடன் பஞ்சாவரண மார்க்கத்தால் விருஷபத்வஜரான தேவரைப்பூஜித்தார். பிறகு, ஸகலபயத்தையும் போக்கும் சக்தி பொருந்திய சிருஷ்டிசக்தியை அனுக்கிரகிக்கவேண்டுமென்று யாசித்தார். உடனே பசுபதியான சங்கரர் அவருக்குச் சிறந்ததான அந்த வரத்தைக்கொடுத்து

அந்த இடத்திலிருந்தும் தேவியுடன் கூடப்பிரபு மறைந்தார். உடனே பிர்ம்மா தேவஸமூகங்களோடுகூட அமிருதரூபியான ஸ்ரீபரமேசுவரருக்கு இருபத்தேழு நாளில் பூர்த்தியாகக்கூடிய உத்ஸவத்தை ஆரம்பித்தார். கும்பமாஸத்தில் சந்திரன் மிருகசிர்ஷத்திலிருக்கும் பொழுது ஆரம்பித்து பால்குனமாஸத்தில் ரோகிணீ நக்ஷத்திரத்தில் அவபிருதத்தையும் செய்து சண்டிகேசர் முதலானவர்களுக்கும் பத்து நாள் மகோத்ஸவத்தையும் நடத்தினார். எந்த ரூபத்தால் ஈசன் பிர்ம்மாவுக்கு வரதானம் செய்தாரோ அந்த சக்திரூபமாகவே பரமேசுவரருக்கு பிர்ம்மா ஸகல தேவதைகளுடன்கூட தல் நாள் உத்ஸவத்தை நடத்தினார்.

இவ்விதம் அதிக பக்திசிரத்தையுடன் சதுர்முகர் ஸ்ரீகஜாரண்யேசுவரருக்குச் சிறப்பாக உத்ஸவத்தை நடத்தி பகவானுடைய பிரஸாதத்தைப் பெற்று ஸந்தோஷத்துடன் தன் லோகத்தை யடைந்தார். இப்பொழுதும் நடக்கும் இந்த உத்ஸவஸமயத்தில் எவர்கள் சக்திரூபத்தை தரித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீஜம்புநாதரையும் அவர் பத்தினியான அகிலாண்டநாயகியையும் ஸேவிக்கிறார்களோ அவர்கள் சிவகணங்களால் ஸேவிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு அதிக ஸந்தோஷத்துடன் உத்தமமான என்றுமழிவில்லாத ஸ்தானத்தை யடைந்து பரமானந்தத்துடன் ஸுகமாக வஸித்துக் கொண்டிருப்பார்கள். சுபம்.

ஸ்ரீஅகிலாண்டேசுவரியுடன் கூடிய ஸ்ரீஜம்புநாதருடைய பாதாரவிந்தங்களில் வந்தனம் செய்து இந்த அத்தியாயம் கிரந்தம் இரண்டையும் இத்துடன் பூர்ணமாகச் செய்து கொள்ளுகிறோம். சுபம். சுபம். சுபம்.

ஸ்ரீகஜாரண்யக்ஷேத்திரமாஹாத்மியம் முற்றிற்று.